உ

சிவமயம்.

ஓம் பரப் பிரஹ்மணே நம:

தாந்திரிக த்வைத சைவ கண்டநம்.

# (சூட்டுக்கோல் - கட்டாரி - புச்சம்.)



ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் மாணாக்கர் உபய

பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசாரியர் பர சமய

பஞ்சாநநர் - (பர சமய கோளரியார்) மண்டலேசுவரர்.

திருப் பூவண மடாதிபதி,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்.**

விலை ரூபா ஒன்று.

உ

சிவமயம்.

ஸ்ரீ சங்கராசாரிய குருப்யோ நமஃ.

வேதபாஹ்ய பாசுபத தாந்திரிக

துவித சைவ துர்வாதியாகிய

காரைக்குடி

ஸ்ரீமத் ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரின்

# தாஷ்டிக நாவுக்கோர்

# சூட்டுக்கோல்.

முதற் பாகம்.

இது

கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ வீரசேகரஞானதேசிக சுவாமிகளின்

பாதசேகரரும்

உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசாரியரும்

ஆகிய

ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளவர்களால்

தீட்டப்பெற்று

சென்னை, கோமளேசுவரன்பேட்டை

சச்சிதானந்த அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1918.

உ

கணபதி துணை.

சற்குருப்யோ நம:

# முகவுரை.

## வாயுறை வாழ்த்து.

" யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. "

மதியிற் சிறந்த முதியோர்களே!

தென்பாண்டி நாட்டிலே, காரைக்குடியிலே, தனவணிகர் குலத்திலே உற்பவித்துப் பூர்வபுண்ணிய விசேடத்தாலே கல்வியறிவு சிறிதுபெற்றும், அதுகொண்டு யாக்கை நிலையாமை, செல்வநிலையாமை, இளமைநிலையாமை முதலியவற்றைத் தன்னநுபவத்திற் கண்ணாரக்கண்டு, அன்பு, அருள், அடக்கம், வாய்மை, பொறையுடைமை, இன்சொல் முதலிய உத்தம குணங்களைக் கைக்கொண்டு, இக்கணமிருந்த இம்மெய்யென்ற பொய்க்கூட்டைத் தெக்கணத்திருந்து தீக்கணத்தான் வந்து பொக்கெனக் கொண்டுபோவதற்கு முன்னமே, தமது உபாசனா குருமூர்த்தி கூறியவுண்மைநிலையிலே யுறைத்துநின்று, முக்கரண சுத்தியுடன் செக்கர்மேனியெம் நக்கனை முக்கணையனை, முழுவன்புடன் முறைதவறாது வழிபட்டு, இஷ்டசித்திகளைப்பெற்று, இடையறா வின்புற்று, எல்லோருக்கும் உபகாரியாய் வாழக்கருதாமல், சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப் பற்கழன்று பண்டம் பழிக்கப்படுமளவும் "மனைவி மக்கள் நித்தியம், மாடமாளிகை நித்தியம், கனவுலகம் நித்தியம், மற்றுங்காணப்படும் பிரபஞ்ச மெல்லாஞ் சத்தியம், இவற்றுடன் கூடியநுபவிக்கும் போகமும் நித்தியம்" என்று மற்கடப்பிடிபோல், இறுகப்பிடித்துறைத்து நின்று இறுமாப்புற்றுத் தமது மதத்திற்கு முக்கிய குருமார்களாய்ச் சிரசாவகிக்குந் தீக்ஷிதர்களையும், மற்றைய மதத்திற்குரிய தேசிகர்களையும், புறக்கணித்திகழ்ந்து, ஒரு நெறியிலேனு முறைத்து நில்லாமல் இடையூசலாடிக்

சமயவழக்கு, சாத்திரவழக்கு, சாதிவழக்கு, பாஷைவழக்கு முதலிய இழுக்குநெறிகளிற் றமது முழுமனத்தையு மழுக்கி, அவமே காலங்கழித்து, வயோதிகப்பருவமுற்று விளங்கும் ஸ்ரீ ராம. சொ. சோக்கலிங்கச் செட்டியாரென்பார், எண்ணிலாக் கற்பனைகணிரம்பிய சிற்சில புராணங்களையும், "உண்மை நாயன்மார் மகிமை", "சிவசுந்தரசாயாரூப சிவமகிமா சங்கிரகம்" முதலிய சிற்சில சிறுநூல்களையும், தாமிற்றைநாள்வரையிற் கற்ற கல்வியின் பயனாகவியற்றி யச்சிட்டு வெளியிடுவாராயினர்.

அவற்றுள், "உண்மைநாயன்மார் மகிமை" என்ற சிறுநூலை உதாரணமாக வெடுத்துக்கொள்வாம். நாயன்மார்களது மகிமையை யாவரறிவார்? "அடியார் பெருமையும் அருமையு நாளும் அறியம்பலவாணர்" என்றமுதியோர் மொழிப்படி, அகண்டைகரசமாய் விளங்கும் பரமசிவமே யறியவல்லவராவர். அவ்வாறிருக்க, தாம்முற்றுமுணர்ந்த முனிவர் போற் கருதித் தலைமுடிசூடிக்கொண்ட பெயருக்கியையாமல் வரைந்த அது, "மற்றொன்று விரித்தல்" என்னுங் குற்றத்திற்கிலக்காய், வேதாந்ததூடணம், விஷ்ணுதூடணம், முதலிய பரதூடணங்களையே பூடணமாகப் பூண்டு, "பெற்றம்புலியின்றோல் போர்த்துமேய்ந்தற்று" என்ற பொய்யாமொழிக்கிணங்க விளங்குகின்றதால், அறிஞர்கள் பலராலும் அருவருத்தொதுக்குற்றுத் துரும்பெனத் தூற்றப்படத்தக்கதாயிற்று.

என்னை? தமது மதாசாரியராகிய நால்வர், பற்பலவற்புதங்கொண்டு, மதசித்தாந்தம் பண்ணியகாலத்திலே, "சமணரை வாதிட்டு வென்றார். பௌத்தரை வாதிட்டு வென்றார்" என இவ்வகை காணப்படுகின்றனவே யன்றி, எங்கேனும் "வேதாந்திகளை வாதிட்டு வென்றார்" என்று பெரியபுராண முதலிய தமக்குரிய புராணங்களிற் காணப்படுகின்றனவா? இல்லையே! இல்லையே!!

அஃதவ்வாறாக, "சிற்றுணர்ந்தோ ரென்றுஞ் சிலுசிலுப்பரே, முற்றுணர்ந்தோ ரொன்று மொழியாரே" என்ற நீதிமொழிக்கிணங்கத் தமது சமயாசாரியர்களாகிய நால்வர்களைப் பார்க்கிலும், தாம் நுண்ணிய மதிப்புண்ணியர்போ லவலமா யெண்ணி,

"ஓ! விஷ்ணு மதத்தர்களே! உங்கள் மதத்திற்குரிய கடவுளாகிய விஷ்ணுமூர்த்தி, நம்போன்ற சீவர்களில் ஒருவர்;

ஆகையால் பசுவாகிய அவ்விஷ்ணுவைப் பூஜிப்பதை யறவே யொழித்து, நெற்றியிலுள்ள திருநாமத்தை யழித்துவிட்டு, விபூதி ருத்திராக்ஷ மணிந்துகொண்டு எமது சிவபெருமானை வழிபாடு செய்யுங்கள். திருமாலுக்கடிமை செய், தெய்வமிக மேல்'' என்ற ஔவைப்பிராட்டியாரின் அருள்வாக்கின் உண்மைக் கருத்துவேறு. அதனை யென்னுபதேசத்தாற் கேட்டுய்யுங்கள்.

ஓ! வேதவழியொழுகும் வேதியர்களே! உங்களுக்குரிய ஆரிய வேதத்தின் உண்மை யருத்தம் உங்களுக்குச் செவ்வனே விளங்கவில்லை. ஆரியமொழி வாசனையுமற்ற யானே, வேதாகம முபநிடத புராண விதிகாச முதலிய யாவற்றினும் பொதிந்துள்ள வுண்மைக் கருத்துக்களை யெல்லா முணர்ந்தவனுமேவேன்; ஆகையால் என்னுபதேசங்கேட்டு, அவ்வழியிலுறைத்து நில்லுங்கள்.

ஓ! வேதாந்திகளே! உங்கள் ஆசாரியராகிய சங்கராசாரியர், எங்களாசாரியராகிய நீலகண்ட சிவாசாரியரிடத்தில் சிவாகம வழித்தாய சிவதீக்ஷை பெற்றவர். அதனால், அவர் சைவசித்தாந்தியே. அவர் செய்துள்ள நூல்களிலும், அவற்றின் வழித்தாய வாசிட்டம், கைவல்ய நவநீதம், பகவற்கீதை, பிரமகீதை முதலிய யாவற்றிலும், சைவ நலங்களே பொதிந்துள்ளன. ஆகையால் அவைகள் யாவுஞ் சைவசித்தாந்த நூற்களே! அவற்றி னுண்மை யறியாது விளங்கிய அளவிறந்த உங்களது குருமார்கள் யாவரும் பொய்க்குருமார்களே; யானொருவனே மெய்க்குரு; என் சொற்களைக் கடைப்பிடித் தொழுகுங்கள். சனகராஜா சைவசித்தாந்தி. தத்துவராயர் சைவசித்தாந்தி. சிவப்பிரகாசர் சைவசித்தாந்தி. சிதம்பர சுவாமிகள் சைவசித்தாந்தி. அர்ச்சுனர் சைவசித்தாந்தி. அக்கண்ணபிரானும் சைவசித்தாந்தி. யாவருஞ் சைவசித்தாந்திகளே. பெண்டு மெய். பிள்ளை மெய். நாடுமெய். நகரம் மெய். இவற்றை யிறுகப்பிடித்து, இந்தப்பாழுஞ் சமுசார சாகரத்துள் ஆழ்ந்தாழ்ந்து என்போல் அவதியடையாமல், துறவாச்சிரமத்தை யடைந்து நீங்கள் துன்புறுவானேனன்? அந்தோ! நீங்கள் இது காறும் பிரபஞ்சம் பொய்யெனக்கருதிப் பெருமோசமடைந்தவர்களன்றோ? இனியேனும் என் மெய்யுபதேச மொழிவழி நில்லுங்கள்.

"ஓகைமட வாரல்கு லேபரம பதமவர்க ளுந்தியே யைகுந்தமே,லோங்குமுலை யேகயிலை யவர்குமுத வாயினித மூறலே யமிர்தமவர்தம், பாகனைய மொழியேநல் வேதவாக் கியமவர்கள் பார்வையே கருணை நோக்கம், பாங்கினவ ரோடுவிளை யாடவரு சுகமதே பரமசுக மாகுமிந்த, யூகமறியாமலே தேகமிக வாடினீர்கள்"

அந்தோ! பாவம்!! கானற்சலம்போலவும், கயிற்றரவு போலவும், கந்தருவநகரம்போலவும், கட்டையிற் கள்வன்போலவும், ககனாவிந்தம் போலவும், கனவுலகம்போலவும் விளங்கும் இப்பிரபஞ்சம் எக்காலத்தினுமழியாத நித்தியப்பொருளென இறுகப்பற்றிக் கொண்டுய்யுங்கள். சகத்மித்தையெனக்கூறும் வேதமுடிவான உபநிடதங்களின் கருத்துவேறு. அவற்றினுண்மை யெல்லாம் என் வாய்மொழிகொண்டுணருங்கள். உங்கள் குருமார்கள் அவைகளுக்கெல்லாந்தப்பருத்தம் பண்ணிப் பொய்ப்பொருள் கொண்டார்கள்.

ஓ! கோவிலூரில் வசிக்குஞ் சாதுக்களே! "நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றுய்ந்தடக்கிலென், பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்......" என்று எங்கள் சமயாசாரியரால் தோல்வியுற்ற சமணசாரியர்கள் கூறிய நெறியைக்கைக்கொண்டு,

"எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணறன் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பர் அரசே."

"அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருந்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப வருள்பெறு வாரே."

என்று எமது திருமந்திரமுதலிய பலகலைகள் கூறும் பற்பல பிரபல பிரமாணங்களை யெல்லாம் அப்பிரமாணங்களாகப் புறக்கணித்திழித்தொதுக்கி, உங்கள் குருமார்களது சமாதிகளை யெல்லாம் இடித்துத் தகர்த்து விளைநிலமாக்குங்கள். திருமந்திரம் முதலிய நூல்களின் உண்மைக்கருத்து வேறு. அது எனக்குத்தான் விளங்கும். இன்னும் உங்களாண்டவராகிய ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிகர் சைவசித்தாந்தியே. அவருக்குப் பின் வந்த ஸ்ரீ துறவு சுவாமிகள் முதலியயாவருஞ் சைவசித்தாந்திகளே.

ஸ்ரீ ஆண்டவர், யான் மேலே சைவசித்தாந்த நூல்களெனச் சுட்டிக்காட்டிய வாசிட்டங் கைவல்ய கீதாதிநூல்களைப் போதித்து வந்தாரேனும், அவர் போதனையின் உண்மைக்கருத்து வேறு. அந்த அந்தரங்கமெல்லாம்,

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே"

என்ற திருமந்திரத்திற்கிணங்க, இளமையிலேயே குருட்டுக்குருவையடைந்து, குருட்டுக்கல்விகற்று, குருட்டறிவுபெற்று, ஈழப்படுகுழியிலிறங்கி, ஈழக்குருக்கள் செய்த தீக்கைபெற்றுப், பராதாடணுமந்திரம் இடையறாது ஜெபிக்கக்கற்று விளங்கும் யானொருவனே யறியவல்லவனாவேன். அவற்றைக்கேட்டு என் வழி யொழுகியேமாப்புறுங்கள்.

ஓ! வேத சிவாகமவழியொழுகும் "தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்" என்று திருவாரூர்த் தியாகேசப்பெருமான் திருவாக்காற் புகழ்ந்துரைக்கப்பட்ட, பலவித மகிமைவாய்ந்த சிதம்பரத் தீக்ஷிதர்களே! உங்களுக்குச் சிவபூஜாவழி செவ்வனே தெரியவில்லை. ஆகமவழிக்குமாறாய் நடக்கிறீர்கள். யானே அவ்வாகமங்களி னுண்மையை விளக்க உலகத்தில் அவதரித்திருக்கின்றேன். என்னுரைகேட்டு நீவிரனைவரும் குருட்டுக்கல்விகற்று, குருட்டறிவுபெற்று, ஈழத்தடிப்பைக்கொண்டு, குழிவழியறியாது யான்விழுந் கொடுநிரயக்குழியிலே ஒன்றுகூடி யென்மேல் விழுங்கள்."

என்றித்தகைய மாறுபட்ட மயக்குரைகளைப் போதிக்கவும், எழுதவும், அச்சியற்றவும், வெளிப்படுத்தவுந் தலைப்பட்டுச் சர்வஜன விரோதியாய் விளங்குபவ ராயினார்.

இதனைக் கண்ணுற்று, பிள்ளைகள் செய்யும் பிழைகளை யுணர்ந்து, அவர்களைச் சாம பேத தான தண்ட மாகிய சதுர்வித உபாயத்தாற் றண்டித்து, அறிவு கொளுத்தி நல்வழி நிறுத்துதல் பெற்றோர்களின் கடமையா மாறுபோல, இளமைப்பருவத்திலேயே சற்குருவையடுத்து, வித்தையை விதிப்படி பயின்று, பூரண தேர்ச்சியடைந்து துறவாச்சிரமத்தை யுற்றவரும், வடமொழி

தென்மொழியாகிய இருமொழிக் கடலையும் நிலைகண்டுணர்ந்த மகா விற்பனரும், நியாயச்சந்திரரும், வேதாந்தபாஸ்கரரும், ஆத்மபுராணம், பகவற்கீதை, நியாயமுக்தாவலி, கண்டன காத்தியம், ஸ்ரீ ஞான மஹா வாசிட்டம் 32000, முதலிய பற்பல பிரபல கிரந்தங்களின் மொழிபெயர்ப்பாசிரியரும், காசிமுதல் தூத்துக்குடிவரையிற் பலவாண்டுகளாய்த் "தித்திக்குங்கனிரசமோ? செழும்பாகோ? கற்கண்டோ? தேனோ? பாலோ?, புத்திக்குட் புகுந்தினிக்கும் புத்தமிர்தோ?" எனக் கேட்டோர் புகழ்ந்து கொண்டாடிப் பரவசமாமாறு, சர்வசாஸ்திர சாராம்சமாயும், யுக்திக்கும் அநுபவத்திற்கும் ஒத்ததாயும் முன்னோர் கொள்கைக்கு முரணாததாயுமுள்ள, பிரசங்காமிர்தத் தாரை பொழியும் மாரியும் ஸ்ரீ கோவிலூர் ஆதீனத்து வீரசேகர ஞானதேசிகர் பாதசேகரரும், ஆகிய ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளவர்கள், "அந்தோ! செட்டியார் வீணாய்த் துறையல்லாத் துறைசென்று, பலஜன விரோதமாகிய தூடணாபூடணம் பூண்டு, துன்பம் பயக்கும் பாவப்படுகுழியில் வீழவாளாகின்றாரே! என்னே! பாவம்!! வயோதிகராயிற்றே! "வறியார்க் கொன்றீவதேயீகை" என்ற தேவர் வாக்குப்படி இவர்க்கு உபகாரஞ்செய்தலே உபகார மெனப்படும். இவரது தூடணாமொழி மந்திர செபத்தை யெதனாற் றடுப்பாம். அதனை யறிந்து செய்வேமாயின், அறிவு விளக்கம் பெற்று அக்குழியில் வீழாமற் றப்பித்துக் கொள்வார். இதற்கு யாது பரிகாரம்?" என்று இரக்கமுற்று, "இவற்றிற் கெல்லாங் காரணமான இவரது பேழ்த்தவாயைத் திறவா வண்ணம், பிரபல சுருதிப் பிரமாணங்களாகிய ஓர் ஒப்பற்ற பூட்டினைக்கொண்டு பூட்டினால், இவ்வித பழிவழிகளிற் சென்று, பாவப் படுகுழிகளில் வீழ ஆளாகாமல் ஒருவழியுய்வர்." என இவ்வாறு ஆலோசித்துச், "சங்கரத்வேஷியார் வாய்ப்பூட்டு" என்ற பெயரையுடைய ஒரு பெரிய கெட்டியான பூட்டைக்கொண்டு இவரது வாயைப்பூட்டி இனி "வேதத்தை யிகழாதீர், வேதியர்நிந்தை செய்யாதீர், வெற்றுரை யடுக்காதீர், வீண்வழக்குத் தொடுக்காதீர், சாதியை யிகழாதீர், சமயநிந்தை செய்யாதீர், சாதுக்களைப்பழியாதீர், சாத்திர வழக்கு மொழியாதீர், தெய்வநிந்தை பேசாதீர், தீக்ஷிதர்களை யேசாதீர், ஸ்ரீ சங்கராசாரியர் முதலிய புண்ணிய மூர்த்திகளைத் தூஷியாதீர்,

" இல்லார்க்கொன் றீயு முடைமையு மிவ்வுலகி
னில்லாமை யுள்ளு நெறிப்பாடு மெவ்வுயிர்க்குந்
துன்புறுவ செய்யாத தூய்மையு மிம்மூன்று
நன்றறியு மாந்தர்க் குள "

என்ற வான்றோர் வாக்கைக் கடைப்பிடித்து "இனி வேதிய நிந்தை, விஷ்ணுநிந்தை, சாதிநிந்தை, சமயநிந்தை, சங்கராசாரிய நிந்தை முதலியன செய்யாதீர். வயோதிகப்பருவத்தில் ஏன் தூடணச்செட்டியார்" என்னும் பெயரைச் சூட்டிக்கொள்ளுகிறீர்? நிந்தையா மந்திர செபஞ் செய்வதைச் சிந்தையிலறவே ஒழித்துவிடும் எனப் பலவாறிதமாயுபதேசித்து அடக்கி வைத்தார்கள்.

" செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது."
" காலத்தி னாற்செய்த நன்றி யொருவற்கு
ஞாலத்தின் மாணப் பெரிது" என்ற தேவர் மொழியைச் சிரமேற்கொண்டு, அப்புண்ணிய சீலரின் நன்றிமறவாற் காத்து நன்னெறி யுறாமல், " சென்மக்குணத்தைச்......செக்கிலரைத்தாலும் போகா" என்னு முதுமொழிக்கிணங்க, சிறந்தநூற் பிரமாணமாகிய திறவுகோலைக்கொண்டு, வாய்ப்பூட்டைத்திறக்க வறியாமல், பூட்டிய பூட்டானது பூட்டியவாறே யிருக்க, மீண்டுந் தூஷணமந்திரத்தைச் சூக்ஷுமமாக நாவான் முணுமுணுத்துக் கொண்டு, சென்ற வைந்தாண்டுகளாக விருந்ததோடமையாமல் வெளிப்பட்டுக் கரத்தில் கலமெடுத்து "பார்க்கவ புராணத்தி லுள்ள தூர்வையாசகப்படலம்" என்ற பெயரையுடைய, பலவித நிந்தைகளும் மயக்குரைகளும் நிறைந்த ஆபாசக் குளறுபடையப்பிரமாணச் சுவடியை வெளியிடுவாராயினர்.

அதனையுணர்ந்து ஸ்ரீ கோவிலூர் மடாலயம் வீர. காசிகாநந்த சுவாமிகள் " அந்தோ! பாவம்! வயோதிகக்காலத்திலே, இவ்வணிக மணிக்கு மதவாத பித்தந் தலைக்கேறி யையமேலிட்டுச் சமயவலிப்பும் சாஸ்திர வலிப்புமன்றோ அதிகரித்துவிட்டன. இதற்கென் செய்வது! தளர்ந்த பருவத்தாயிற்றே" என்று மிக்க பரிதாபங் கொண்டிரங்கி, " உலகத்திலே குமரகண்ட வலிப்பு, காக்காய் வலிப்பு முதலிய வலிப்பு ரோகங்களுக்குச் சூட்டுக்

கோலிட்டுத் தீய்த்த மாத்திரத்திலே, யங்நோய்கள் நீங்கப்பெற்றுச் சுகமுறுகிறார்களன்றோ, அவ்வாறே யிவரது சமயமதவாத சாத்திரவலிப்புக்கோர் சூட்டுக்கோலிடுவேமாயின் அவை நீங்கப் பெற்றின்புறுவார்" எனக்கருதிச் சுருதியாகிய பணையிலே, யுத்தியாகிய இடுக்கியாலிடுக்கி, அநுபவமாகிய சுத்தியாற் கத்தியரூபமாகப், பிரமாணச்சுவாலை வீசும் இந்நூலாகிய சூட்டுக்கோலினைத் தமது மெய்ஞ்ஞானச் சுடரிலேகாய்ச்சி, மிகக்கூர்மையாக நீட்டித் தீட்டி இவரது தீயநாவைத் தீய்த்துவிட்டாராகலின், மேற்கூறிய பலவிததூடண வலிப்புரோகங்கள் புண்பட்டொழிந்து இன்புறுவாரெனக் கருதுகின்றோம்.

வலிப்புரோகங்களுக்குச் சூட்டுக்கோலிட்டுத்தீய்த்தல், நோயாளரிடத்துச் சாதகர்கொண்டுள்ள பச்சாத்தாபமாமாறு, நமது சுவாமிகள் இச்சூட்டுக்கோலினை யிவரது நாவிற்கிட்டதும், இவர் மீதுகொண்டுள்ள பெருங்கருணையே யாமென்பது உலகம் ஒப்பத் தக்கதேயாம்.

" தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் சேகத்திருள்சோப்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும் பாசபந்த
இனமே துணையென் றிருந்தோ நமன்வரி னென்செய்குவோம் ?
மனமேநம் போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே "

என்ற ஸ்ரீ தாயுமானவர் வாக்கை மறவாமற் சிந்தித்துக்கொண்டு, இனியேனும் நமது செட்டியாரவர்கள் தூடண மந்திரஞ்செபிப்பதை யொழித்துச், சிவமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திருமந்திர செபஞ்செய்துய்வாராகவென, எமது பரமஞானாசாரியராகிய ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளின் திருவடிக்கமலங்களை முக்கரண சுத்தியுடன் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றோம்.

சுபம்.

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்.

இங்ஙனம்,

ஸ்ரீ ஆண்டவரடியார்க்கடியார்,

கோவிலூர்



சிவமயம்.

ஓம் தத்சத் பரப்பிரஹ்மணே நம:.

ஸ்ரீ சங்கராசாரிய குருப்யோ நம:.

வேதபாஹ்ய பாசுபத தாந்திரிக
துவிதசைவ துர்வாதியாகிய

காரைக்குடி

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரின்

# தூஷண நாவுக்கோர்

# சூட்டுக்கோல்.

---

## முதற்பாகம்.

உடன்முத லனைத்து முண்மையன் றென்று
திடம்பெற வுரைத்த செய்யவீ ரேசன்
மடன்மலர்ப் பாதம் மகிழ்வுடன் பணிந்தே
இடர்கெடச் சூட்டுக் கோலினை யிசைப்பாம்.

அறிவிற் சிறந்த அன்பர்களே !

காரைமா நகரின்கண் வசிக்கும் ராம. சொ. சொக்கலிங்கச் செட்டி
யா ரென்பார், "உண்மை நாயன்மார் மகிமை", "காஞ்சிவாசியாரின்
மாயாவாதக்கோண் மறுப்பு", "சிவசுந்தரசாயரூப சிவமகிமா சங்கிர
கம்", "பார்க்கவ புராணத்தி லுள்ள தூர்வையாசகப்படலம்" என்
பனவாதி சிறு சுவடிகளைப் பொறித்துக் கல்லாதாரை ஏமாற்றும் பொரு
ட்டு வெளியிட்டிருக்கின்றனர். அந் நூல்களின் உட்கருத்தோ வேதாந்தி
களை நிந்தனை செய்வதேயாம். அவற்றுள் 'உண்மை நாயன்மார் மகிமை'
என்னுஞ் சிறுசுவடிக்கு வேதாந்த பாஸ்கரரும், நியாய சந்திரரும், காசி
முதல் தூத்துக்குடிவரை உபந்நியாச மாரிபொழிந்து உலகப்பிரசித்தி
பெற்றவருமாகிய கோவிலூர் மடாலயம் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிக ளவர்க
ளால் ஐந்தாண்டிற்கு முன் "சங்கரத்வேஷியாரின் வாய்ப்பூட்டின் இரண்
டாம்பாகம்" எனப் பெயரீந்து தக்க பிரமாணங்களைக்கொண்டு மறுப்
பெழுதப்பட்டுப் புத்தக ரூபமாக நிலவுறுகின்றது. அதற்கு மறுப்பெழுத
ஆற்றலற்று, பிங்கள ஹு புரட்டாசிமீ கடைசியில், கோயிலூர் மடாலயத்

தையும், அதனைச் சார்ந்த மகான்களையும், மற்றைய வேதாந்திகளையும், வேதாந்த சாஸ்திரங்களையும், நிந்திக்கும் வியாஜ வாயிலாய்த் தம்மிடத்துள்ள வஞ்சகத் தன்மையினை வெளிப்படுத்தற்கு "பார்க்கவ புராணமாகிய விநாயக புராணத்திலுள்ள தார்வையாசகப் படலம்" எனப் பெயரீந்து சிறு ஆபாசச் சுவடியொன்றை யெழுதிக் **கல்வியில்லாது** நாமாபிமான மாத்திரமாயுள்ள சைவசித்தாந்திகளை யேமாற்றும்பொருட்டு வெளியிட்டிருக்கின்றனர். அவற்றிலுள்ள விஷயங்கள் கற்றோர் பார்த்து நகைத்தற்குரியனவாயும், முற்கூற்றுக்குப் பிற்கூற்று விரோதமாயு மிருப்பினும் அற்பப் படிப்புடையாரும், கேள்விமாத்திரமுடையாரும் அதனைக்கண்டு மயங்குவாராகலின், அவர்களது ஐயத்தினை யொழிப்பான் இக்கண்டனம் எழுதத் துணிந்தனம்.

இந்நூலுக்குப் பெயரீந்தமைக்குக் காரணம், நம் செட்டியார் ஈழ தேசஞ்சென்று, ஈழத்துக் குருவையடைந்து, ஈழத்து மாணாக்கரோடு சேர்ந்து, இழுக்குடைக் கல்வி கற்றவராகலின் "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க், கினத்தியல்ப தாகுமறிவு" என்ற பொய்யாமொழிப் புலவர் வாக்கின்படி சங்க மாத்திரத்தில் வந்துறும் தோஷம் இவரைவிட்டெங்ஙன நீங்குமோ? ஈழதேசத்தவர்கள் அத்தனைக் குற்றமுடையோராவெனின், அவர்கட்கு நாடோறும் குலமாறுதல், மதமாறுதலே இயற்கை குணமாகும். பகலில் கிறிஸ்துவரா யிருப்பார்கள். இரவில் இந்துவாய் விடுவார்கள். இது குலமாறுதலாகும். பகலில் கிறிஸ்துவைத் தொழுவார்கள், இரவில் சிவன் கோவிலுக்குச் சென்று சிவனைத் தொழுவார்கள். இது மத மாறுதலாகும். இதில் ஐயுறவுண்டேல் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரென்பார் எழுதிய "யாழ்ப்பாணத்துக் காலநிலை" என்ற புத்தகத்தால் உணர்க. இப்புத்தகத்தினை விவகார வழக்குப்பற்றி அச்சுவாகன மியற்றவியலாதென்று "சுவாமிநாத பண்டிதர் என்பார்" தாம் எழுதிய புத்தகத்திலும் எழுதியிருக்கின்றார். ஆகலின், அவ்வீழ தேசத்தார்க்குரிய நிந்தைக்குணம் இவரையுஞ் சார்ந்து ஈழத்தடிப்பேறி யிருப்பதனால், இந்தியாவுக்கு வந்த காலமுதல் இதுகாறும் வேதாந்தத்தினைப் பலவாறு தூஷித்து எழுதுகின்றமையின், இப்பத்திர ரூபமாகிய சூட்டுக்கோல் வாயிலால் அவர் நாவின் சுரப்பைத் தீய்த்துவிடின், அந்த நாவெழாது **பெட்டிப் பாம்புபோல்** அடங்கி வேதவழியிருப்பரெனக்கருதி யிந்நூலுக்குச் "சொக்கலிங்கச் செட்டியாரின் தூஷண நாவுக்கோர் சூட்டுக்கோல்" எனப் பெயரீந்தாம் என்க.

"தார்வையாசகப்படலத்தின் முதற்பாகத்தில் நாமே பிரமமெனக் கொண்ட மார்க்கம் வேதசிவாகமாதி சகல சாஸ்திர விரோதமான சர்வாபாச மார்க்கமேயாம்" என்று வரைந்தார்—அன்பர்களே! அறிவிலிகளே நிறைந்திருக்குஞ் சபையின்கண் அக்ரதாம்பூலம் யாருக்குக் கொடுக்கலா மென்று யோசிக்கில், நஞ்செட்டியாரே இரண்டு கரங்களையும் நீட்டி

முன்னோரதைப் பெற்றுக்கொள்பவராவரென்பதற் கையமின்றாம். என்னை
விந்தைபாருங்கள். 'நான் பிரமம்' என்னும் மார்க்கம் வேத சம்மதமன்று,
அதிலும் சிவாகமசம்மதமன்று, பின்னும் சர்வசாஸ்திரத்திற்கும் விரோத
மாம் எனவும் வரைந்தார். ஒழுக்குடையா ரினையருளிக் கற்றிருப்பின்
இங்ஙனம் வரைவரா? நான் பிரமம் என்னும் மார்க்கம் வேதத்தி
லுளதா? அல்லது நம் மன்பர் கொண்டிருக்கும் வேத பாஹ்யமான
ஆகமத்திலுளதா? வேதத்திலுளதேல் வேத சம்மத மல்லாத ஆபாச
மார்க்கமென்று "எண்ணித் துணிவது கருமந் துணிந்தபின், எண்ணுவ
மென்ப திழுக்கு" என்னும் பொய்யா மொழியை யுணராது மனம்போன
வாறு வரைவரா? வேதபாஹ்யமான ஆகம சம்மதமாமேல் நம் மன்பர்
"உபயத: பாஸா ரச்சு" என்னும் நியாயத்தால் அகப்படாது யாங்ஙனம்?
இன்னும் ஓரிடத்தில் "சில வுபநிடதங்கள் ஏகான்ம வாதத்தைக் கூறு
கின்றன" என்று பின் வரைந்து, தாமே வேதாந்தம் வேத சம்மத மென
வொப்புக்கொண்டு ஆரம்பத்தில் வேத சம்மத மன்றென்று நிந்தித்து
மீளாநரகிற் காளாகின்றனர்.

## திருமந்திரம் ஆறந்தம் 2395.

"சிவனைப் பரமனுட் சிவனுட் காட்டும்
**அவமற்ற வேதாந்த** சித்தாந்த மாறே
னவமுற்ற வத்தையின் ஞானஞ் சிவமாந்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே"

என்னுஞ் செய்யுளில் திருமூலநாயனார் அவமற்ற வேதாந்தமென்று புகழ்
ந்து கூறியிருப்பவும், ஆபாசமார்க்கமென்று நிந்திக்க அறியாமையினை
யறிவுடையோ ரறிவாராக!

"சில வுபநிடதங்களைத் தமது கருத்துக்கிணங்கத் திரித்துப்
பொருள்கொண்டு" என்றார். உபநிடதங்களை வேதாந்திகள் திரித்
தார்கள் என்று உளறுவது இவர் மதத்தினர்க்குச் சகசமலம்போன்று
சகஜமாய் விட்டது. உபநிடதங்களைத் திரித்தார்களென்று இவர் சொற்
பனங் கண்டனரா? அல்லது மகேஸ்வரனாகிய பரமேஸ்வரன் பிரத்தி
யக்ஷமாகி யுரைத்தனரா? சொற்பனங் கண்டேன், எங்கள் மதத்தில்
சொற்பனஞ்சத்தியமானதால் இவர்கள் திருத்தியது உண்மையென்பரேல்,
நன்றுநன்று! சொற்பனஞ் சத்திய மென்று அங்கீகரித்து நம் மன்பர்
சாக்கிரத்தில் வேதாந்திகள் உபநிடதங்களைத் திரித்து விட்டார்க
ளென்று, திடமாக ஜெபஞ் செய்துகொண் டிருந்திருப்பர். அதன்
வாஸனையின் மிகுதிப்பாட்டால் சொற்பனத்திலும் அவ்வாறே தோற்றி
யிருக்கலாம். இவ்வாறாய சொற்பனம் உண்மை யென நம்புமிவர், தமது
புத்திரனுக்கு விவாகம் நடப்பதாகச் சாக்கிரத்தில் திடமாகச் செபஞ்
செய்து வருவாராயின், வாசனையின் மிகுதிப்பாட்டால் சொற்பனத்தில்
விவாகம் நடந்ததாகத் தோற்றிவிடும். தோற்றவே, சொற்பனம் நம்

அன்பருக்குச் சத்தியமாதலால், அதுகொண்டு மகனுக்கு மணவினை முடிந்து, பௌத்திர சம்பத்துக்கள் உண்டாய்விடும் எனக் கருதி விவாகத்தின் பொருட்டு சாக்கிரதத்தில் இனி முயற்சி செய்யாதிருப்ப ரென நாம் உறுதியாக நம்புகின்றோம்.

"விபூதி ருத்திராக்ஷாதிகளும் தமது கருத்தின்படி பொய்யென்றே ஒழித்துவிட்டால் தம்மைப் பிறர் வந்து அடுக்கமாட்டார்களென்றோ? அவற்றை மேற்கொண்டு வஞ்சவேடங் காட்டி, கடவுளுண்டு, நாம் அடிமை, பாவம் நீக்கிப் புண்ணியஞ் செய்துய்யவேண்டும் என்னும் உலகர் வழக்கம் நோக்கி, அவ்வழி மேற்கொண்ட அவ்வளவே யன்றி" என்றார்.

கையில் கலம்பிடித் தெழுதுங்கால் அற்ப அறிவொளிச்சுடர் கொளுத்தியாவது எழுதவேண்டாமா? "விபூதி ருத்திராக்ஷ முதலியன வெல்லாம், பிறரை யேமாற்றும் பொருட்டு" என்றார். சிவ வேடந் தரித்துக்கொண்டு சிவ சொரூபியாய் விளங்கும் மகான்களை வாய் கொண்ட மட்டும் நிந்திப்பர் இவரா? யாமா? நம் மன்பர் சிவன் கோவிலின் மேற்புறத்துள்ள அறுபத்து மூவர் மடத்தில் வாசஞ் செய்தும், அதிசமீபமாயுள்ள சிவாலயத்திற்கு நாடோறும் தெரிசிக்கச் செல்லாதிருக்குங் கொடுந்தொழில் பிறரை யேமாற்றும் பொருட்டென்றே யுணரலாம். அஃதின்றி நாடோறும் நியமந் தவறாது சிவச்சின்னுதிகளைத் தரித்துக்கொண்டு சிவாலய தெரிசனம் செய்துவரும் எம்மவர்கள் கொண்டிருக்கும் வேஷம் பிறரை யேமாற்றும் பொருட்டென வாய் கூசாது வழங்கலொல்லுமா? இன்னும் நம்மன்பரைச் சார்ந்த சைவ சித்தாந்திகளிற் பலர் சிவாலய தரிசன நிமித்தம் வருஷத்திற் கொருமுறை செல்பவரும், ஆயுள்வரை ஒருமுறை செல்பவரும், அயனத்திற் கொருமுறை செல்பவரும், மாத மொருமுறை செல்பவரும், வாரத்திற் கொருமுறை செல்பவருமாய், மடாதிபதிகளும் கிரகஸ்தர்களும் உள்ளார் என்பது காசிமுதல் கன்னியாகுமரி பரியந்தம் பறையறைவித்தாற்போல் பலருமறியப் பிரவித்தமாயிருக்க, "முழுப்பூசுணிக்காயைச் சோற்றி லமுக்கியது" போன்று அதனை மறைத்து, எம்மவரை வேஷதாரிகள், வஞ்சகர்கள், பொய்யர்கள் என்று கூறுவது எந்த எரிவாய் நரகிற் புகுதற்கோ யாம் அறிகிலோம்.

அன்பர்களே! கவனிப்பீர்களாக. விநாயக புராணத்திலுள்ள தூர்வையாசகப் படலத்தினை "எல்லாரும் எளிதினுணரும்படி வசனரூபமாக எழுதி வெளியிட நேர்ந்தது" என்றார். முன்னரே வசனமாகச் செய்திருக்க இப்பொழுது தாம் வசனமாக இயற்றியதாகப் பொய் மொழி புகன்றார். அவர் என்செய்வார் பாவம்? அவரது முன்னோர்கள் சென்ற பொல்லாவழியேனும் செல்லவேண்டியவராகலின், இவ்வாறு செய்தார். இவர் முன்னோர்களுள், கந்தியாரும், வெள்ளியம்பலத்தம்பிரான் என்பவரும், தாங்களும் நால்வர்களோடு சமத்

துவமடைய வேண்டுமெனக் கருதி, தேவாரங்களைமனம்போனவாறு திரித்தும், புன்மொழிப்புதுப்பாக்களைப் புகுத்தியும், பெரிய புராணம், திருவிளையாடல் முதலிய நூல்களுள் இழிமொழிப்பாக்களை யிணைத்தும், இருக்கின்றார்கள் என்பது இவர் இனத்தவர்களுள் தொன்றுதொட்டு வழங்கி வருவதும், அடங்கன்முறை முகவுரை முதலியவற்றுள் அச்சிட்டிருப்பதுமே போதிய சான்றாகும். பின்னுஞ் சிலர் பாரதம், இராமாயணம், பிரபுலிங்கலீலை, திருமந்திரம் முதலிய நூல்களிலுள்ள பாக்களைக் களைதல் செய்தும், அதிகமாகப் புணர்த்தியும், நடுவுநிலைமையிலுள்ளோர் தீண்டாவண்ணம்அச்சுவாகனமேற்றியும், முன்னிலைமையாயநன்னிலைமையை யுணராவண்ணம் பல விடையூறுகள் செய்தனர் என்பது பண்டிதரும் கலாசாலை மாணவர்களும் உணர்ந்த விஷயமே யாம். அதுபோன்றே யிவரினத்தவர்களுள் சிலர் சர்வ மேம்பாடுடைய ஆரிய பாஷையிலுள்ள புராணேதிகாசங்களில் தங்கொள்கைக்கு மாறுபாடா யிருக்கும் சுலோகங்களைத் திரித்தும், அவ்வாறு திரிக்க ஆற்றலற்ற சுலோகங்களை விடுத்தும், சுருங்கியவற்றை விரித்தும், விரிந்தவற்றைச் சுருக்கியும், அவ்வவர் கருத்திற்கியைய மொழிபெயர்த்தனர். அவற்றுள் இவ்விநாயக புராணமும் ஒன்றாம்; ஆகலின் அஃதப்பிரமாணமாம். நிற்க,

"அன்பு, நூலாராய்ச்சி, கொடை, மிக்க போர்வல்லபம், ஒழுக்கம், இல்லறவின்பம் முதலிய பலவற்றாலும் மேம்பாடுடைய சனகராஜா அரசாக்ஷி செய்துவருங்கால்," என்று வரைந்து, பின்பு "நாரதமுனிவரைக் கண்டு வணங்காது கெர்வித்திருந்தார்" என்று வரைந்தனர். நண்பர்களே! இவரது புத்தி கௌஸல்யத்தினை நீங்களே யுணர்வீர்களாக. முன்னர் அன்புடையவர், நூலாராய்ச்சி யுடையவர், கொடையுடையவர், மிக்க போர்வல்லபமுடையவர், ஒழுக்கமுடையவர், இல்லறவின்ப முடையவர் முதலிய பலவற்றாலு மேன்மையுடையவர் என்று அளவிறந்த குணநலமுடைத்தாந்தன்மையினை அறிவித்தனர். பின்னர் அதற்கு எதிர்மறையான குணங்களை யுடைத்தாந் தன்மையாய இறுமாப்பை யறிவித்தனர். நற்குணமுடையோரிடத்தில் அதற்கெதிர்மறைக் குணங்களுளவாமோ? ஒன்று பொய்யாய் ஒழியினல்லது பரஸ்பரம் விரோதமுடைய இரு தருமங்கள் ஒரு நிலைக்களத் துளவாகாவாதலின், நம்மன்பர் கூறிய நற்குணங்கள் அறவே சனகரிடத்தில்லா திருந்திருக்க வேண்டும். நற்குணங்களில்லா தொழியவே, சனற்குமாரரிடத்துப் பிரமோபதேசம்பெற்று பிரமஞானியாய நாரதமுனிவர் அநதிகாரியாய அவரிடத்து வர ஆவஷியகமின்றாம். எதிர்மறையாய இறுமாப்புளதேல், அக்காலும் அநதிகாரியாய அவரிடத்து ஸ்ரீ நாரதமுனிவர் வரவுரித் தன்றாம். ஆகவே, இருவழியாலும் இவர் பொறித்த குளறுபடையாய கற்பனைக்கதை ஆற்றிற்கரைத்த புளியோடொப்பாயவாறு காண்க. இன்னும் நம் மன்பர் "ஷணப்பன் வீட்டுக்கோழி தானே விலங்கின் மாட்டிக் கொள்வதுபோன்று" யோசனை

யின்றிக் கலமிருக்கிறதென்று கண்டவாறு வெள்ளைக் கடிதத்தைக் கறுப்புக் கடிதமாக்கி நாம அபிமான மாத்திரமுள்ள சைவசித்தாந்தப் பிரபுக்களிடத்தில் ஆசைவார்த்தை பல சொல்லிப் பொருளைவாங்கி, அச்சுவாகன மேற்றி வெட்கமின்றி வெளியிடுகின்றனர். நம் நூலை விவேகிகள் பார்க்கின் ஆசங்கிப்பர்களென்னும் அறிவிருக்குமாயின், இங்ஙனம் முன்பின் முரணுறவரைவரா. தாம் நீணாளாக உபாசித்துவந்த பரமேசுரனுடைய திருவருளாலன்றோ இங்ஙனம் முன்பின் முரணுற வரைந்தார். பரமேசுரனுடைய திருவருளின் அனுக்கிரகத்தைக் கடக்க யாவர்தாம் வல்லர்? பரமேசுரன் நிர்ப்பக்ஷவாதியாதலின், இவரது அந்தக்கரணத்தில் சாக்ஷி மாத்திரமாயிருந்து, இவரது பாவனையின் பிரகாரம் விளக்கி வைத்தனர். "யாவன் யாதொன்றினை நினைந்தான், அந்த வளவே யந்தப்பாவனையா லதனையடையுமால்" "எண்ணிய வெண்ணியாங் கடைவர்" என்பனவாதி வாக்கியங்களின்படி இவரது கொள்கையினையே யிவரது உபாசனு மூர்த்தி விளக்கியதாம் என்க.

இன்னும், முதற் பக்கத்தின் ஆரம்பத்தில் "ஏகான்ம வாதிகளால் ஞானசனகரென்று துதிக்கப்பட்ட மிதுலாபுரி யரசரானவர்" என்று வரைந்திருக்கின்றார். பின் கணேசரால் சைவதீக்ஷைபெற்று சிவஞானியாயினரென்று வரைந்திருக்கின்றனர்.

அன்பர்களே! இவரது மதிபோனவாறென்னே! முன்னர் ஏகான்ம வாதிகளாகிய வேதாந்திகளாற் புகழப்பட்டவர் என வேறு பிரித்தனர். பின்னர்த் தம்மினத்தவரென்று, மயல்கொண்டு மயங்கினர். இவரினத்தவராயின் எம்மவர் புகழ்வானேன்? எமது வேத முடிவாகிய பாரமார்த்திக அத்வைத சித்தாந்தத்தைக் கொண்டவராயிருப்பின் இவர் மதத்தில் தீக்ஷை பெறுவானேன்? பெருதொழியவே, இவரினத்தவராற் புகழப்படாது, எம்மவராலும் எம்மவர் கைக்கொண்ட சிரோபூஷணமான வேதமுடிவாகிய பிருகதாரண்ய முதலிய உபநிஷத்துக்களாலும் புகழப்பட்டவர், மிதுலாபுரிக்குரிய ஞான சனகரென்பதை, நம்மன்பர் மனச்சான்றுக்கு மாறுபாடின்றி வரைந்ததே சான்றாகும்.

அன்றி, ஜனகர் என்பது சோழதேசத்தை யரசாளு மன்னர்கட்கு சோழன், சோழன், என்று நாமம் வழங்கல்போன்று, மிதுலையாளரையர் குலத்து வந்தார்க்கு ஜனகன், ஜனகன் என வழங்கல் வழக்கமாம். இதனை ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஸ்ரீராமபிரானுக்கு வாசிட்டத்தில் மிதுலையாண்டிருந்த ஜனகரது உபாக்யானத்தை யுபதேசித்துள்ளார். அக்காலத்திலேயே ஜானகியின் பிதாவாகிய வேறு ஜனகர் ஸ்ரீ தாசரதிக்கு மாமனாராக இருந்ததையும் யூகித்தறிவாராக.

ஏகான்மவாதிகளாற் புகழப்பட்ட ஞான சனகரென்றமையின், அநேகான்மவாதிகளாய அவைதிக சைவசித்தாந்திகளாற் புகழப்பட்ட

அஞ்ஞானியாய சனகர் ஒருவர் உளரென்று அருத்தாபத்திப் பிரமாணத்
திறற் சித்தமாகின்றது. அந்த சனகர் இருபத்தெட்டாகமங்களுள் புக
ழப்பட்டிருக்க வேண்டும். இன்னும் தென்றேயத்தில் அப்பிரஸித்த
மிதுலாபுரியென் றோரூரிருக்கவேண்டும். அவ்வூரில், வெறுஞ் சைவப்
பண்டார குருக்களாகவாவது, அல்லது நம்மன்பரைச் சார்ந்த பின்னே
வேறு பற்பல சாதிகளிலாவது சனகரென்னும் பெயருடன் ஒருவரிருக்க
வேண்டும். அவ்வாறு ஆகம முதவியவற்றானும், தேச சரித்திரத்தாலும்
உணரப்படாமையின், வேதாந்திகளாற் புகழப்பட்ட சனகர் சைவதீக்ஷை
பெற்றாரென்னும் தெற்றுரை வெற்றுரையாயவாறு காண்க! இன்னும்,
இவர் மதத்தில் சேர்ந்து சைவதீக்ஷைபெற்றது நம்மன்பர் மனச்சாக்ஷிக்கு
உண்மையா யிருப்பின், அறுபத்துமூன்று நாயன்மார்களைச் சிவாலயங்க
ளில் வைத்துப் பூஜிக்க வேண்டுமென்று பிரயத்தனஞ் செய்வதுபோன்று
சைவ சித்தாந்த சனகரையும், சிவாலயங்களில் மூர்த்தியாகப் பிரதிஷ்டை
செய்து, பூஜை முதலியன செய்துவர வேண்டுமென்று, பகீரதப் பிரயத்
தனஞ் செய்திருப்பாரன்றோ? அங்ஙனம் இவர் செய்யாமையினானே,
சகல லோக ஹிதமாயுள்ள வேதத்தின் முடிவாய உபநிஷத்களில் பிரதி
பாதிக்கப்படும் தத்துவமசி மஹாவாக்கியப் பொருளினை யுணர்ந்த, ராமே
ஸ்வர முதல் ஹிமாசல பரியந்தம் பிரஸித்தமாயுள்ள பரம அத்வைத சித்
தாந்தியென் றுணர்தற் கையமின்றாம். நம்மன்பரது சுபாவம் "நரி
திராக்ஷைப்பழம் புளிப்பென்று" கூறியதுபோன்று, தம் மனத்தில்
தோற்றியவர்களை யெல்லாம், அவைதீக சைவசித்தாந்திகளென்று, பிர
மாணமின்றி சுவகபோல கற்பனையாக எழுதி வெளியிடுவதேயாகும்.
எதிரிகள், வாதஞ் செய்யாதிருப்பின், தாம் எழுதியதனைப் பதிவாக்கா
கப் பாவித்துப் பாமரரிடத்துப் புகழ்ந்து பரமானந்தமடைந்திருப்பர்.
வேதாந்திகளாய எதிரிகள் அங்குசம் விடுப்பின், மறுமொழிகூறாது
மௌனஞ் சாதிப்பர். இன்னும், நாரதரையும் தம்மனம்போனவாறு சைவ
சித்தாந்தியென்று எழுதிக்கொண்டனர். நாரதமுனிவர் அறுபத்து
நான்கு கலைஞானமுடையவரா யிருந்தும், துக்கம் நீங்கப் பெறாதவராய்,
சனற்குமார முனிவரை யடைந்து, பூமாவித்தையினைப் பெற்று துக்கத்
தை நீக்கினரென்று, உபநிடதங்களில் பிரசித்தமாயுளது; அதற்கு மாறா
னுறத்தெரிந்து பொய்புகன்றமையின், மீளா நரகத்திற் காளாகின்றனர்.
ஆஹா! இவர் மதிமானாயிற்றே? பிரமாணமின்றி வெற்றுரை தொடுப்
பாரா? தொடார் தொடார். யாம் பிரமாணங் கேட்பின், "பச்சாம்பேட்
டைச் சத்தியோஜாத சிவாசார்யரென்ற இரத்தின குருக்கள்" கோறல்
செய் தச்சிட்ட, ஆகமப் புத்தகங்களில், அவராற் புகுத்தப்பட்ட வியா
கரண விருத்தமான பிழைச் சுலோகங்கள் இருப்பின் அவற்றைப்பெரும்
பிரமாணமாகப் பறையறைவித்தாற்போன் றறிவிப்பர். அவ்வாறாய
சுலோகங்களும் ஆகமங்களிலின்றென்றே துணிவாகக் கூறலாம்.

இன்னும் பத்தாவது பக்கத்தின்கண், "வேத வேதாந்த சிவாகம சித்தாந்தாதி சகல சாஸ்திரங்களாலும், அநாதி நித்தியப் பொருள்க ளென்று கூறப்படுவன, பதி பசு பாசமென்கின்ற மூன்றுமாகும்" என்று "தட்டிப்பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்ரசண்டன்" என்னும் உலக வழக்கம் உறழவரைந்தனர். மோக்ஷத்தினை யடைதற்குரிய நான்கு சாதனங்களுள், நித்தியா நித்தியவஸ்து விவேகம் என்பதன்பொருளை, யுணர்ந்திருப்பாராயின் பாசம் நித்தியமெனக் கூறுர். இனியாயினும்,

"மெய்ம்மை யாம்பொருள் விவேகமும் வேறுபா டாய
பொய்ம்மை யாம்பொருள் விவேகமும் புந்தியுட் டோன்ற
விம்மை யாசையு மறுமையி லாசையு மிகந்து
செம்மை யாகிய கருத்தராய்ப் பரகதி தேர்வார்."

"புத்த ராதியோர் புறவுரை நெறிகளும் பொய்யா
நித்த வேதநூ றழுவிய வகவுரை நெறியுஞ்
சித்த மாசறுத் தரனருட் டெளிவியா வதனுன்
மித்தை யாணவத் தொடக்கறு தில்லையாம் வீடும்."

"வேத வாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம்
பேதமாகிய பிணக்கறுத் திருட் பிணி யவிழ்த்து
நாத னாகிய தன்னையு மென்னையு நல்கும்
போத னாகிய குருபரன் வருவதெப் பொழுதால்".

என்னுந் திருவிளையாடற் புராணத்திலுள்ள செய்யுட்களில் கூறியுள்ள அநித்தியப் பொருளொன்று இருந்தேயல்லவா அதன் விவேகஞ் செய்யவேண்டும்? அநித்தியப் பொருளொன்றின்றி யெதன் விவேகஞ் செய்வது? நம் நண்பர் கொள்கைப்படி அநித்தியப் பொருளொன்றில்லா திருக்கப் பரமேசுரனுல் உபதேசம்பெற்ற ஸ்ரீ மணிவாசகப் பெருந்தகை வேறுபாடாய எப்பொய்ம்மை யாம் பொருளை விவேகஞ் செய்தனர்? மெய்ம்மைப்பொருளைப் பொய்ம்மையாக விவேகஞ் செய்தனரெனின், அக்கூற்றும் பொய்ம்மையாய் முடியும். பொய்ம்மைப் பொருளொன் ருென்றிருந்தே யதனை மணிவாசகப் பெருந்தகை விவேகஞ் செய்தன ரென்றுணர்ந்து, நாடோறும் காலையிலெழுந்து சிவஸ்மரணை செய்யும்படி சாஸ்திரங்கள் விதிக்க, அதனை யுணராது மாறுய், கோவிலூர் மடத்தினை யும், அதிலிருந்த பெரியாரையும், வேதத்தினையும், பிராமணர்களையும், வேதாந்திகளையும், நிந்திப்பதே பிராதகால ஸ்மரணமும், காலக்கடனு மாய் இதுவரை யநுஷ்டித்து வந்த வழக்கத்தினை யறவே யொழித்து, அம்மகான்களை நிந்தித்த பாபங்க ணீங்குவதற்காக அவர்கள் திருவடிகளை நாத்தழும்பேற வாழ்த்தி இனியேனும் நன்மை கடைபிடிப்பாரென இவ் வயோதிகர்மீதுள்ள கருணையினுல் உபதேசிக்கின்ருேம். கேட்டுய்கினு ருய்க. இன்றி "சொர்க்கத்திற்போம்போதும் கட்கத்தில் ராட்டினம்"

என்ற மொழிப்படி தென்றேயஞ் செல்லும் போதும் அங்குங்கொண்டு செல்லினுஞ்செல்க.

இன்னும் 12-ம் பக்கத்திலே, "சிவனுக்குரிய பிரமத்தன்மையைச் சீவனுக்குச் சொல்வது திருட்டாம்" என்றார். நம்மைத் திருடன் என்று கூறி "அவன் கிடக்கிறான் கட்குடியன், எனக்கிரண்டுமொந்தை கள் ளூற்று" என்னும் மொழிப்படி இவர் தப்புவதியாங்ஙனம்? இவர் சிவனுக் குரிய குணங்கள் யாவும் சீவனுக்குரியனவென்று கூறுபவரா? இலரா? கூறேனென்பரேல்

## திருவாசகம்.

"இயக்கி மாரறு பத்து நால்வரை யெண்கு ணஞ்செய்த ஈசனே"
"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா வார்கொலோ சதுரர்"

"சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட அத்தன்"

"பேசினேனோர் பேதமின்மை"

"நாமொழிந்து சிவமானவாபாடி"

"வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

"பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப்பெரு வெள்ளமே"

"சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி"

"பேதங் கெடுத்தருள்செய் பெருமை யறியவல்லார் எம்பெருமா னாவாரே"

"கூறும் நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ."

## திருவிளையாடற் புராணம் நாரைக்கு முத்திகொடுத்த படலம்.

"சித்தமாசுகழீஇச் சிவமாகிய"

## திருமந்திரம்.

"சிவன்றான் பலபல சீவனுமாகி" "சீவன் பரசிவனுமே" "சிந்தைய தென்னச் சிவனென வேறில்லை" "உணர்வுமவனே யுயிருமவனே"

"சீவ னென்னச் சிவனென்ன வேறிலை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே".

யின்றிக் கலமிருக்கிறதென்று கண்டவாறு வெள்ளைக் கடிதத்தைக் கறுப்புக் கடிதமாக்கி நாம அபிமான மாத்திரமுள்ள சைவசித்தாந்தப் பிரபுக்களிடத்தில் ஆசைவார்த்தை பல சொல்லிப் பொருளைவாங்கி, அச்சுவாகன மேற்றி வெட்கமின்றி வெளியிடுகின்றனர். நம் நூலை விவேகிகள் பார்க்கின் ஆசங்கிப்பர்களென்னும் அறிவிருக்குமாயின், இங்ஙனம் முன்பின் முரணுறவரைவரா. தாம் நிஷ்களாக உபாசித்துவந்த பரமேசுரனுடைய திருவருளாலன்றோ இங்ஙனம் முன்பின் முரணுற வரைந்தார். பரமேசுரனுடைய திருவருளின் அனுக்கிரகத்தைக் கடக்க யாவர்தாம் வல்லர்? பரமேசுரன் நிர்ப்பக்ஷவாதியாதலின், இவரது அந்தக்கரணத்தில் சாக்ஷிமாத்திரமாயிருந்து, இவரது பாவனையின் பிரகாரம் விளக்கி வைத்தனர். "யாவன் யாதொன்றினை நினைந்தான், அந்த வளவே யந்தப்பாவனையாலதனையடையுமால்" "எண்ணிய வெண்ணியாங் கடைவர்" என்பனவாதி வாக்கியங்களின்படி இவரது கொள்கையினையே யிவரது உபாசனாமூர்த்தி விளக்கியதாம் என்க.

இன்னும், முதற் பக்கத்தின் ஆரம்பத்தில் "ஏகான்ம வாதிகளால் ஞானசனகரென்று துதிக்கப்பட்ட மிதுலாபுரி யரசரானவர்" என்று வரைந்திருக்கின்றார். பின் கணேசரால் சைவதீக்ஷைபெற்று சிவஞானியாயினரென்று வரைந்திருக்கின்றனர்.

அன்பர்களே! இவரது மதிபோனவாறென்னே! முன்னர் ஏகான்ம வாதிகளாகிய வேதாந்திகளாற் புகழப்பட்டவர் என வேறு பிரித்தனர். பின்னர்த் தம்மினத்தவரென்று, மயல்கொண்டு மயங்கினர். இவரினத்தவராயின் எம்மவர் புகழ்வானேன்? எமது வேத முடிவாகிய பாரமார்த்திக அத்வைத சித்தாந்தத்தைக் கொண்டவராயிருப்பின் இவர் மதத்தில் தீக்ஷை பெறுவானேன்? பெருதொழியவே, இவரினத்தவராற் புகழப்படாது, எம்மவராலும் எம்மவர் கைக்கொண்ட சிரோபூஷணமான வேதமுடிவாகிய பிருகதாரண்ய முதலிய உபநிஷத்துக்களாலும் புகழப்பட்டவர், மிதுலாபுரிக்குரிய ஞான சனகரென்பதை, நம்மன்பர் மனச்சான்றுக்கு மாறுபாடின்றி வரைந்ததே சான்றாகும்.

அன்றி, ஜனகர் என்பது சோழதேசத்தை யரசாளு மன்னர்கட்கு சோழன், சோழன், என்று நாமம் வழங்கல்போன்று, மிதுலையாளரையர் குலத்து வந்தார்க்கு ஜனகன், ஜனகன் என வழங்கல் வழக்கமாம். இதனை ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஸ்ரீராமபிரானுக்கு வாசிட்டத்தில் மிதுலையாண்டிருந்த ஜனகரது உபாக்யானத்தை யுபதேசித்துள்ளார். அக்காலத்திலேயே ஜானகியின் பிதாவாகிய வேறு ஜனகர் ஸ்ரீ தாசரதிக்கு மாமனாராக இருந்ததையும் யூகித்தறிவாராக.

ஏகான்மவாதிகளாற் புகழப்பட்ட ஞான சனகரென்றமையின், அநேகான்மவாதிகளாய அவைதிக சைவசித்தாந்திகளாற் புகழப்பட்ட

அஞ்ஞானியாய சனகர் ஒருவர் உளரென்று அருத்தாபத்திப் பிரமாணத்
தினுற் சித்தமாகின்றது. அந்த சனகர் இருபத்தெட்டாகமங்களுள் புக
ழப்பட்டிருக்க வேண்டும். இன்னும் தென்றேயத்தில் அப்பிரஸித்த
மிதுலாபுரியென் ருேரூரிருக்கவேண்டும். அவ்வூரில், வெறுஞ் சைவப்
பண்டார குருக்களாகவாவது, அல்லது நம்மன்பரைச் சார்ந்த பின்னே
வேறு பற்பல சாதிகளிலாவது சனகரென்னும் பெயருடன் ஒருவரிருக்க
வேண்டும். அவ்வாறு ஆகம முதலியவற்ருனும், தேச சரித்திரத்தாலும்
உணரப்படாமையின், வேதாந்திகளாற் புகழப்பட்ட சனகர் சைவதீக்ஷை
பெற்ருரென்னும் தெற்றுரை வெற்றுரையாயவாறு காண்க ! இன்னும்,
இவர் மதத்தில் சேர்ந்து சைவதீக்ஷைபெற்றது நம்மன்பர் மனச்சாக்ஷிக்கு
உண்மையா யிருப்பின், அறுபத்துமூன்று நாயன்மார்களைச் சிவாலயங்க
ளில் வைத்துப் பூஜிக்க வேண்டுமென்று பிரயத்தனஞ் செய்வதுபோன்று
சைவ சித்தாந்த சனகரையும், சிவாலயங்களில் மூர்த்தியாகப் பிரதிஷ்டை
செய்து, பூஜை முதலியன செய்துவர வேண்டுமென்று, பகீரதப் பிரயத்
தனஞ் செய்திருப்பாரன்ருே ? அங்ஙனம் இவர் செய்யாமையினுனே,
சகல லோக ஹிதமாயுள்ள வேதத்தின் முடிவாய உபநிஷத்களில் பிரதி
பாதிக்கப்படும் தத்துவமசி மஹாவாக்கியப் பொருளினை யுணர்ந்த, ராமே
ஸ்வர முதல் ஹிமாசல பரியந்தம் பிரஸித்தமாயுள்ள பரம அத்வைத சித்
தாந்தியென் றுணர்தற் கையமின்ரும். நம்மன்பரது சுபாவம் "நரி
திராக்ஷைப்பழம் புளிப்பென்று" கூறியதுபோன்று, தம் மனத்தில்
தோற்றியவர்களை யெல்லாம், அவைதீக சைவசித்தாந்திகளென்று, பிர
மாணமின்றி சுவகபோல கற்பனையாக எழுதி வெளியிடுவதேயாகும்.
எதிரிகள், வாதஞ் செய்யாதிருப்பின், தாம் எழுதியதனைப் பதிவாக்கா
கப் பாவித்துப் பாமரரிடத்துப் புகழ்ந்து பரமானந்தமடைந்திருப்பர்.
வேதாந்திகளாய எதிரிகள் அங்குசம் விடுப்பின், மறுமொழிகூருது
மௌனஞ் சாதிப்பர். இன்னும், நாரதரையும் தம்மனம்போனவாறு சைவ
சித்தாந்தியென்று எழுதிக்கொண்டனர். நாரதமுனிவர் அறுபத்து
நான்கு கலைஞானமுடையவரா யிருந்தும், துக்கம் நீங்கப் பெருதவராய்,
சனற்குமார முனிவரை யடைந்து, பூமாவித்தையினைப் பெற்று துக்கத்
தை நீக்கினரென்று, உபநிடதங்களில் பிரசித்தமாயுளது ; அதற்கு மூர
ணுறத்தெரிந்து பொய்புகன்றமையின், மீளா நரகத்திற் காளாகின்றனர்.
ஆஹா ! இவர் மதிமானுயிற்றே ? பிரமாணமின்றி வெற்றுரை தொடுப்
பாரா ? தொடார் தொடார். யாம் பிரமாணங் கேட்பின், "பச்சாம்பேட்
டைச் சத்தியோஜாத சிவாசார்யரென்ற இரத்தின குருக்கள்" கோறல்
செய் தச்சிட்ட, ஆகமப் புத்தகங்களில், அவராற் புகுத்தப்பட்ட வியா
கரண விருத்தமான பிழைச் சுலோகங்கள் இருப்பின் அவற்றைப்பெரும்
பிரமாணமாகப் பறையறைவித்தாற்போன் றறிவிப்பர். அவ்வாருய
சுலோகங்களும் ஆகமங்களிலின்றென்றே துணிவாகக் கூறலாம்.

"தொம்பதந் தற்பதந் தோன்று மசிபத
நம்பிய சீவன் பரசிவ னாய்கிற்கு
மம்பத மேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்திதானே". 2441

கடுஞ்சுத்த சைவம்.

"நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று மானென்றுஞ் சாற்றகில் லேனே". 4

சம்பிரதாயம்.

"நானென நீயென வேறில்லை 11

"அவனு மவனு மவனை யறியார்
அவனை யறியி லறிவானு மில்லை
அவனு மவனு மவனை யறியில்
அவனு மவனு மவனிவ னாமே" 12

உடலிற் பஞ்சபேதம்.

"தானவ னாகிய தற்பரம்" 13

பராவத்தை.

"இவனும் அவன் வடிவாமே" 9

நின்மலாவத்தை.

"தானே சிவமான தன்மை தலைப்பட" 11

"தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே". 15

"தானவ னாகுஞ் சமாதிகை கூடினால்" 16

"தானவ னாகிய ஞானத் தலைவனை" 21

முப்பதம்.

தொம்பதந் தற்பதந் தோன்று மசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவ னாய்கிற்கும். 5

முச்சூனியம் தொந்தத்தசி.

"சீவன் பரன்சிவ னாமே" 6

தத்துவமசி வாக்கியம்.

"ஆகிய அச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத இலக்கணைத்
தாருப சாந்தமே தொந்தத் தசியென்ப" 3

" தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபத
நம்பிய முத்துரி யத்துமே னூடவே
யும்பத மூப்பத மாகு முயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே " 4

**மகாவாக்கியம்.**

" நீயது வானா யெனநின்ற பேருரை
யாயது நானானே னென்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாமே " 10

**ஞானதுரு தரிசினம்.**

" திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே " 4

**ஞானோதயம்.**

" நானென்றுந் தானென்று நாடினே னாடலு
நானென்றுந் தானென் றிரண்டில்லை " 8

**அணைந்தோர்தன்மை.**

" சித்தஞ் சிவமாய் மலமூன் றுஞ் செற்றவர்
சுத்தஞ் சிவமாவர் தோயார் மலபந்தம் " 13

**கேவல சகல சுத்தம்.**

" தன்னை யறியா துடலை முன் றானென்றான்
தன்னைமுன் கண்டான் றுரியன் றனைக் கண்டான்
துன்னு துரியமு மீசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே " 38

**சன்மார்க்கம்.**

" தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதார் தீரார் பிறப்பே " 1480

**தவதூடணம்.**

"ஓதலும்வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே". 1633

"கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் தொடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே". 1634

"சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவாற்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோ ருறவுண்டாற்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்
சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே". 1644

அறிவுதயம்.

"அறிவு வடிவென் றறியாத வென்னை
அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
யறிவு வடிவென் றருளா லறிந்தே
யறிவு வடிவென் றறிந்திருந் தேனே". 2357

"அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
யறிவுக் கறிவல்ல தாதார மில்லை
யறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை மீறுக டாமே". 2358

"என்னை யறிந்திலே னித்தனை காலமு
மென்னை யறிந்தபி னேது மறிந்திலே
னென்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை யுசாவுகின்றானே". 2366

மகா வாக்கியம்.

"துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவைமன்று வந்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசிவே தாந்த
சிவமா மதுஞ்சித் தாந்தவே தாந்தமே". 2571

விசுவக்கிராசம்.

"இரும்பிடை நீரென வென்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
யுரம்பெற முப்பா ழொளியை விழுங்கி
யிருந்தவென் னந்தி யிதயத்து ளானே". 2592

வாய்மை.

"எல்லா மறியு மறிவு தனைவிட்டு
எல்லா மறிந்து மிலாபமங் கில்லை
யெல்லா மறிந்த வறிவினை நானென்னி
லெல்லா மறிந்த விறையென லாமே". 2596

ஞானிசெயல்.

"முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பார்க
டன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
நன்மையி லைம்புல னுடலி னுலே". 2610

"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே". 2611

"மன வாக்குக் காயத்தால் வல்வினைமூளு
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்று
மனவாக்குக் கெட்டவர் வாதனை தனால்
றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே". 2612

வரைவுரைமாட்சி.

"மனமாயை மாயையிம் மாயை மயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்றுமில்லை
பிணமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந்தானே". 2956

ஆகம வாக்கியம்.

பாசபத்தஜேஜீவா பாசமுத்ததே சதாசிவ.
சிவஞ்ஜீவோ ஜீவோசிவ சஜ்ஜீவோ கேவலசிவா.
ஜீவோசிவோ சிவோஜீவா சஜ்ஜீவோ கேவலசிவா.
இஷ்டே பூர்வம் ஆத்மா ஏகமேவா.
சரீர பின்னம் பராமாத்ம னேகம்.
சர்வசாக்ஷி சிவோகம்.
பிரத்யே காத்ம சிவோகம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்.

" எத்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செயுமவ னுறையுமிடம்"

" குற்றநீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்"

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

" பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி"

" இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனாய்."

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

" ஊனாய் யுயிரானா யுடலானா யுலகானாய்"

என்பனவாதிப் பிரமாணங்கள் சிவனுக்குரிய எண்குண முதலி யன மோக்ஷ காலத்தில் ஜீவனுக்கு வந்து பொருந்துகின்றனவென்றும், ஜீவத்வம் நீங்கிவிடுகின்றதென்றும் வெள்ளிடை மலைபோல் விளக்கியிருப்

யவும், சர்வோத் கிருஷ்ட பிராமண குலத்திலவதரித்து 104 கிரந்தங்களின் கருத்தாவாய் விளங்கிய ஸ்ரீமந் அப்பய்ய தீக்ஷிதயோகீந்திரரவர்களும் தாம் இயற்றிய "சித்தாந்த லேசசங்கிரகம்" என்னுங் கிரந்தத்தில் ஆக்ஷேப சமாதான வாயிலாய், ஜீவத்வ நீங்கி சிவத்துவம் வந்து பொருந்துகின்றதென்று ஸ்பஷ்டமாக (10) பக்கம் வரைந்திருக்கவும் அதற்கு மாறாய், மோக்ஷகாலத்தில் ஜீவத்துவம் நீங்கா, சிவனுக்குரிய எண்குணங்கள் ஜீவனைவந்தடையா என்று கொள்வரேல், முற்கூறிய பிரமாணங்களோடு விரோதித்து, அம்முதியோர் வாக்கினைப் பரமப்பிரமாணமாகக் கொள்ளாததாலுளதாம் பாவத்திற்காளாகி, ரௌரவநரகத்தை யடைவதன்றி யிவ்வுலகத்தினும் பரலோகத்தினும், வேறு எப்பிரயோசனத்தை யடைவர்? யாம் மாத்திரங்கூறுவதன்று; எம்முன்னோர் கொள்கையும் இங்ஙனமே யாமாலோ வென்பரேல், நன்று நவின்றீர். நும்முன்னோர் யாவர்? ரௌரவாகமத்திலுள்ள பாசவிமோசனப் படலத்தின், பன்னிரண்டு சுலோகங்களுக்குத் தமிழிற் பேருரை யெழுதிய சிவஞான சுவாமி யென்பரேல், அவரும் இவர் போன்றே, திருவாசகத்திற்கூறிய எண்குணங்களும், அப்பய்ய தீக்ஷிதயோகீந்திரரவர்களால், சீவனுக்கு வந்து பொருந்துகின்றதென்று நாட்டியிருப்பதனைக் கற்றறியுந் திறனின்றித் தமது பேருரையின்கண் மாறாய், மனம் போனவாறு, விரிவாகப்பொறித்து, உண்மைப் பொருள்விளங்கா திடர்ப்பட்டவராகலின், அவரைப்பெரியாரோடொருங்குவைத்தெண்ணாது வேறாயொதுக்குக. எவர் பொதுப் பிரமாணமாயுள்ள தேவாரம் திருவாசகம் திருமந்திரம் முதலிய சாஸ்திரங்கட்கு மாறுபட்ட கொள்கையுடையரோ, அவர்கள் எவ்வித மஹிமை யுடையோ ராயினும், பெரியாரன்றெனவொதுக்குவது சர்வேஸ்வர சம்மதமாம்.

சிவனுக்குரிய எண்குணங்கள் சீவனுக்கு முரியனவென்று, கூறுகின்றீ ரென்பரேல், இவரும் எம்மீது புகன்ற திருட்டுக்குற்றத்திற்கு உடன்பட்டவராகாது, எஞ்சியிருப்ப தெவ்வாறாம்?

நம்மன்பர், சிலந்திவருடச்சுகம்போல முன்பின் உணர்ச்சியின்றி அவசரப்புத்தியால் வேதாந்திகளைத் திருடரென் றெழுதினர். இப்பொழுது வேதாந்திகளாய யாம், அத்திருட்டுத் தொழிலை அவர் மதத்தினர்க்கும் அவருக்குமே பரம்பரைப் பட்டமாகக்கொடுத்து விட்டமையின், சந்தோஷத்தோடு பெற்று, சூரியர் சந்திரர்களுள்ளவரையும் இப்பட்டத்தோடு மகிழ்ந்திருப்பாராக.

**13**-வது பக்கத்தின்கண் "அகம்பிரமவாதிகள்—இச்சனகர் நாம் பிரமமென்னு மார்க்கம் சிவத்துரோகமே தந்தது என்று பயந்து நீங்கி வாந்தித்துத்தள்ளிய அகம்பிரம மார்க்கத்தையே உண்மையெனச் சிரமேற்கொண் டொழுகுவதென்னையோ?" என்றுரைத்தனர்.

அன்பர்களே! இதுகாறும் வரைந்த பிரமாணயுக்தி நியாயங்களால், பிரமைவாதம் என்னும், சுருதி சிகாமாய, அத்வைதக்கொள்கையினையுடையவர் சனகரென்று ஸ்தாபித்தமையின், இவர் கூற்றுக் கூற்றுக்கிரையாயவாறு காண்க.

அத்வைத மதத்தினைச் சிவத்துரோகமான மார்க்கமென்று கருதி, வாந்தித்துத்தள்ளினர் சனகர் என்று, கலிகாலத்திலவதரித்த மகாத்மியத்திறைற் கட்டிவிட்டனர்.

வேதத்திற்கூறிய மார்க்கம் வாந்தித்துத்தள்ளிய மார்க்கமாமேல், வேதத்திற்குப் பாஷியமாமென்று, இவரினத்தவர் தம்பட்டமடிக்கும், ஆகமத்திற் கூறுது கூறிய இவரது மார்க்கம், காகவிஷ்டைக்குச் சமானமாமேயென்று கூறுவதன்றி வேறு உவமனின்றாம். வேதம் மூலமென்றும், ஆகமம் அதன் உரையென்றும், இவரினத்தாரும் இவரும் கூறுவதனையாராய்ச்சிசெய்யாது, மூலமாய வேதத்திற்கூறிய அத்வைத மார்க்கத்தினை வாந்தித்துத்தள்ளியதென்று, பூர்வசென்மத்தில் ஈழதேசத்திற் செனித்துச்செய்த பாவவிசேஷத்தால், வாயில் வந்தவாறு தூஷித்து அதோகதியடைய நினைக்கின்றனர். இன்னும் வேதத்திற் கூறியமார்க்கம் வாந்தித்துத்தள்ளிய மார்க்கமாகவே, அம்மார்க்கத்தினையுடைய வேதமும் வாந்தித்துத்தள்ளியதாகும். ஆகவே அவற்றின் பாஷியமாகிய இவரினத்தார் கூறும் ஆகமமும் காகவிஷ்டைக்குச் சமானமேயாம்.

நிந்திக்கப்புகுந்தவர் பின்னர் இடையூறு வருமென்று கருதாது, தம் ஆகமத்திற்காதாரமாயுள்ள வேதத்தினை ஆஸ்திகர்கள் மனத்தினுங்கருதாத் தூஷணை செய்தனர். ஆதாரமின்றி ஆதேயமிராதாகலின், ஆதாரம் தோமுறில் ஆதேயமும் அத்தோமுக்குட்படாது எஞ்சியிருத்தல் எவ்வாற்றானும் இயல்புடைத்தன்றாமென்று, நம்மன்பர் மூடத்தன்மையால், பொறித்துத் தமதாகமத்திற்குக் காகவிஷ்டைக்குச் சமானமாந்தன்மையாய பட்டத்தினையெம்மிடத்திருந்து மிக ஆதரவோடு பெற்றனர். இதுதான் இவர் வேதபாஹ்ய ஆகமத்திற்கு வருந்திச் சம்பாதித்துக்கொடுத்த கௌரவமாகும். இவ்வாறாய ஆக்ஷேபமும், இவர் வாய்மொழிகொண்டே, இயற்றியதன்றி, யெமது கருத்தன்றாம். எமக்கோ, பரமேசுவரன் பகர்ந்த பலவாகமங்களும், தேவாரம் திருவாசகம் திருமந்திர முதலிய மகிமைவாய்ந்த பொதுநூல்களும், சிரோ பூஷணமாகவுடன்பாடேயாம். நம்மன்பரோ, "திருப்பதி நாவிதன் க்ஷவரம் பண்ணினதுபோன்று" என்னும் உலகவழக்கப்படி, பூலோகத்திலுள்ள சகல சாஸ்திரங்களும், தமக்கு உடன்பாடென்று சொல்லிக்கொண்டு முன்பின் சம்பந்தங்களுணராது, ஒவ்வொரு வாக்கியங்களை யெடுத்துப் பிரமாணமாகக் காண்பிப்பர். என் செய்வார் பாவம்! வேதாந்தநூற்களுள் யாண்டாவது முகங்கொடுத்தால் இவர்க்கோரடிதான் கிடைக்கிறது? கவிவடிவமாய நாலடி கிடைத்தால் இவர்க்கிடையூறாய் விடுமன்றோ? அந்நூல்க

ருள், வேறுவாக்கியங்களையெடுத்து, இவர் கோட்பாட்டிக்கு மாறுபா டென்று பிறரறிவிக்கின், அவ்வாக்கியம் எமக்குடன்பாடன்றென்றாவது, அல்லது பிறமதத்தினர் திரித்துவிட்டன ரென்றாவது, வடதேயத்தாரிய சமாஜிகள்போன்று வெற்றுரைகூறி, விரைந்தோட யத்தனிப்பர். வட தேயத்து ஆரியசமாஜிகளை இவரினும் மிக நல்லவரென்றே கொள்ள றகும். ஏதனாலென்றால் "அவர்கள் மூலமாய வேதத்தினை அப்பிரமாண மாகக் கொள்வதில்லை. வேதத்திலுள்ள மந்திரபாகம் பிராமாணம். பிரா மணபாகம் பிராமாணமன்று. ஸ்மிருதிகள் தங்கொள்கைக்குரியன பிர மாணங்கள், மற்றைய அப்பிரமாணம். புராணம், போப்புக்கள் புசிப் பான் புகன்ற பொய்க்கதையாகும்" என்பர். மற்றையவற்றையெல்லாம் ஸ்பரிசிக்க யோக்கியமற்ற அப்பிரமாணமாகக் கொள்ளினும், தமக்குப் பரம ஆதாரமாயுள்ள வேதத்தின் மந்திரபாகத்தினை, பரமேஸ்வரன் பிரத்தியக்ஷமாயெழுந்தருளி வந்ததுபோன்று கொள்ளுவர்.

வேதபாஹ்ய பாசுபத தாந்திரிக துவித சைவ துர்வாதியாகிய நம் நண்பரோ, "வட்டிக்காசைப்பட்டு முதலிழந்தான் கதை"போன்று, தமது ஆகமத்திற்கு முக்கிய மூலமாயுள்ள வேதத்தினைப் பிரமாணமாகக்கொள் ளாது முதலிழந்தவன் போலாயினர். அவ்வேதத்தின் வழிநூலாய ஸ்மிருதிபுராணம் இதிகாசம் ஆகமங்களை நிராதாரமாய்ப் பரமப்பிரமாண மாகக்கொண்டு, வட்டிக்காசைப்பட்டவன் போன்றுமாயினர். இம்மட்டோ நம்மன்பர் கலம் வைக்குமிடமெல்லாங் கலாம் விளையும்படியான கருத்துட னே வைப்பர். இஃதிவரதியற்கைக்குணமேயாகும். அதை நிவிர்த்திக்க பரமேஸ்வரன் மான் மழு நீலகண்ட திரிநேத்திர சதுர்ப்புஜனாய் எழுந் தருளி வந்து இதமொழிகளா லுபதேசிக்கினும் முடியாதாயின், மற்று யாவரே மையல்கொண்டவைய புத்தியினை நிவிர்த்திக்கவல்லார். "இடம் பட மெய்ஞ்ஞானங் கற்பினுமென்றும், அடங்காதா ரென்று மடங்கார்" என்னும் நாலடிக்கு இவரே யிலக்காயினார். நிற்க,

நாம் எழுதும் இடங்கடோறும், எவ்வகைச் செய்யுளுக்கும் 'சுருதி சுருதி' என்று மகுடங்கொடுத்து, 'வாகீசசுருதி' 'மணிவாசகசுருதி' 'ஞானசம்பந்தசுருதி' 'சுந்தரசுருதி' 'பட்டணத்தார்சுருதி' 'உமா பதிசுருதி' 'திருவிளையாடற்சுருதி' 'பெரியபுராணச்சுருதி' சிவஞான சித்திச்சுருதி' 'திருமந்திரச்சுருதி' 'திருவாசகசுருதி' 'தேவாரச் சுருதி' 'கந்தப்புராணச்சுருதி' 'பொய்யாமொழிச்சுருதி' என்பனவா கப் பலவாறுஎழுதுகின்றனர். சுருதியென்னுஞ் சொற்குப் பொருளுணர்ந் திருப்பாராயின் "எல்லுசெட்டிலக்க ஏகலக்க" என்று யாவற்றையும் வியாவகாரிகத்தில், அபேதப்படுத்திச் சுருதியென்னும் மகுடத்தால் வழங்கார். தம்மை முத்திதசையின் கண்ணும் வேறாயிருப்பவரெனப் பாரமார்த்திக பேதத்தினைக் கொள்ளும் இவருக்கு வியவகார காலத்திற் புல திறப்பட்ட நூல்கட்கு, ஒரு திறத்தனவாகச் சுருதியென்னும் பொரு டோன்றியது. இவரது தபோவிசேடமேயாம். சுருதி என்னுஞ்

சொற்குப்பொருள், கேட்டற் பரம்பரையாக வருதல் என்பதாம். அத்தன்மையது ஒருவராலு மியற்றப்படாதது மெழுதப்படாததுமாய வேதமொன்றற்கே யுரியதாம். அவ்வாறின்றிக் கலியுகமுண்டானதன்பின் பிறந்தவர்களால் செய்யப்பட்ட நூற்கட்குக் கேட்டற் பரம்பரையானே வருதலென்று சொல்லுதல் ஒருவாற்றானும் ஒவ்வாதாம். ஒருவராலியற்றப்பட்டு ஆதியுடைய நூலுக்கு முன்னின்மையாய பிராகபாவம் உளதாகலின் பரம்பரை யென்னும் அநாதித்தன்மை பொருந்தாதாம். பின்னும் மூற்கூறினவெல்லாம் சுருதிகளா மேல், ஸ்மிருதி, புராணம், இதிகாசம், ஆகமம், அங்கம், எனப் பலபேதமாகக் கூறுஞ்சொற்களுக்கு இலக்கியப் பொருள்களின்றி யொழிதல் வேண்டும். ஒழியவே, உலகத்தில் சப்தப் பிரபஞ்சத்தானுளவாம் பேதம் ஒழிந்து, எந்நாளும் அபேதமொன்றே, சேது முதல் ஹிமாசல பரியந்தம் நிலைத்து நிலவுறுமென வுணர்வாராக. வேதாந்திகளாய யாமோ, வியவகாரத்திற் பேதமும், பாரமார்த்திகத்தில் அபேதமுங் கூறுகின்றோம். வீணுச்சிரமங்கொண்ட நம் நண்பரோ வியவகாரத்தில் பேதமும், மோக்ஷதசையிற் பேதமுங் கூறுகின்றனர். இவரது புத்தி, இவர் முன்னோரின் புத்தியினுங் கூரியதேயாம்.

இதுகாறு மேற்குறித்தவற்றினையே சுருதி யென வரைந்துவந்தனர். இனி "ஆறுமுக நாவலர் சுருதி" "அம்பலவாண நாவலர் சுருதி" "தில்லைநாத நாவலர் சுருதி" "செந்திநாதையர் சுருதி" "சுவாமிநாத பண்டிதர் சுருதி" "இராமநாதச் செட்டியார் சுருதி" "அழகப்பச்செட்டியார் சுருதி" "பரிதிமால் கலைஞன் சுருதி" "பண்டாரச் சுருதி" என்பனவாக எழுதினும் எழுதுவர். சில நூற்களில் தாமியற்றிய நூலைப் பிரமாணமாகக்கொடுக்க நேர்ந்துழி "சொக்கலிங்கச் செட்டியார் சுருதி" "சொக்கலிங்கச் சுருதி" "காரைக்குடி - ராம, சொ, சுருதி" என்றும், ஒருகால் தமது புத்திரன் ஜீவித்திருந்து, அறிவுடையோனாய், சில வாக்கியங்களெழுதின் அதனை யிவர் பிரமாணமாக எடுத்தாளவாய்ப்புழி, "இராமநாதச் சுருதி" "வாகீச சுருதி" "திருநாவுக்கரசு சுருதி" என்றும் நூல்களிலெழுதினும் எழுதுவர். இவர் மதத்தில் சுருதிபடும் பாட்டை அறிஞருணர்வாராக. அவரென் செய்வார் பாவம்? சங்கதோஷத்தான் மனத்திற்றோற்றியவை விரைவிலெழுதுகின்றார். எழுதியவற்றை அச்சிடப்பொருளை விரைவில் யாசிக்கின்றார். யாசித்தபொருளை அச்சாபீஸ் குருவுக்குத் தக்கணையாக வைத்து அச்சியற்றித் தரும்படிப் பிரார்த்தித்துக்கேட்டுக்கொள்ளுகின்றார். அதனினும் புத்தகத்திற்கு நேரே பெயர் கொடுக்கின், அச்சுவாகனக்குரு அச்சிடாரென்னும் பயத்தினால், வேறு பெயர் கொடுத்து வெளியிடுகின்றனர். வெளியிட்டபின் எதிரிகள் பார்த்து தக்க நியாயப் பிரமாணங்களோடு, கண்டனமெழுதி விடுப்பின், அதனைக் கண்ணுற்று, போலீஸ்காரரிடத் தகப்பட்ட திருடன்போன்று விழிக்கின்றார். சும்மாவிருப்பின் இத்தனை யிடர் வராதன்றோ! கலகம்

விளக்காது சும்மாவிருப்பின் உண்டவுணவு பரிணாமி யாதெனக் கருதி யிவ்வாறு செய்துவருகின்றனர்போலும், விரிப்பிற்பெருகும், அமைக.

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரிய ரென்பவருக்குச் சீட்டுக்கவி யெழுதி, பெற்றான் சாம்பானுக்கு முத்திகொடுக்கும்படி ஸ்ரீமந் நடராஜப் பெருமான் செய்தனரென்று கூறுகின்றனர். அப்பரமேசுவரன் எவ்வடிவத்தால் உமாபதி சிவாசாரியருக்குப் பிரத்தியக்ஷமாயினர்! மநுடவடிவத்தாலெனின், மநுடன் இவருக்குச் சிவனின்றிச் சீவனுயிருத்தலின், அம்மநுடன் வாக்குப் பிரமாணமாகாதாம். வேறு வடிவத்தால் எனின், அதனைத் தெற்றெனவரைவ தவர்கடன். அங்ஙனம் வரைவரேல் அதனையுங் கண்டனஞ் செய்தற்குக் காலமுங் கலமுமாய் இருக்கின்றாமென்றுணர்க. தில்லை மூவாயிரம் பிராமணருள் ஒருவராய உமாபதி தீக்ஷிதரென்னும் உமாபதி சிவாசாரியர், சமஸ்கிருதஞான முடையவராயிருக்க, சர்வஞ்ஞனாய பரமேஸ்வரன், சமஸ்கிருத பாஷையில் சுலோக ரூபமாக எழுதியனுப்பலாமே. அவ்வாறின்மையின், அக்கூற்று இவரினத்தவருள் தொன்றுதொட்டுவரும் வழக்கேயன்றி வேறு விசேடமின்றெனக. அவ்வுமாபதி சிவாசாரியர் "தாம் பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண்டாங்கதுவே—நாம் பிரமமென்பவர்பா னண்ணாதே" என்று கூறியிருக்கின்றனர் என்றும் "இக்காலத்திற் சிலர் இதே நிலையரா யிருந்தும், நாங்கள் மாயாவாதிகளல்ல, வேதாந்திகளென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். அது காராட்டை வெள்ளாடென்பதுபோன்ற போலி வழக்கமே" என்றும் வரைந்தனர்.

உமாபதி சிவாசாரியர், பரமேஸ்வர அவதாரபூத ஸ்ரீமந் மகாதேவமாஹாஷ அநுக்கிரக லீலா விக்கிரகமாகிய ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகளின் பிரபாவம் உணர்தற்குமுன், அவைதிகர்களின் கூட்டுறவால் மருண்டு முற்கூறிய செய்யுட்கூறியிருக்கலாம். அவ்வாறு கொள்ளாதொழியில் பௌஷ்கராகமத்தில் பதிபடலத்தில் பதினைந்தாவது சுலோகவியாக்யான அவசரத்தில் "உபநிஷத்களின் வியாக்கியானஞ் செய்பவர்களாயும், மஹானாயும் உள்ள ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால், சுபாலோப நிஷத்து வாதத்தன்மையால் வியாக்யானஞ் செய்யப்படாமையின்" என்று வைஷ்ணவர்களைக் கண்டித்தற்கு, சிவரகவியம், நவமாமிசம் பதினாருவதத்தியாயத்தில் 46 சுலோகங்களாலும், மற்றும் ஆறு புராணங்களாலும், ஈஸ்வர அவதாரமென்று புகழ்ந்து கொண்டாடப்பெற்ற ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளையே, உபநிஷத்களுக்கு வியாக்யானஞ் செய்பவர்களென்றும், அவர்களால் சுபாலோபநிஷத் அநுவாதத்தன்மையால், வியாக்யானஞ் செய்யப்படவில்லை யென்றும் பிரமாணங்காட்டிய, சர்வோத்கிருஷ்ட சம்ஸ்கிருத பாஷையிலுள்ள கெம்பீர வாக்கியங்கட்கு இத்தமிழ் வாக்கியம் முரண்படுமாகலின், முரண்படாவாறு யாங் கூறிய நெறியினையே கடைப்பிடித்தொழுகுக.

இன்னும், வேதாந்திகள் தங்களை வேதாந்திகளென்று சொல்லிக்கொள்வது காராட்டை வெள்ளாடென்று சொல்லும் போலி வழக்கமென்று நாவிற் புழுப்புழுத்து வைதரணிநதி தன்றுண்டு தாண்டி வைவஸ்வதபுரம் செல்லவேண்டுமென்னுங் கருத்துடனேசெப்பினார்போலும். காராட்டை வெள்ளாடென்று சொல்லுகின்றனரென்றனரே, அக்கூட்டத்தினுள் வெண்மை நிறத்தினையுடைய ஆடிருப்பின் அதனை நம்நண்பர் புதுப்பெயரால் காராடென்று கழறுவர்போலும். வேதாந்திகள் தம்மை வேதாந்திகளென்று கூறுவது, அவர்கட்குரியதேயாகும். அவர்களை மாயாவாதிகளென்று சொல்லுமிவர்தாம், உரித்தல்லாத பேரால் வழங்குகின்றனர். மாயையை ஜகத்திற்கு முதற் காரணமாகக்கூறும் சாங்கிய மதத்தரும், இவரினத்தவரும் மாயாவாதிகளாவர்களேயன்றி, உலகமெலாம் பிரவசித்தமாய் யாவருமொப்புக்கொண்ட வேதத்தின் முடிவாய உபநிஷத்களிற் பிரதிபாதிக்கப்படும், நிர்க்குணப் பிரமப்பொருளினையே, தமது சொரூபமாகக்கொள்ளும் வேதாந்திகள் ஓர் காலத்தும் மாயாவாதியராகா ராகார். இனம்பற்றி மாயையைக்கூறுபவர் மாயாவாதி யென்று சொல்வீரேல், உமது நூலில் இனம்பற்றி நிர்க்குணப் பிரமத்தினையுங் கூறியிருப்பதினால் நீரும் நிர்க்குணப்பிரமவாதியாகி உமாபதி சிவாசாரியரது நிந்தாவாக்கியத்திற்கிலக்காகாது, தப்புதற்கு "ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந்தான்முந்துறும்" என்றபடி உமது ஊழ்வினை விடாதூர்க்குமென்றுணர்வீராக.

அறிவிற் சிறந்தபெரியோரே!

வேறோர் வாதந்தொடுக்கின்றார். அதனைச் சற்றுக் கவனித்து இவரது கற்றறிமூடத் தன்மைக் கிரங்குவீராக. "வேதமுடிவாய உபநிடதங்களெல்லாம் பதிபசுபாசங்கள் அநாதி நித்தியங்களென்றே கூறுகின்றன" என்றும், "சில உபநிடதங்கள் சீவன் ஈஸ்வரன் ஜகத்தெல்லாம் பொய் என்று கூறுகின்றன என்று அவர்கள் கூறுகின்றார்க"ளென்றும், "அவ்வுபநிடதங்கள் சிலவே" யென்றும், "பொய்யென்று கூறுவதும் கருத்து வேறே" என்றும் கருதியவாறெல்லாங் கலந்தொடுத்துக் கறைமிடற்றண்ணலது கடாக்ஷவீக்ஷண்ணியத்திற் கருகராகா தவலமாய் அதோகதியடைய ஆரவாரஞ் செய்கின்றனர். முன்னர் "உபநிடதங்களெல்லாம் பதிபசுபாசம் அநாதி நித்தியங்களென்றே கூறுகின்றன" என்றார். பின்னர், "சிலவுபநிடதங்கள் பதிபசுபாசங்கள் பொய்யென்று கூறுகின்றன" என்றார். இவ்விஷயத்தில் இவரது விஞ்ஞானமயகோசத்தின் விஹீனத்தன்மை வெள்ளிடைமலைபோல் வெளியாயிற்று. எல்லாவுபநிடதங்கள் என்னுஞ் சொல்லின்கண், சிலவுபநிடதங்க ளென்னுஞ் சொல் அடங்கியிருக்கின்றதென்பதைச் சாவதானமாயுணர்ந்திருப்பாராயின், பிறர் கடாவுதற்குரிய "எல்லாம்" என்னுஞ்சொல்லை யுபயோகிக்காது "அநேகம்"என்னுஞ்சொல்லை யுபயோகித்திருப்பர். "அவசரக்காரனுக்குப் புத்திமட்டு"

என்ற வாக்கின்படி சாவதானமனமிலர்க்கு ஒன்றுந்தோற்றாதென்றுணர்க. எல்லா வுபநிடதங்களிலும், பதிபசுபாசங்கள் அநாதிநித்தியங்களென்று கூறியிருக்கின்றன என்று பிரமாணங்களொன்றுங் காட்டாது, தமது வாக்கியத்தினையே, பிரமாணமாக வொப்புவரென்று கருதி குளறுபடை செய்தனர்போலும். உபநிஷத்துக்களைத் தக்க ஆசாரியர் வாயிலாகக் கேட்பதற்கு "இளமையிற்கல்" என்னும் ஒளவை மூதாட்டியின் வாக்கின்படி, இளமைப்பருவம் வேண்டும். நம் நண்பர், அற்பப்புண்ணியத்தாற் பாண்டிநாட்டிற் பிறந்திருப்பினும், ஆகூழ்வலியின்றிப் போகூழ்வலியின் மிகுதியினால், ஈழநாட்டார் கூட்டுறவுற்று, நற்கல்வி கற்காது, இளமைப்பருவமனைத்தினையும் "விழலுக்கிறைத்த நீர்போல" வீணாக்கிவிட்டனர். அங்ஙனம் சம்ஸ்கிருதபாஷையின் ஞானமின்றிய நண்பர், உபநிடதங்களெல்லாவற்றினையும் எங்ஙனம் ஆராய்ந்தனர்? உபநிடதங்களை யாராய்வதற்கு தர்க்கம், வியாகரணம், பூர்வமீமாஞ்சை, சாங்கியம், யோகம், ஸ்மிருதி, முதலிய சாஸ்திர ஞானங்களின் சாதனம் வேண்டும். அவற்றினைக் குருவையடைந்து அப்யவித்தற்கு, உத்தம அதிகாரியாய புருஷனுக்குப் பதினைந்தாண்டுகள் செல்லும். அவ்வாறு அப்பியாசஞ்செய்யாது, ஆரிய பாஷையின் வாஸனையுமின்றிய நம் நண்பருக்கு உபநிஷத்துக்களெல்லாம் பதிபசுபாசங்கள் அநாதி நித்தியங்களெனக் கூறுகின்றன என்று, குஜிலிக்கடையில் அச்சிட்டிருக்குங் காத்தவராயன் பாட்டுப்போன்று, பொருள் விண்டது, எந்தக்குருமூர்த்தியின் பாதசேவையின் விசேஷத்தாலோ யாமறிகிலேம். எவ்வாறாயினும், அரிதிற்கிடைக்கும்படியான ஆரிய பாஷைச் சொற்களின் ஞானமின்றியே, அதிசுலபமாய், உபநிஷத்துக்களின் பொருள் விண்டது பூர்வசென்மத்திற்செய்த புண்ணிய புஞ்சபரிபாகத்தினாலே யாமென்பது, முன்பின் முரணுற வெழுதும் வியாஜவாயிலாயுணரலாம். தமக்கு உபநிஷத்துக்களின் பொருளையறியும் ஆற்றலின்றென்பதை "இவ்விருவகை வேதாந்தங்களில் கொள்ளத்தக்கன எவை என்பது சிறுவருக்கும் விளக்கமாகும். விரிப்பானேன்" என்று அறிவித்திருக்கின்றனர். உபநிஷத்துக்களில் கொள்ளத்தக்கன இவை தள்ளத்தக்கன விவை யென்பது சிறுவருக்கு விளக்கமாகுமென்றார். இவர் சொல்லிய சிறுவர் அறிவான் முதிர்ந்தோரும், வயதாற் சிறியவருமாய பக்குவிகட்கு விளங்குமேயன்றி, அறிவாற் சிறியோரும், வயதான் முதியோருமாய, நம் நண்பருக்கும், நண்பர் மதத்தினர்க்கும் விளங்காதென்பதை "என்னப்பன் குதிரினுள் இலன்" என்னும் வாக்கிய மானத், தாமே விளக்கினர். தம்மனச்சாக்ஷிக்கு விரோதமின்றிக் கூறினராகலின் உபநிஷத்துக்களின் பொருள் விள்ளா தொழியவே இவர் மதத்தினர்கள் அந்தபரம்பரா ந்யாயமாகக் கூறிவரும் பொய்ம்மொழிகளை மெய்ம்மொழி யென மருண்டு, "மருண்டவன் கண்ணுக் கிருண்டதெல்லாம் பேய்" என்னும் வழக்கின்படி கைகூசாது கலமெடுத்து, மனங்கூசாது நினைந்து வரைந்தனர். இதுகாறும்

பேசியவற்ருல், உபநிஷத்துக்களைப் பகுக்குமாற்றல் இவர் மதத்தினர்க்கின்றென்பது தெற்றெனவெளியாம். வேதங்களில் தள்ளத்தக்கனவென்றுங் கொள்ளத்தக்கனவென்றும், இருபகுப்புண்டென்கின்றார். அதுபோன்றே தேவாரத்திலும், திருவாசகத்திலும், திருமந்திரத்திலும், சிவஞானபோதத்திலும், திருவிளையாடற்புராணத்திலும், கந்தபுராணத்திலும், பெரியபுராணத்திலும், வேதபாஷியமாகிய ஆகமங்களிலும், தள்ளத்தக்கனவென்றுங் கொள்ளத்தக்கன என்றும் இருபகுப்புண்டாம். உண்டாகவே, இன்னவை கொள்ளத்தக்கனவென்றும், இன்னவை தள்ளத்தக்கனவென்றும், அந்நூற்களை யாராய்ந்து முறையாக அச்சிட்டு வெளியிடுதலவர் கடனும்.

"அர்த்தசரதீய நியாயம்" போன்று சிலவற்றைத் தள்ளுவதற்கு, உபநிஷத்துக்கள் செய்வானேன்? தள்ளுதலென்றால் ஒருவருக்கும் பயனற்றதென்று பொருளாம். ஒருவருக்கும் பயனற்றவொரு பகுதியாய நூலைச்செய்வானேன்? அதுபோன்று தள்ளத்தக்கவொருவருக்கும் பயனற்ற ஆகமப்பகுதிகளைச்செய்த ஈஸ்வரன் எப்பயன் குறித்துச்செய்தனரோ? அதுபோன்றே நால்வரும், திருமூலநாயனர், பரஞ்சோதி முனிவர் முதலியோரும், வீண்சிரமப்பட்டு, ஒருவரும் படித்தற்குத் தகுதியற்ற பகுதியாய செய்யுட்களை யெப்பயன் கொண்டு செய்தனர்? அவ்வாறு தள்ளத்தக்க செய்யுட்களை, சிவ சன்னிதானத்திற்படிக்கும் பண்டாரங்கள், எவ்வதோகதியை யுறுவரோ? அவ்வாறே, நம் நண்பரியற்றிய "வீரசேகரமணிமாலை" என்னும் நூலினும் கொள்ளத்தக்கதும் தள்ளத்தக்கதுமாய, இருபாற்பட்ட செய்யுட்களுளவாமே. அவற்றுள் தள்ளத்தக்கதன் பாற்படுஞ் செய்யுட்களை, மிகப்பிரயாசையோடியற்றித் திரவியத்தைச் செலவு செய்து, அச்சிட்டு வெளியிட்டனர். அஃதெப்பயன் கருதியோ? அதனைப்படித்தலா லெப்பாவமுளதாமோ? அறிகிலேம்.

இதனால் ஒரு சாஸ்திரத்தினுள் தள்ளத்தக்கதென்றொரு பகுதியின்றென்று நாட்டியதாம். சோபானமுறையாக சகுணநிர்க்குணப் பிரமங்களைப் பிரதிபாதிப்பனவே யன்றி, நம் நண்பர் கூற்றின்படி தள்ளத்தக்கனவென்றொரு பாகத்தைப் பிரதிபாதிப்பனவன்று. உபநிஷத்துக்களையெல்லாம் எழுத்தெண்ணிப் படித்தவர்போன்று, "ஈசாவஸியம், கேனம், கடவல்லி, முண்டகம், பிருகதாரண்யம், கைவல்யம், சுவேதாஸ்வதரம், ஜாபாலம், பிருஹத்ஜாபாலம் என்பனவாதியாயுள்ள பேர்களைப் படாடோபமாக எழுதிவிடுகின்றனர். முற்புகன்ற உபநிஷத்துக்களை, எக்குருவாயிலாகப்படித்தனர்? படிக்காதிருக்கும்போழ்தே யித்தனைப்புரட்டுப் புரட்டு நண்பர், அற்பமேனும் ஆரியங்கற்றிருப்பாராயின், வாதங்களெழுதி யச்சிடுவதற்குப் புதிய அச்சாபீஸ்கள் திறக்கவேண்டிவரும். "உடையவன் குதிரையின் குணத்தினையறிந்து கோடுகொடுக்கவில்லை" என்னும் பழமொழிப்படி, பரமேஸ்வரன் நண்பர் குணத்தினை யுணர்ந்து ஆரியவித்தையின் ஞானமின்றி யறவே யழித்தனர்.

"பதிபசுபாசங்கள் அநாதி நித்தியங்கள்" என்றார். பாசம் எங்ஙனம் நித்தியமாம்? முன்னர்க்காண்பித்த திருவிளையாடற் செய்யுளாலும் "எந்தைநின், திருவளர்நாட்டங் கருணையிற்பெறலும் - யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி - மேவருநீயே மெய்யெனத்தோன்றினை—ஓவியப்புலவன் சாயல்பெறவெழுதிய—சிற்பவிகற்ப மெல்லாமொன்றிற் றவிராதுதடவினர் தமக்குச்—சுவராய்த்தோன்றுந் துணிவுபோன்றனவே" என்ற பட்டினத்துப்பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக்கோவையாலும்

**கந்தரநுபூதி.**

"இல்லே யெனுமா யையிலிட் டனைநீ
பொல்லே னறியாமை பொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவி லென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே".

**சிவானந்தமாலை.**

"எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
அங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய் பொய் பொய் பொய் பொய் பொய் பொய்."

**காசிகாண்டம்.**

கானலிடைத் தெண்ணீரும் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற்பட்ட, கூன்முதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மை குறிக்கிற்றீரும், ஆனவையோ னினையறியிற் றோன்றுசக மனைத்துமில்லா தழியுமாற்றால், தேனவிழ்பூங் கடுக்கையணி செல்வனின தாறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம்.

**திருவாசகம்.**

"மாயப்பிறப்பறுக்கு மன்னனடிபோற்றி",
"பொய்யாயின வெல்லாம் போயகலவந்தருளி",
"இந்திரஞாலங்காட்டிய வியல்பும்",
"இந்திரஞாலம் போலவந்தருளி",
"இருமுச்சமயத் தொருபேய்த் தேரினை",
"பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும்பேதை குணமாகாமே—தீர்த்தாய்",
"மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதிடாவகை நல்கி[னான்",
"இந்திரஞாலவிடர்ப்பிறவித் துயரோகுவதாகாதே",
"பொய்யாய செல்வத்தே",
"சுந்தரவேடத் தொருமுதலுருவுகொண்
டிந்திரஞாலம் போலவந்தருளி",

(உருவுகொண்டு வந்தது இந்திரஜாலமாகலின் உண்மையன்றென்பதாம்.)

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

"போய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பாகின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள், இம்மாயப் பெருங்கடலை"

"பொய்யினால் மிடைந்தபோர்வை"
"பொய்விராமேனிதன்னைப் பொருளெனக் காலம்போக்கி"

திருமந்திரம்—பராவத்தை.

"ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்"
"பொய்கண்ட மாமாயை"

பட்டினத்துப் பிள்ளையார்.

"மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
ஐயாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே"

சிவஞான வள்ளலார்.

"ஒன்று யுலகனைத்து மாஞயென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்க—குன்றாத
முத்தியினு மும்மதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு"

"ஓசை யொலியெல்லா மாஞய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்ச்சைவா—ஆசையெல்லாம்
அற்றவிட முத்தி யிலையோ வஃதெல்லாம்
உற்றவிட முத்திரிலை யோ"

ஷை அத்துவிதக் கலிவெண்பா.

"ஈசன்வே றியான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டு நினையென்று—ஓசையொடும்
வேத முடிவறிந்த வேதியரைக் கூடென்றான்
பேதமிலை யெல்லாம் பிரியென்றான்"

திருவிளையாடற் புராணம்—பரிநரியாக்கிய படலம்.

"அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித் தெனைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ."

5

என்பனவாதி பற்பல பிரமாணங்களாலும் பாசம் அநித்தியமென்று தெளிவாய் விளங்கவும், அதனை யுணராது, துவைதமலத் தடிப்பேறி வாய்கூசாது பாசம் நித்தியம் நித்தியமென்று பறையறைகின்றார். இனி யாயினும் இப்பிரமாணங்களை யுணர்ந் தடங்குவாராக.

இனியோர் வாதந் தொடுக்கின்றார். அதனாலும் இவரதறிவின் றன்மை யிவ்வளவென வெளியாம். "சில வுபநிடதங்கள் பொய்யென்று கூறுவதுங் கருத்து வேறு. பிரயோஜனமில்லாத பிரபஞ்சாதிகளையே யிறுகப்பற்றி நிற்குஞ் சீவர்கள், அப்பற்றுமுழுது நீங்கிச் சிவத்தையே பற்றி நின்றுய்தற்காகவேயன்றி வேறில்லை. சில வுபநிடதங்கள் காரணம்பற்றிப் பொய்யென்பதையே நிச்சயமாக்கொண்டு, எல்லாம் பொய்யே பிரமமொன்றே மெய், நாமே அப்பிரமமென்று கூறிப் பிரமசொத்தைத் திருட நினைத்துச் சிவத்துரோகமே கொண்டலையாமல்" என்று வரைந்தனர்.

பிரபஞ்சத்தைப் பொய்யென்று சொல்லியது காரணம் பற்றி யென்கின்றார். அக்காரணம் யாது? அதனை விரிப்பாராக. "பிரயோஜனமில்லாத பிரபஞ்சாதிகளை யிறுகப்பற்றி நிற்குஞ் சீவர்கள்" என்றார். பிரபஞ்சம் குரு ரூபமாயும் சாஸ்திர ரூபமாயும் இருந்து, மோக்ஷத்தைக் கொடுத்தற்குச் சாதனமாயிருக்க, அதனைப் பிரயோஜனமற்ற தென்கின்றார். மயலாகவாவது, பிரயோஜனமுடையதாகக் கருதி யொருவன் பற்றுவனேயன்றிப் பிரயோஜனமற்றதெனக் கருதிப் பற்றான். நம்மன்பர் கொள்கைப்படி, பாரமார்த்தப் பிரயோஜனமுடையதாயும், நங்கொள்கைப்படி வியாவகாரிகப் பிரயோஜனமுடையதாயுமுள்ள, பிரபஞ்சத்தினைப் பிரயோஜனமற்றதென "ஆய்ந்தோய்ந்து பாராதான் தான் சாகக் கடவன்" என்னும் பழமொழிப்படி, அவசரப் புத்தியா லெழுதி யவதிப்பட்டனர். இவர் கொள்கைப்படி சத்தியமாகவுள்ள பாசரூபமான பிரபஞ்சத்தினை, பொய்யென்று வேதாகமங்கள் கூறுமாயின், பொய்புகலும் அவ்வேதாகமங்களை யாவர் பிரமாணமாக வொப்புவர்! ஒப்பார். ஒப்பார். ஒப்பாராகவே, அவற்றினை யியற்றிய பரமேஸ்வரனும் பொய்யராவர். பொய்யராகவே, அவர் கூறிய வாக்கியம் பிரமாணமாகாவாம். ஆப்த வாக்கியத்தினையே யுலகத்திலுள்ளார் பிரமாணமாகக்கொள்வர். ஆப்தன் உண்மையுரைப்போன். பரமேஸ்வரரானவர், உண்மையாய பிரபஞ்சத்தினை வேதாகமங்களிற் பொய்யெனப் புகன்றமையின், ஆப்தராகார். ஆகாதொழியவே அவரியற்றிய நூல்களும் பிரமாணமிலவாய், மனிதர்கள் விதிவிலக்குகளையறிந்தநுட்டித்து நற்கதியடைய உண்மைநூலொன்றின்மையின் உலகத்தில், நாஸ்திகமே தலைப்பட்டு, யாவரும் அதோகதியடைவரெனவறிக.

இன்னும், "வேறு கருத்துப்பற்றி வேறு கருத்துப்பற்றி," என்று பறையறைகின்றார். அக்கருத்தைத் தில்லை மூவாயிரவருள் சிலரைப்

பலவாறாகத் தூஷித்து மாறு கைச்சாத்திட்டு, " மனோரஞ்சனி " யென்னும் மாதாந்தப்பத்திரிகை வாயிலாய் வெளியிட்ட, நம் நண்பருக்கு, அத்தில்லை மூவாயிரவரால் பூஜிக்கப்படும் ஸ்ரீமத்-நடராஜப்பெருந்தகையார், மணிவாசகப் பெருந்தகைக்கு உபதேசிக்க எழுந்தருளிவந்தாங்கு, காரைமாநகர் அறுபத்துமூவர் மடத்துக்கெழுந்தருளிவந்து, அர்த்தயாமத்தில், காடசுழுத்திசமயத்து அதிரகஸியமாக வுபதேசித்தனரா? இன்றேல், வேறு கருத்துப்பற்றிய அப்பிரஸித்த ஆபாசச்சுவடிகளேதேனும் வைத்திருக்கின்றனரா? இன்றேல், "பொக்கைவாயன் பொரிமாவை மெச்சினது போன்று" தமது காரியம் பலித்து விடுமெனை, ஒரு குருட்டு யோசனை செய்து, பொய்யென்றதொரு கருத்தைப்பற்றி யென்று இவரும், இவர் மதத்தினரும் தொன்றுதொட்டு ஊளையிட்டுவருகின்றனர். ஒருசாஸ்திரத்தின் பொருளை முன்பின் முரணின்றியாராய விரும்பின், உபக்கிரமம், உபசம்ஹாரம், அப்யாஸம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்னும் அறுவகை இலிங்கத்தினுல் விரோதமின்றி யுணரலாமலது, ஒரு கருத்துப்பற்றியதென்னும் வெற்றுரையாற் பலியாதென அமைவாராக. 'பிரமச்சொத்தைத் திருட நினைத்துச் சிவத் துரோகங்கொண்டலையாமல்' என்றார். திருட்டுத்தொழில்இவர்மதத்தினர்க்கேயன்றி, எம்மவர்க்கின்றாம். யாங்கள்பிரமாணமாகக்கொண்ட வேதமுதலியநூல்கள், எம்மவரதுசொருபங்கள் சிவசொருபங்களேயெனப் பிரதிபாதித்தலின், நாம் சிவம்என்றும், நாம் பிரமமென்றுஞ் சொல்லுவது, எங்கட்குரிய சொத்தினையே கூறுவதாம். நம்மன்பருக்கு, ஒருவாறு பிரமாணமாயுள்ள, தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய நூல்களும், ஜீவனை முத்திதசையில் சிவசொருபமென்று பிரதிபாதித்தலின், யாங்கொண்ட சிவத்துவந் திருட்டன்றாம். " கள்ளனுக்கோடுந் திருட்டுப் புத்தி " என்பதுபோன்று, பிறர் நூலிலுள்ள விஷயங்களைத் திருடுவதும், பரமேசுரனுக்குரிய குணங்கள் முத்தி தசையிலுந் தனக்கில்லாதிருந்தும் இருப்பதாகப் பாவித்தலுமாய, திருட்டுத்தொழில் இவர் மதத்தினர்க்கேயன்றி, யெம்மவருக்கின்றாம். செட்டியார் ஆழமறியாது காலைவிட்டுக்கொண்டு விழிக்கின்றார். உபநிஷத் விஷயமாகச் சிறுவர் பொருளை யுணர்வரென் றெழுதிவிட்டு, " விரிப்பானேன் " என்றார். உபநிஷத்தைத் தாம் படித்திருந்தாலன்றோ அதன்பொருளை விரிப்பார். படியாமையால் என் விரிப்பானென்று அமைதியடைந்தனர்போலும். சற்று விரித்திருப்பாராயின், நடுத்தெருவிலிழுத்துவிட்டு, நான்கு பெயர் பார்த்து நகைக்கும்படியாகச் செய்திருப்போம். இது கருதியோ நண்பர் இவ்விஷயத்தில் விழிப்பாயிருந்து " விரிப்பானேன் " என்று மிக லேசாகச்சொல்லித் தப்பித்துக் கொண்டனர். இவ்விஷயத்திற் செட்டியார் செய்த சூழ்ச்சி வியக்கற்பாலதேயாம். இவ்விடத்து கரத்தாற் கலமிடுங்கால், சொற்பப் புண்ணிய விசேடத்தால் சுருக்கி வரைந்தனர். விரித்திருப்பாராயின், காரைமா

நகர் கொப்புடையம்மன் சன்னிதானத்திலாவது, அல்லது நம் நண்பர் வசிக்கும் மடச் சமீபமாயுள்ள சிவன் கோவிலிலாவது பலரறியச் சபை கூடி, பாண்டித்தியத்தினையும், நண்பரது சரித்திரத்தினையும், பலருமறியப் பரவச் செய்திருப்பேம். இதனை யுணர்ந்தே, முன் யோசனையால் “ விரிப்பானேன் ” என்று சுருக்கினர்.

நம் நண்பரது ஊழ்வினையானது சும்மாவிருக்கவிடாது,நடுத்தெருவி லீர்த்து வந்துவிடுகின்றது. அவரென்செய்வார் பாவம். “ அச்சுரர்களானும் விலக்குதற்கரியவாகும்” என்று கூறியிருத்தலின், போகூழ் வினையினைக் கடக்கவல்லார் யாவருளர்? ஒருவருமிலர்.இலர்.பாருங்கள்.கவனித்துக் கேளுங்கள்.சற்றுநிதானித்து யோசனை செய்யுங்கள். “ ஒரு பற்றையேனும் விட்டு விலகாமல் உண்டுடுத்தி யுறங்கிக் களித்து, சிறிது நோய் வந்தால் வருந்தி வைத்தியாதிகள் மிகுந்த பரபரப்புடன்செய்து, இதற்கிடையிலே சில நூலாராய்ச்சிகளுஞ்செய்து, அதுவும் தங்கள் கருத்துக்கிணங்கவே திரித்துப் பொருள்கொண்டு, இழுமாந்து திரிகின்றவர்கள் கதியைப் பற்றி நாம் சொல்வானேன். அவர்களிருக்கும் ஊரிலும் செல்லப்படாதுபோலும் ” என்று தம் இழிகுணத்தை யறிவிக்கும் வாயிலாய்ப் பொறித்தனர். இது கோவிலூரைப் பற்றிய நிந்தையாம்.

“ ஒரு பற்றேனும் விட்டு விலகாமல் ” என்றார். பற்றென்ப தின்னதென்றுணரு மறிவிலியாய் இவரும், இவர் மதத்தினரும் எப்பற்றை விட்டிருக்கின்றனர். சிவாலயப்பணி செய்தல் பற்றென் றுணர்ந்தனரா? மோக்ஷ இச்சையுடைய சாதுக்களுக்கு ஊண் உடை உறையுள் கொடுத்து உதவிபுரிதலைப் பற்றென்றுணர்ந்தனரா? இவ்விரண்டினையும் பற்றென்பரேல், இவர் மதி அவமதியேயாம். “ உண்டு உடுத்து உறங்கிக் களித்து” என்றார். இவர் மதத்தினர், அன்றுருக்கிய நெய் தவிர வேறுவித நெய் சம்பந்தமா யுண்கிலர். உடுத்துவது திருநாகேஸ்வரத்தில், 100-ம் நெம்பர் நூலில் சுவர்ண நூற்கலந்த துப்பட்டாக்கள் உடுத்துவதேயன்றி வேறின்றாம். உறங்குவதனையோ யாம் ஈண்டு எழுதத்தகுந் தரமன்றாம். இவ்வாறாய மதக்கோட்பாட்டுள்ளிருக்கும் இவர்தாமா உண்டுடுத்தியுறங்கிக் களித்தென்றெழுதுபவர்? உண்ணாதும் உடுத்தாதும் உறங்காதும், சிவாலயப்பணியும், சாதுக்கள் போஜனசாதகமும் எவ்வாறு செய்தல் கூடும்? நம் நண்பர் உண்ணாதும் உடுத்தாதும் உறங்காதும் இருப்பதினாலல்லவா எச்சிற்கையினாலும் காக்காய் விரட்டாதிருக்கின்றனர்? “ களித்து ” என்றார். களித்தல், சிவகைங்கரியம், சாதுக்கள் கைங்கரியம் செய்பவர்களுக்குப் பிரமானந்த மேலீட்டினால் உளவாயுரியதேயாம். அவ்விரு கைங்கரியமு மின்றிய இவருக்கும் இவரினத்தவர்க்கும் விஷயானந்தக் களிப்பேயன்றி வேறு களிப்பேயின்றாம். எமது குருமூர்த்தியாய ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகப் பெருந்தகையார், மணிவாசகப் பெருந்தகையாரோடொப்ப, பதி

ணுயிரம் ஜனங்களின் மத்தியில் பரப்பிரம தேஜோரூபத்தினை யடைந்தார்க ளென்பதனைக் கண்கூடாகக் கண்டிருந்தும், "ஒரு பற்றேனும்விட்டு விலகாமல்" என்று பெரும் பழியைத் தம்மீது சுமத்திக்கொண்டார். கோவிலூர்ப் பரம்பரையுண்டாய காலமுதல் இதுவரைப் பற்றுவிடாதார் யாவருளர்? ஒருவருமிலர். இலர். "சிறிது நோய்வந்தால் வயித்தியாதிகள் மிகுந்த பரபரப்புடன் செய்து" என்றார். நோய்வரின் வைத்தியஞ் செய்வது ஞானத்திற் கிழுக்கென்றுணர்ந்தனர் போலும். ஸ்தூலசரீர சம்பந்தமாய்ப் பிராரத்த கருமத்தால்வரும் வியாதிக்கும், அந்தக்கரணத்தின் அகண்டாகார விருத்தியிலுண்டாம் பிரமஞானத்திற்கும், எச்சம்பந்தமுளதெனக் கருதி வைத்தியஞ் செய்தல் பொருந்தாதென்றுணர்ந்தனர். பிரமஞானியாயிருந்த ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், சம்பந்தமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள், பட்டினத்து சுவாமிகள், ஸ்ரீதிருமூலநாயனார் முதலியோர்கள், மநுஷ சரீரத்தோடுகூடிச் சீவித்திருக்குங் காலத்து, உண்டு உடுத்தி யுறங்கிப் பிரமானந்தக் களிப்புற்று நோய்வரின் சிகிக்சை முதலியன செய்து வாழ்ந்தனரென்றே சரித்திரவாயிலாகயாம் உணருகின்றோம். நம்நண்பர்கூறும் சிவஞானியாய உமாபதி சிவாசாரியர், நமச்சிவாய தேசிகர், சிவஞானசுவாமிகள், ஆறுமுகநாவலர் முதலியோர்கள், ஜீவித்திருக்குங் காலத்து, உண்ணுதும், உடுத்தாதும், உறங்காதும், சிவானந்தமின்மையாற் களிப்புறாதும், நோய்வரின் வயித்தியஞ் செய்யாதும் இருந்தனர்போலும். இவ்வாறவர்களது சரித்திரத்திடத் தின்மையின், புதிய பொய்ச்சரித்திரம் ஒன்றெழுதி யச்சிடினும் அச்சிடுவர் நம் நண்பர். நிற்க, "இதற்கிடையிலே சில நூலாராய்ச்சிகளுஞ் செய்து, அதுவுந் தங்கருத்துக் கிணங்கத் திரித்துப் பொருள்கொண்டு" என்றார்.

"இதற்கிடையில்" என்றதனால் நம் நண்பர் உண்டு உடுத்தி உறங்குங் காலத்தும் நூலாராய்ச்சி செய்வர்போலும். "சில நூலாராய்ச்சிகளுஞ் செய்து" என்றார். சில நூல் என்பது ஒன்றா? இரண்டா? பலவா? அங்ஙனம் ஆராய்ச்சிசெய்த நூல் இவ்வளவென இவரிடத்துக் கணக்கிருப்பின், முறையே யச்சிட்டு விடலாமே? அவ்வாறு செய்யாது அஞ்சுவானேன்? சில நூலாராய்ச்சி யென்றதனானே தாம் பல நூலாராய்ச்சி யுடையோரென்பதைக் கூறாது கூறினர். பல நூலாராய்ச்சி செய்திருக்கும் மகா பண்டிதராய இவர் சில நூலாராய்ச்சி செய்தவராது மாணுக்கராய எம்மவரோடு வாதப் போர்புரியவா அஞ்சுவானேன்? அவ்வாறு வாதஞ்செய்ய இஷ்டமாமேல் இவர் வசிக்கும் மடச் சமீபமாயுள்ள சிவாலயத்தில் பண்டித சிகாமணிகளை வரவழைத்துச் சபை ஏற்படுத்திக் கொண்டு, எமக்கு அறிவிப்பின், யாங்கள் வாதப்போர்புரிய வரத் தயாராக இருக்கின்றோமென் றுணர்வாராக. இன்னும் "அதுவுந் தங்கள் கருத்துக் கிணங்கவே திரித்துப் பொருள்கொண்டு" என்றார். இது இவரது

சுபாவ குணம்போலும். இவர் குருமுகமாக ஒரு நூலை யாராயின், அதன்கண்ணுள்ள பொருளைத் திரித்துணர்வது தொன்றுதொட்ட வழக்கமாமென்று, இவ்வாக்கிய முணர்த்துகின்றது. "பிணக்கன்" என்று நன்னூலொதுக்கிய, அதிகாரமில்லாத இவருக்கு உபதேசித்த குரவர் சிகாமணியும் புகழத்தக்கவரே யாவர்.

இக்குணம் இவரது மதத்தினருக்கும் தொன்றுதொட்ட வழக்கமாயிருப்பதினாலேயே, புராணங்களின் பொருளைத் திரித்துணர்ந்து செய்யுள்களைக் கோறல்செய்து கொலையராயினர். "இறுமாந்து திரிகின்றவர்கள் கதியைப்பற்றி நாம் சொல்வானேன்" என்றனர்.

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீருஞ் சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதே யவரவரைக் கண்ட போதங் குகந்தடிமைத் திறநினைந் திங் குவந்து நோக்கி, யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றுப்பூர் நடுத்தறியைக் காண லாமே" என்றும்,

"நின்வர வுணரா வென்னை நெறிகொலோ சபிப்ப தென்ன
மன்னவன் வணங்கிக் கேட்ப மலையமா முனிவன் முக்கண்
முன்னவ னடியார் காணின் முன்புற எழுந்து தாழ்ந்து
பொன்னடி வணங்கார்க் கெல்லாம் புகல்வதிச் சாப மென்றான்"

என்றுங்கூறியுள்ள பிரமாணங்களை யுணர்ந்து சாதுக்களையும் பெரியாரையும் நேரிற்கண்ட அக்கணமே, சேரமான் பெருமானுயனார் போன்று, ஊன் மண்ணுற அஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, அவர்களது பாததூளியினைச் சிரசிற்றரித்துக் கொள்வது நம் நண்பர் கடமையாயிருக்க, அதனைச்செய்யா திறுமாப்புற்றிருக்குமிவர் அவர்களை யிறுமாப் புற்றிருக்கின்றனரென்றும், அவர்கள் கதியைப்பற்றி நாம் சொல்வானேன் என்றும் உள்ள பழிமொழிகளைப் பன்னிப்பாவத்துக் காளாகின்றனர். அவர்கள் கதியைச் சொல்லுவதற்கிவர் அருகராவரா? அருகராகாமையினுனே, "சொல்வானேன்" என்று சொல்லித் தம்மீது குற்றமின்றிப் புறம்பே நின்றனர். "அவர்களிருக்கும் ஊரிலும் செல்லப்படாதுபோலும்" என்றார். தம்மிடத்து செல்ல யோக்கியதையிருந்தால், அவர்களிருக்கும் ஊருக்குச் செல்லுவர். அவர்களிருக்கும் ஊருக்குச் செல்லவேண்டுமாயின், நான்கு சாதனங்களுள் முதலாவதாய நித்தியா நித்திய வஸ்து விவேகம் வேண்டும். அக்கலமோ நம் மன்பரிடத்துப் பூச்சியமேயாம். சாதுக்களைத் தெய்வமாகப் பாவிக்க வேண்டும். அடக்கம், வணக்கம், நியமந்தவறாது நித்தியப்படி சிவாலய தரிசனம், ஈஸ்வரத்துவேஷமின்றியிருத்தல், நிந்தையின்றியிருத்தல் முதலிய பற்பல நற்குணங்கள் வேண்டும். பூர்வ சென்மத்திற்செய்த புண்ணிய விசேடத்தால், அக்குணங்களுள் ஒன்றேனுமில்லாத இவர், அவர்களிருக்கு மூருக்கு எவ்வாறு செல்லவேலும். எலாதாகவே தாம் வசிக்கு மடமே மடமாக வசிப்பாராக. நிற்க,

இன்னும் தமது அறியாமை யொன்றை வெளிப்படுத்துகின்றார். அஃதென்னெனிற் கூறுதும். ஆழ்ந்த கருத்துடன் அறிவீராக. "எல்லாம் பொய்யென்றே போராடுகின்ற இவர்கள், உயிர் நீங்கிய உடம்பை "நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்த் தடக்கிலென், பார்த்துழிப் பெய்யி லென், பல்லோர் பழிக்கிலென்" என்று நூல்கள் கூறுவதும், திருவள்ளுவர் முதலிய பெரியோர் காட்டியதுங் கைக்கொள்ளா மல், உயிர் நீங்கிய வுடம்பைப் புதைத்து வைப்பதற்குப் பெருந் தொகை செலவிட்டுக் கோயில்களைச் சிவாலயங்களுக்கும் மேலாகச் செய் வித்தலும், தேவாரத்திருப்பதிகங்கள் பெற்ற சிவஸ்தலங்கள், எத்தனை யோ பழுதாகிக்கிடத்தலை யெட்டியும் பாராமல், அங்கங்குள்ள சிவாலயங் களுக்கு மேலாய்ப், பூஜாதிகள் செய்துவருதலும் என்னையோ?" என்றார்.

உயிர் நீங்கியவுடம்பைச் சமாதிவைத்தலும், ஆலயஞ்செய்வித்தலும், பூஜையாதிகள் நடத்திவைத்தலும், அநியாயமென்று வயிற்றெரிச்சல் பட்டு, அவசரப்புத்தியால் மேற்கோள் தமக்குப் பாதகமா? சாதகமா? என் பது முணராது, செய்யுளைத்தீட்டி, (உடை) வேலா விருக்ஷமாகப் பிறத் தற்கு விரும்புகின்றனர். அவர்காட்டிய மேற்கோள், சுவபக்ஷவிகடக பர பக்ஷ ஸ்தாபனத்திற்குரியதாம். அச்செய்யுளின்கண் சமாதிவைத்தல் பொருந்தாதென்பதற்குமாறாய் "நன்றாய்ந்தடக்கில்" (நன்றாக விசாரித்து சமாதிசெய்வதனால்) என்று நமக்கனுகூலமாக இருக்கின்றது.

### திருமந்திரம்—சமாதிக்கிரியை.

" அந்தமில் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெப்புந் தீயினி
னைந்திடு நாய்நரி நுகரினுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும் வையமே". 1910

" எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடி
லண்ணறங் கோயி லழவிட்ட தாங்கொக்கு
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமா
மெண்ணரு மன்ன ரிழப்பா ராரே". 1911

" புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்போக்கி னாட்டி லழிவாகும்
மண்ணி லழியி லலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லாம் மயங்குமனன் மண்டியே". 1912

" அந்தமில் ஞானிதன் னருளை யடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமி லின்ப வருள்பெறு வாரே". 1913

"நவமிகு சாணுமேல நல்லாழஞ் செய்து
குவைமிகு குழவைஞ் சாணுகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணுக்கிப்
பவமறு நற்குகைப் பத்மா சனமே". 1914

"தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
புன்னருங் கான மூயர்ந்த மலைச்சாரல்
இன்னிலந் தான்குகைக் கெய்து மிடங்களே". 1915

"நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செய்யு நேர்மைய தாமே". 1916

"பஞ்ச லோகங்க ணவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்நற் சுண்ணம் பொதியலு மாமே". 1917

"நள் குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீர்சேர்த்து
வொள்ளிய தூப மூவந்திடு வீரே". 1918

"ஓதிடும் வெண்ணீற்று லுத்தூளங் குப்பாய
மீதினி விட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமு நீறும் பொலிவித்து
மீதி விருத்தி யிருத்திடு வீரே". 1919

"விரித்தபின் னற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் குகைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே". 1920

"மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்லமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே". 1921

"ஆதன மீதி லரசு சிவலிங்கம்
போது மிரண்டினி லொன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வம்
காதலற் சோடசங் காணுப சாரமே". 1922

## மெய்ஞ்ஞான விளக்கம்.

" முன்னமே பாகமா மூரல் செய்யுநாள்
பின்னது வேவவேண் டிடுமோ பேசிடாய்
அன்னதே யிவ்வுடல் அறிவா லட்டது
பின்னினிச் சுடுவது பிழையே யாகுமால்".

" பிறிவி லாத பிரமபீ சனுடல்
இறுதி யாவனற் றீண்டிடி லெங்கணும்
மறுகி விற்கிடை கோடி யனலதாய்ச்
செறுவு செய்யுமத் தேசமென் றோதினர்".

என்பனவாதி நூல்களில் பிரமஞானியாகிய மகாத்மாக்களது சரீரங்களை, சமாதி வைக்கவேண்டுமென்றும், அவ்வாறு செய்யின், சுந்தர மன்னரும் தொல்புவியுள்ளோரும் அந்தமி லின்ப வருள் பெறுவாரென்றும், அவ்வாறு செய்யாது ஞானியினது சரீரத்தினை யனல்போக்கின், அந்நாடு அக்கினியினால் நாசமாமென்றும், நாய் நரிக்குக் கொடுப்பின் கோரமான யுத்தமூண்டு வையம் நாய்நரிக் குணவாகுமென்றும் கூறியிருக்க அதனையும் பொருட்படுத்தாது, சமாதிவைக்கக் கூடாதென்றும், காலில் நார்ப் பிணைத் தீர்த்து, மூச்சந்தியிற் போடவேண்டுமென்றும், சாதுக்கள் மனம் புண்படப் புகன்று

## குரு நிந்தை.

" பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவ
ரத்தமு மாவியு மாண்டொன்றின் மாய்ந்திடுஞ்
சத்திய மீது சதாநந்தி யாணையே ".

என்ற திருமந்திர வாக்கின்படி, மீளாநரகிற் காளாகின்றனர். அஃதோடமையாது திருவள்ளுவநாயனாரும் காட்டியிருக்கின்றாரென்றார். சிலர், திருவள்ளுவநாயனார் சமாதி சென்னை மயிலாப்பூரில் சிவாலயத்தினுள்ளேயே இருக்கின்றதென்றும், ஆலயம் இயற்றுவித்துப் பூஜை முதலியன நடந்துவருகின்றனவென்றும் கூறுகின்றனர். யாமும் நேரிற் கண்டிருக்கின்றோம். பிரத்தியக்ஷம் பிரமாணமோ? நம்மன்பர் கூறும் வெற்றுரை பிரமாணமோ ? பண்டித சிகாமணிகள் பகுத்துணர்வாராக. நம்மன்பர் காட்டிய நாலடியார் பிரமாணமாமா ? யாம் காட்டிய திருமந்திரம் பிரமாணமாமா? நாலடியார் பிரமாணமென்பரேல் திருமந்திரம் அப்பிரமாணமாம். ஆகவே யிவரது மதம் அடியோடு வேரற்று வீழும். வீழவே சிவாத்துவிதிகளாய வீரசைவர்கள், தம்மதத்தினராய, திருமூலநாயனாரது வாக்கினை அப்பிரமாணமென்று, நண்பர் கூறுவதுபோன்று ஒப்புவரா ? ஒப்பார் ! ஒப்பார் ! ஒன்று துர்ப்பலமடையாதவழி மற்றையது ஜீவித்தலிலதாம். ஆகவே திருமந்திரம் பரமப் பிரமாணமென்று யாவர்க்கு

மொப்ப முடிந்ததாம். அதன்கண்கூறிய சமாதியினை நிந்தித்தவராக லின், திருமூலநாயனுரையும் நிந்தித்தவராகின்றார். அவைதிக சைவ சித்தாந்திகள், தமது குலகுருவென்று, சொன்மாத்திரையானே கொண் டாடும் திருமூலநாயனாரை நிந்தித்த இவர் வேறு யாரை நிந்தியாதிருப் பர்? குருத்துரோகியாய இவருடன், தமரெனப் பழகுபவரும், குருத் துரோகிகளாய் நரகத்திற் காளாவரென்பது திண்ணமாம். இன்னும், "நீரிடத் தன்றி யந்தரத் திடையே நிகழுமோர் மரைகொள விரும்பார், பாரிடத் தெவரும் விநோதிகள் சாலம் பண்ணலென் றெண்ணிமற் றது போற், சீருடைத் துறவு சமாதிபெற் றுலகிற் றிகழினு முயிர்க்கெலாந் தயவுஞ், சாரருட் குருபத் தியுமிலார் தமையுந் தமரெனப் பழகவுந் தகு மே". "இதுநெறி யெனவோ ரூர்க்குமற்றொருவ னேகினு மாத்தன்வாய்க் குறிகளை துதனிற் காணு விடத்துல கருமோ ரடிபெயர்த்திடுகல ரதுபோ, லெதிரறு சமாதி யாதிபெற்றுடையோ ரென்னினு முன்னவ னுரைத்த, சதுர்மறை யாக மாந்தநிந் தகரேற் றமரென லவரையுந் தகுமே" என் னும் செய்யுளுக்கும் இலக்கியமாவரிவரே. இதுகாறுங் கூறியவாற்றால் மகான்களின் திவ்ய திருமேனியைச் சமாதிவைத்துப் பூஜிக்கவேண்டு மென்பது சித்தமாயிற்று.

"பெருந்தொகை செலவிட்டுக் கோவில்களைச் சிவாலயங்களுக்கும் மேலாகச் செய்வித்தலும்" என்றார்.

குருவினு லுபதேசம்பெற்று, தமது யதார்த்த சொரூபமாய பிரயோ சனத்தினை யடைந்த மாணுக்கர்கள், பெருந்தொகை செலவிட்டு, சிவால யங்களுக்கு மேலாகக் கோவில்களைச் செய்விப்பார்க ளென்பதில் யாது சந்தேகமுளது? சாமானிய மனிதர்களால் சாதாரண பூமியில் மந்திர வாயிலாக ஸ்தாபிக்கப்பெற்ற, நர்மதை லிங்க முதலியவற்றிற்குப் பெருந் தொகை செலவிட்டு, ஆலயமியற்றுவதைப் பார்க்கிலும், பிரமத்தையுணர் ந்த பிரமஞானியின் திவ்ய திருமேனியாகிய ரத்தினத்தைச் சேமித்து வைத்திருக்கும்

## அடியார் பெருமை.

"சிவயோகி ஞானி செறிந்தவத் தேசம்
அவயோக மின்றி யறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடு நல்லியல் காணும்
பவயோக மின்றிப் பரலோக மாமே"

என்ற திருமந்திரச் செய்யுளின்படி, புண்ணிய பூமியில், பெருந்தொகை செலவிட்டு ஆலயமியற்றிப் பெரியோரால் ஸ்தாபிக்கப்படும், இலிங்க முடைய ஆலயமே யுயர்வுடைத்தாம். இதற்கு சிவாலயத்தினும் மேன் மையுடைத்தென்று கருதியல்லவா, "சிலகாலஞ் சென்றால் அச்சிவாலயங் கள் மழுங்கி, இவைகளே விளங்கி நிற்குமே" யென்று நம் நண்பர்

அஞ்சுகின்றனர். இதுவே சமாதி யாலயங்களைச் சிவாலயத்தினும் பெரிதாக வியற்றுவித்துப் பூஜையாதிகள் மிக்க விமரிசையாய் நடத்திவருதற்குப் போதிய பிரமாணமாகும்.

இன்னும், "ஞால முண்டவன் தலைமிசை சுமப்பன்மெய்ஞ் ஞானி வேண் டுவவெல்லாம், ஆல முண்டவ னவன்பினே திரிகுவ னவனடித் தூட்கன்றே, சீல மன்னரு மற்றுள தேவரும் திசைதிசை பணிந்தேத்த, காலி ரண்டையுந் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்" "ஈசனும் ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திரா னந்தத், தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி, மாசிலாப் பிரம ஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கில், ஆசிலா வரியு மொப்பலன் யானு மொப்பல னேவரொப் பாரே"

" பலன்கள் வேண்டிய பரிசெலாம் பலித்திடும் பரமதத் துவ ஞானி, நலங்கொ ளுமமா மந்திரஞ் செபித்திட நயந்தவ னீராடுஞ், சலங் கொ டீர்த்தமா மவன்றிரு மேனியே சகலதெய் வமுஞ் செவ்வாய், மலர்ந்த வாசக மறுபிறப் பெனவரு மயற்பிணி மருந்தாகும் ".

" ஒழுக்கமே புரிந்தோ னுத லதனைவிட் டொழிந்தோ னுதல்
இழுக்கஞ்செய் மூர்க்கனுதல் பண்டித னுத லெண்ணில்
பழிப்பரு ஞானந் தன்னின் முயல்பவன் பணியத் தக்கோன்
றொழத்தகு ஞானி யென்று சொல்லவேண் டுவது முண்டோ ".

" ஞானியே யெவரும் வணங்குதற்குரியோ னவிலுமா சௌசமிற் பெரியோன், மானிலத் தவன்றா னுடல்விடிற் குகைப்பால் வைக்கவென் மறைப்படி புரித, ரூனும்வே தாந்தப் பொருளெணிந் திடினும் சாற்றினில் வாழுமந் தணர்க்கின், ரூனதாற் றுறவு பெற்றநற் றவரே யமலவீ டடையு ஞானிகளே".

என்பனவாதிப் பிரமாணங்களில், பரமேஸ்வரன், ஞானிகளது பாத தூளி கிடைக்கவேண்டிப் பின்னே திரிவனென்றும், மகேசன் ஞானிக்குச் சமமலனென்றும், ஞானியினது திருமேனியே சகல தெய்வமுமென்றும், ஞானி யொருவனே வணங்குதற்குரியவனென்றும், இன்னும் பற்பல மகிமைகள் கூறியிருக்க, அவற்றினை யுணர, போகூழ் வினையின் வலியால் வலியிலராய், தம்மனம் போனவாறு, சமாதிவைத்தல் கூடாதென்றும், ஆலயமியற்றுவித்தல் பொருந்தாதென்றும் வரைந்திடர்ப்பட்டார்.

ஞானிக்குப் பரமேஸ்வரன், மகேஸ்வரன், சதாசிவன் முதலியோர்கள் சமமாகாமல், அவரது ஏவற்பணிக்குக் காத்திருப்பாராயின், அப் பரமேஸ்வரற்கியற்று மாலயத்தினும் நூறுமடங்கதிகமாகக் கறுப்புக்கல், சலவைக்கல் முதலியவைகளால், சாணைசெய்த ஆலயமியற்றுவித்து, தங்கஸ்தூபி முதலியவற்றை விமானத்தில் ஸ்தாபித்து, ஆறுகாலப்

பூஜை முதலியனவும், கண்டோர் அஞ்சிப் பக்தியதிகரிக்கும்படியாகச் செய்விக்கவேண்டுமென்பதனை முற்காட்டிய பிரமாணவாயிலாக வுணர்வாராக. இப்பொழுது பிரசித்தியாயுள்ள சிவாலயங்களெல்லாம், பிரமஞானிகளாய மஹான்களது சமாதிகளேயெனச் சித்தர் நூல்கள் பல கூறுகின்றன.

### போகர் - ஜனனசாகரம்—557.

ஆமப்பா வருணகிரி மலையிற் கேளு
ஐந்நூறு பேர்கள்சித்த ரதனில் வாழ்வார்
ஓமப்பா கழுக்குன்றி லொன்பதுபேர் கூட்டம்
உயர்வான கால்மலையி லொருநூறு சித்தர்
நாமப்பா மலைகளிலே யனேகஞ் சொன்னோம்
நல்லதொரு சித்தரெலாஞ் சொரூப மாகி
சேமப்பா வவரவரே சமாதி நின்று
செகமலையி லிங்கமதாய் முளைத்திட் டாரே.

ஆதியென்ற சிதம்பரமே திருமூல ராச்சு
அவருடனே பதினெண்பே ரதிலே யாச்சு
சோதியென்ற காலாங்கி நாதர் தாமுந்
துலங்குகின்ற காஞ்சிபுரந் தனிலே யாகும்
நீதியென்ற நீதியெல்லாம் வழுவ ராமல்
நீணிலத்திற் றபங்கணிச் சயமாய்ச் செய்வார்
வேதியென்ற கும்பமுனி கும்ப கோணம்
விளங்குகின்ற ரெங்நாளு மந்த ஆரே.

ஊரானமயிற் றேசமச்ச முனியே யாகு
முற்றதொர்சீ காழிசட்டை முனியேயாகும்
பேரான வழுகண்ணிச் சித்தர் தாமும்
பெரிதான நாகபட் டணமே யாச்சு
வேரான விடைமருதூ ரிடைக்காட ராகும்
விளங்கின்ற மதுரைசுந் தரரு மாச்சு
சீரான கமலமுனி யதுவே யாச்சு
சிறந்ததுவா ரகையிற்பாம் பாட்டி யாமே.

ஆமென்ற புண்ணாக்கு ஈசர் தாமு
மழகான நாங்கணேச்சே ரியிலே யாச்சு
வாமென்ற கொங்கணர்தா மிருந்த மூலம்
வளர்ந்ததோர் திருக்கண்ணங் குடியி லாகும்
நாமென்ற நாரதனு மிருந்த மூலம்
நலமான விடைமருதூர் நாட்ட மாச்சு
ஓமென்ற வயித்தீச்சு ரம்வ சிட்ட
ருன்னதமா யுகந்துநின்ற மூலந் தானே.

காமென்ற வால்மீகர் திருவை நின்றூர்
கருவூரார் காளஹத் திரியு மாச்சு
தேமென்ற காசியிலே விஸ்வா மித்ரர்
திருவையா றதிலகப்பைச் சித்த ராகும்
வாமென்ற கடுவெளிச் சித்தர் தாமும்
வளமான திருக்காஞ்சிப் பதியி லாச்சு
வேமென்ற புலத்தியர்தா மிருந்த மூலம்
விதமான வாவடையார் கோவி லாச்சே.

ஆச்சென்ற கோரக்கர் கழுக்குன்ற மூல
மதிகருத்தி ரத்திற்கா சிபரு மாச்சு
நீச்சென்ற வருணகிரி தன்னிற் கேளு
நிஜமான கௌதமரு மதிலி ருந்தார்
காச்சென்ற கருவைநல்லூர் மார்க்கண் டர்தாம்
கருவான திருக்கூடல் மூல ராச்சே
வாச்சென்ற பாவவி நாசந் தன்னில்
வளமான புலத்தியர்தம் மூல மாமே.

ஆமென்ற சுந்தரகா லாங்கி நாத
ரதிலிருந்தார் திருக்கடவூ ரவர்தா மாகும்
போமென்ற திருப்பவண மவர்தா மாச்சு
புகழ்ந்ததிருக் கோவலூ ரவரு மாச்சு
நாமென்ற வாடுதுறை விஸ்வா மித்ரர்
நல்லதிரு ஞாலம்பாம் பாட்டி சித்தர்
வாமென்ற திருப்பணந்தாள் வரரி ஷிக்காம்
வளர்பெருங்கா வூர்கன்னி சித்தர் தாமே.

தானென்ற வானைக்கா வதிலே கேளு
சமஸ்தான மச்சமுனி சமாதி யாகும்
தேனென்ற தென்மலையில் வரத ரூருஞ்
சேரையெனுஞ் சேத்தூர்மார்க் கண்ட ராச்சு
வானென்ற மலைநாடு நெடுங்குன் றூரில்
மகத்தான திருமூலர் வாச மாச்சு
நானென்ற மேலச்சி தம்ப ரத்தில்
நாடியது திருமூலர் நாட்டந் தானே.

"தங்குற்றம் பார்க்குமவருளரோவெனத் தாழ்ந்தனளே" என்றுசிவப் பிரகாசப் பெருந்தகையார் கூறியாங்கு, நண்பர் நம்மீது குறைகூறவந்தவர் தங்குற்றத்தினைச் சிறிதேனும் நாடினரா? பிறரை நிந்திப்பதற்கே கங்கணங்கட்டியிருக்குமிவர் என் தங்குற்றத்தை நாடுவர்? நாடார்.நாடார்.இவர் யாண்டுந்தங்குற்றம் பாராது, பிறர்மீது குற்றமற்றதனைக்குற்றமெனக்கூறி "யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற், சோகாப்பர் சொல்லிழுக்குப்

பட்டு" என்ற பொய்யாமொழிப்படி யிழுக்குறுவர். நம் நண்பர் சிவ ஞானிகளென்று சொல்லித் தம்பட்டமடிக்கும் தாயுமான சுவாமிகட்கு இராமநாதபுரத்திற் சமாதிவைத்துப் பூஜையாதிகள் நடக்கின்றன. திருவள்ளுவ நாயனாருக்கு மயிலாப்பூரில் சமாதிவைத்துப் பூஜையாதிகள் நடக்கின்றன. திருமூலநாயனாருக்கும் நமச்சிவாய தேசிகருக்கும் இன்னும் பற்பல அதிபதிகள் தம்பிரான் முதலியோர்களுக்கும் திருவாவடுதுறையிற்சமாதிவைத்துப்பதினாயிரத்துக்கு மேற்பட்ட திரவியஞ் செலவு செய்து, வருஷக் குருபூஜை நித்தியபூஜை முதலியவை நடந்து வருகின்றன. சூரியனார் கோவில், தருமபுரம், திருப்பனந்தாள், மதுரைத் திருஞானசம்பந்தர் மடம், திருவண்ணாமலை யாதீனம், குன்றக்குடி, திருவண்ணாமலை, சிதம்பரம், முதலிய பற்பலவிடங்களில் இருந்த சைவ மடாதிபர்களுக்கும், மற்றையோர்க்கும், சமாதிவைத்துப் பூஜை முதலியன மிக்க விமரிசையாக நடந்துவருகின்றன. சிதம்பரம் கொற்றவன் குடியில், உமாபதி சிவாசாரியருக்குச் சமாதிவைத்துப் பூஜை முதலியன நடந்து வருகின்றன. சீர்காழியில் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கும், குன்றத்தூர் சேக்கிழார் சுவாமிகளுக்கும், திருவாரூரிற் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும், சிவாலயங்களுள் பலவற்றுள்ளும் அறுபத்துமூன்று நாயன்மார்களுக்கும், பெரும் பொருள் செலவுசெய்து சிவாலயங்களினும் பெரிதாய் ஆலயங்களைச் செய்வித்து, பூஜை முதலியனவும், பரமேஸ்வரனுக்கு நடப்பதைப் பார்க்கினும், பதின்மடங்கு அதிகமாக நடந்து வருகின்றன. இவற்றினையெல்லாம் உற்றுநோக்காது, வீண்வாதந் தொடுத்தார். இவை யாவும் தமக்கு உடன்பாடன்றென்பரேல், இச்சமாதி, ஆலயம்முதலியவற்றை யிடித்து அக்கற்களைச் சிவாலயங்கட் குபயோகப்படுத்தி, அந்நிலங்களை விளைநிலமாக்குதற்கு, இத் **தூர்வையாசகப் படலம்** அச்சிடப் பொருளுதவிய பிரபுவினிடம் சென்று, **50** ஆயிரம் ரூபா யாசகஞ்செய்து, அத்திரவியத்தினைப் பாங்கில் **சைவசித்தாந்தப் பெரியாரின் சமாதி யிடித்தற் பண்டு** என்னும் பெயருடன் வட்டிக்குக் கொடுத்து அதன் வருவாயில் நாடோறும் ஏவலரைக்கொண்டு, சைவசித்தாந்தப் பெரியார் சமாதி யாலயங்களையும் அறுபத்துமூவ ராலயங்களையும் இடித்து நிர்மூலமாக்கி வருவாராக. இங்ஙனஞ் செய்து முடித்ததன் பின்னன்றோ எங்கள்மீது குறைகூற வேண்டும். அங்ஙனமின்றித் தம்மீது குற்றத்தினை வைத்துக்கொண்டு பிறர் மீது பழிசுமத்துவது என்ன அறியாமை? இவரது வஞ்சக மொழிகள், நடுவுநிலைமை யுள்ளார்க்கு வெள்ளிடைமலைபோல வெளியாகும்.

"தேவாரத் திருப்பதிகங்கள்பெற்ற சிவஸ்தலங்கள் எத்தனையோ பழுதாகிக் கிடத்தலை யெட்டியும் பாராமல்" என்றார். எட்டிப் பார்த்து மௌனஞ் சாதித்துச் செல்லுதல் இவர் மதத்தினர்க்கேயன்றி யெம்மவர்க்கின்றாமாகலின், தம்மனுபவத்தினை "யெட்டிப் பாராமல்" என்று வெளியிட்டனர். நாங்களோ, எட்டிப்பார்த்து, அதற்குரிய

பெரும்பொருள்களைச் செலவுசெய்து, ஆலயங்களை யியற்றுவித்துப் பூஜை முதலியனவும் நடத்துவித்து வருகின்றோம். கோவிலூரிலுள்ள சிவாலயத்திற்கு, முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள், அருணாசல ஞானதேசிக சுவாமிகள், சிதம்பர ஞானதேசிக சுவாமிகள், இராமசாமி ஞானதேசிக சுவாமிகள், வீரசேகர ஞானதேசிக சுவாமிகள், அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் முதலிய மகான்களால், சுமார் 30 லக்ஷ ரூபாவரை செலவுசெய்து யாவரும் பார்த்து இன்புறுமாறு ஆலயமியற்றிப் பூஜை முதலியன மிக்க விமரிசையாய் நடத்திவருவது உலகத்திலுள்ளார் யாவருங் கண்கூடாகக் கண்ட விஷயமாம். மதுரையம்பதியில் குட்டைய சுவாமிகளென்பவர்கள், ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுரர் ஆலயத்தில் அளவிறந்த பொருள் செலவு செய்து, தேகப்பிரயாசையுமுற்று, நந்திமண்டபம் முதலியனவுமியற்றி விமானங்கட்கும், சுவர்ணகசிதம் செய்வித்தார்களென்பது நம் நண்பரும் உணர்ந்த விஷயமே! அப்பதியின்கண்ணே அரசப்பசுவாமிக ளென்னும் மகான் கான்மாறியாடிய கற்பகத்திற்கு ஆபரணமியற்றுவித்தார்க ளென்பதும் அறிந்த விஷமே. ஸ்ரீ கருணாநிதி யென்னுஞ் சிதம்பரஞான தேசிக சுவாமிகளவர்கள் தமது சீடராகிய தேவிகோட்டை இலக்குமணச் செட்டியாரைப்பார்த்து, சிதம்பரம் ஸ்ரீ மூலட்டானேச்சுரர் ஆலயத்தை ஜீரணோத்தாரணம் செய்விக்க வேண்டுமென் றுத்தரவுசெய்ய, அவ்வாறே இலக்குமணச் செட்டியாரும் தம்மினத்தவர்களை வரவழைத்து, அதற்கு வேண்டிய திரவியங்களைச் சேகரித்துக்கொண்டுவந்து குருமூர்த்தியின் சந்நிதியிற் றெரிவித்தனர். அப்போது ஸ்ரீ கருணாநிதி களிப்புற்று அடியார் திருக்கூட்டத்தோடு சிதம்பரத்திற் கெழுந்தருளி பலதேசங்களி லிருந்தும் வைதிகர்களான பிராமணோத்தமர்களையும் வித்வான்களையும், மற்றுமுள்ள பெரியோர்களையும் வரவழைத்து, அபரிமிதமாகப் பிராமணபோஜனஞ் செய்வித்து, ஸ்ரீ நடேசப்பிரானுக் கொப்பான தீக்ஷிதர்களனைவரையும் பூஜித்து மரியாதை செய்து, ஸ்ரீமூலட்டானேசுவரருக்குச் சொர்ணபந்தனம் செய்வித்து வேத விதிப்படி வெகு விமரிசையாய்க் காளயுக்திவருடம் ஆனிமீ 14வ சோமவாரத்தன்று கும்பாபிஷேகம் நடத்து வித்தார்கள். மணிவாசகப் பெருந்தகையோடொப்ப பல்லோருணரப் பரமபத வாழ்வுபெற்ற எமதருளிறையாய ஸ்ரீ வீரசேகரஞானதேசிகப் பெருந்தகை, தேவாரப்பதிகம் பெற்ற திருக்களர் க்ஷேத்திரம் பகலிலும் பயமின்றிச் செல்லக்கூடாத நிலைமையிலிருந்ததனை யுணர்ந்து, மிக்க விரைவில் 4 லக்ஷ ரூபாய் செலவுசெய்து ஆலயமியற்றுவித்து, அதி விமரிசையாக ஆராதனைகள் நடைபெறும்படி செய்த விஷயம் பல்லோரும் பரக்கக்கண்டதேயாம். சிதம்பரத்திற் பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகளால் "யௌவனேஸ்வரராலயம்" இயற்றுவித்து பூஜையாதிகள் நடக்கும்படி செய்விக்கப்பெற்றதும் நன்கு புலப்படும். ஸ்ரீமந் நடராஜப் பெருந்தகையாரெழுந்தருளி யிருக்கும் ஆலயத்தினை உத்தாரணஞ் செய்வதற்கு முக்கிய

பிரேரணைக் கர்த்தாவாயவர்க ளிருந்தார்க ளென்பதும் அறிதற்பாலதாம். அரிமழம் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பற்பல சிவாலயங்கள் உத்தாரணஞ்செய்யப் பெற்றதோடு கீழைச்சிவபுரியென்னும் ஊரிலுள்ள சிவாலயப் பிரதிஷ்டை செய்யப்பெற்றதும் அவ்வூர் வைசியசிகாமணிகளாலுணரலாம். வீரசேகர ஞானதேசிகப் பெருந்தகையாரால், சிற்பசாத்திரப்படி பிளான் தயாரிக்கப்பட்ட ஆலயங்களும், பற்பல திரவியவான்களைக்கொண்டு ஏற்படுத்தப்பட்ட வேதபாடசாலை, வித்தியாசாலை, பசுச்சாலை முதலியனவும் அளவிறந்தன. அவற்றினை முறையாக வரையின் நூல்விரியுமென அஞ்சிவிடுத்தா மென்றுணர்க.

வேதாந்தியாய ஜெமீன். அள. அரு. அருணாசலச் செட்டியார் என்பார், இராமேஸ்வரம், காளையார்கோவில், உப்பூர் முதலிய சிவாலயங்களை யியற்றுவித்து பூஜையாதிகள் நடத்துவிக்கின்றார்க ளென்பது பிரதிதினமும் யாவரும் உணருவர். கோவிலூர் மடாலயத்தின் அபிமானியாயுள்ள தேவிகோட்டை, சித. முரு. முருகப்பசெட்டியாரென்பவர்கள், தேவாரப்பதிகம் பெற்ற உறையூர்ச் சிவாலயத்தை யியற்றுவிக்கின்றார்க ளென்பது அறியற்பாலதாம். இவ்வாறே முழுமனமுடைய வேதாந்திகளெல்லோரும் எண்ணிறந்த சிவாலயங்க ளியற்றுவித்திருக்க, "சூரியனை யுள்ளங்கையில் மறைக்க நினைத்தது" போன்று அறிவுக்குறைவினால், "சிவஸ்தலங்களெத்தனையோ பழுதாகிக் கிடத்தலை யெட்டியும் பாராமல்" என்று மையலுற்றுக் கையாடினார் போலும்.

சிவாலயங்களும், உடம்பு முதலியனவும், வேதாந்திகள் பொய்யென்று சொல்லுகின்றார்களென்று மிக்க பரிதாபப்பட்டு, "பூஜையாதிகளும் சிவாலயங்களும் பொய்யாயின் பலனின்றி யொழியு" மெனப் பண்ணுகின்றார். நம் நண்பர் கருத்துப்போல் சிவாலயங்கள் சத்தியமாயிருக்குமாயின் பழுதடைவானேன்? மகான்கள் சமாதியாலயங்களுண்டாயவுடன் அச்சிவாலயங்களினது ஒளி மழுங்குவானேன்? நம் நண்பர் வாக்கினாலே, பாசமாய சிவாலயங்களும், உடம்பு முதலியனவும், அநித்தியமாமென்பது வச்சிரலேபமாம். பொய்யாய சிவாலயத்தைப் பூஜிப்பின் பலனிலையென் றையுறுகின்றார். நான் கருடனென்னும் பொய்யாகிய பாவனையினால் பிறர்பாலுள்ள விட நீக்குதல் எவ்வாறேலும்? ஏலாதாகவே, கருடபாவனை பொய்யேயென் றங்கீகரிக்க நேரும். அங்ஙனம் பொய்யென்று நம் நண்பர் அங்கீகரிப்பரா? அங்கீகரியாராகவே பொய்யாகிய கருடபாவனையினாலும், மெய்யாகிய விட நீக்கங்கூடுமென்றாயிற்று. அங்ஙனமே பொய்யாகிய சொற்பனத்தில், பொய்யாகிய மாதின் சேர்க்கையால், மெய்யாகிய வீரியவொழிவு காண்டலுமாம். இங்ஙனமே பொய்யாய தாரு, தாம்பிரம், பாஷாணம், வெள்ளி, தங்கம், முதலியவற்றிற் செய்யப்படும் பிரதிமைகளிடத்துப் பாவிக்கும் ஈஸ்வர பாவனையினாலும், ஒருவாற்றானு முவமையின்றிய சாளக்கிராமத்திற்

பாவிக்கும் விஷ்ணுபாவனையினாலும், அங்ஙனமே குருவினிடத்துப் பாவிக்கும் ஈஸ்வரபாவனையினாலும், உண்மைப்பலன்களைப் பெறுவார்க ளென்பது வேதத்தின் சித்தாந்தமும், நம் நண்பரது சைவ சித் தாந்தக் கோளுமாம். இவற்றினைப்பற்றி மூன் சென்னையில் வேதாந்தி கட்கும், சைவ சித்தாந்திகட்கும் நடந்த விவாதத்தில் விரிவாக விளக் கப்பட்டிருத்தலின் அவற்றினை யுணர்ந்து அடங்குவாராக.

நண்பருக்கும் நண்பர் மதத்தினர்க்கும் சகசமலம் அநாதியா யிருப் பதுபோன்று, வேதாந்த சாஸ்திரத்தினை யறியாமையாய மயலும் அநாதி யாகவே யிருக்கின்றது. "ஜீவனும் பொய், ஈஸ்வரனும் பொய்" என்று சொல்லுகின்றார்களென்றார். 'ஜீவன்' என்னுஞ் சொல்லுக்கும், ஈஸ்வர னென்னுஞ் சொல்லுக்கும் பொருள் யாதென் றுணர்ந்தனரோ? ஜீவ னென்னுஞ் சொற்கு, அந்தக்கரண ஆபாசமாகிய விசேஷணமும், கூட ஸ்த சேதநமாகிய விசேஷியமும் ஆகிய விசிட்டம் பொருளாம். நம் நண்பருக்கு தர்க்கஞாநமில்லாமையால், விசேஷணமாகிய தர்மத்தைப் பொய்யென்று சொல்லுகின்றார்களா? விசேஷியமாகிய தர்மியினைப் பொய்யென்று சொல்லுகிறார்களா? என்னும் பகுத்தறிவில்லாது பொது வாகப் "பொய் பொய்" என்று பறையறைகின்றார். அவ்வாறே ஈஸ்வ ரன் என்னும் சொற்கு, மாயை பிரதிபிம்பங்களாய விசேஷணமும், பிரம சேதநமாய விசேஷியமும் ஆகிய விசிட்டம் பொருளாம். இதன்கண் ணும் விசேஷணமாய தர்மத்தினைப் பொய்யென்று கூறுகின்றார்களா? விசேஷியமாகிய தர்மியினைப் பொய்யென்கின்றார்களா? என்னும் பகுத் துணர்வின்றி "பொய் பொய்" என்று மையலுறுகின்றார். தர்மதர்மி ஞாநம், விசேஷண விசேஷிய ஞாநம், குணகுணி ஞாநம் முதலிய ஞாநமில்லா இவர்தாமோ, சாத்திரவாதஞ் செய்ய வல்லுநர்? தர்மியிரண் டினையும் பொய்யென்று கூறுவார்களாயின், ஐக்கியம் எதற்குக் கூறுவார்க ளென்னும் யோசனையின்றித் தமது முழுமூடத் தன்மையினையே முறை யிட்டார். தர்மிகளுக் கைக்கியமேயன்றித் தர்மங்கட் கைக்கியமின்றாம். தர்மம் அநித்தியமாயவிடத்து தர்மி நித்தியமா யிருத்தல்கூடும். நியாய சாஸ்திரத்தினும், பிருதிவி பரமாணுவின் குணங்க ளநித்தியமாயினும், குணியாய பரமாணு நித்திய மென்றே யொப்பினர். விசேஷணமாய அந்தக்கரண ஆபாசமும், மாயை பிரதிவிம்பமும், விசேஷியமாய சேத னத்தின்கண் ஔபாதிகமாய்த் தோன்றி பரஸ்பரம் விரோத தர்ம முடையனவாய், ஐக்கியமுறாமையின், விசேஷியமாய சேதநம், விசே ஷணங்க ளொழிந்துழி, பேதத்தினை யுண்டாக்கும் தர்மமின்றி நிர்த்தர் மியாயிருத்தலின், ஐக்கியமுறு மென வுணர்க. இதன் சார்பான கண் டனங்கள் **"பேத வாத திரஸ்காரம்"** என்னும் நூலில் விரிவாயிருத்த லின் ஆண்டுணர்க.

மாணுக்கர்கட்கு அறிவுறுத்தற்குச் சீவன் முத்தித்தசையில், பிரம ஞாநிகள் பிரமத்தை யநுபவிக்கின்றார்கள் என்று கூறியிருத்தலை

யுணராது, "அநுபவிக்கின்றவர் யார்? அநுபவத்தைக் கொடுக்கின்றவர் யார்?" என்று கடாவுகின்றார். ஒருபொரு ளிருக்கு மிடத்தில், செய்தலும் செய்வித்தலு முளவாமோ?

நம் நண்பர் ஒருநிமித்தத்தால் தந்தலையில் மண்ணைவாரிப்போட்டுக் கொண்டாரென்று வைத்துக்கொள்வோம். அக்கா லெவரையொருவர், உங்கள் தலையில் மண்ணைவாரி யார்போட்டது என்று வினவின், நானே மண்ணைவாரித் தலையிற்போட்டுக் கொண்டேனென்று சொல்லுவர். போடுவித்தார் யார் எனில்? அப்பொழுது என்னுத்தரம் பண்ணுவர்? மௌனஞ் சாதிப்பர். அக்கா லொருவரும் போடுவிப்பா ரிலராகலின், இருவ ரிருக்குமிடத்துச் செய்தலுஞ் செய்வித்தலுமுளவாமே யொழிய வொருவ ரிருக்குமிடத்து இன்றாம்.

"இருவர்கூடுங் கலப்பிலேயேதான் இன்பாநுபவம் உண்டென்பதே யுலகமுணர்ந்த வுண்மை" என்றார். உலகத்திலுள்ள சிலர் இருவர்கூடுங் கலப்பில் இன்பமென் றுணர்ந்தாரே யன்றி, நண்பர் ஒருவர் மாத்திரமாயிருந்து கலப்பின்றி யநுபவிப்பதே யின்பமென் றுணர்ந்தாரென்பதை யறிவிக்கவே யிவ்வாறு பொறித்தனர். இருவர்கூடுங் கலப்பிலேயே யுலகத்திலாநந்தம் உளவாமேல், நம் நண்பர் ஒருவராயிருக்கின்றமையின், ஆநந்தமின்றித் துக்கியாயிருப்ப ரென்றுணரலாம். அன்றன்று, யாம் தவசிப்பிள்ளையோடிருவராக இருக்கின்றே மென்பரேல், அவ்வாநந்தத்தைத் தவசிப்பிள்ளையோடு கலந்து அநுபவிப்பர்போலும்! உலகத்தில், இரண்டதிபதிகள், வீட்டிற்கிரண்டிஜமான், ஊரிலிரண்டு கக்ஷி, தேசத்தி லைக்யமின்றி யிருபகுதிப் படுந்தன்மை, ஒருவூரி லிரண்டு வித்துவான்கள், எனப் பற்பல இருபகுதிக ளிருக்குமாயின் கலாம் விளைகின்றதென்ப துலகப் பிரவித்தமான விஷயம். அதனை யுணராது இருவராயிருக்கின் ஆநந்த முண்டென்று மருண்டு வரைந்தார். இருவர் கூடுங்கலப்பிலேயேதான் இன்பாநுபவம் உண்டென்பதை மாற்றித், துன்பாநுபவ முண்டென்பதே யுலக முணர்ந்த வுண்மை யென்று படித்தலே சாலச் சிறந்ததாம்.

"இதற்கு ஸ்திரீ புருஷ ரிருவர் சேர்ந்தநுபவிக்கும் சிற்றின்பத்தையே உவமையாக வேதாந்த நூ லெல்லாங் கூறுதலுங் காண்க." என்றார்.

வேதாந்த நூல்களில் விஷயாநந்தம்போன்று என்று ஆநந்தத்தினை ஒருபுடை யுவமை கூறியிருக்கின்றதே யன்றி, இருவர்கூடுங் கலப்புத் தொழிலினை யுவமை கூறவில்லை. உபமான உபமேயங்களின் லக்ஷணந் தெரியாதவிவர், இங்குக் கூறியாங்கே, வேதாந்த சாஸ்திரங்களையுந் தமது சைவசித்தாந்த சாஸ்திரங்களையும் ஆராய்ந்தார் போலும். பிரமாநந்தத்தினை யிவ்வாறென்று கூற முடியாததற்கு உவமையாக விஷயாநந்தத்தினை யிவர் நூலினும் எமது நூலினும் பன்முறை பறையறைந்

திருக்குக் கூடுங்கலப்பிற்கு ஸ்திரீ புருஷர்களின் கலப்பு உவமையென்று, தான்தோன்றித் தம்பிரானும் கூறினர். கூடுது நண்பரது நூலில், குயவனை ஈஸ்வரனுக்கு உவமையாகக் கூறியிருக்குமிடத்திலும், குயவன் ஈஸ்வரன், பரிச்சின்னனும், க்ருசிக்யனும், சரீரியாயும், உளனென்பதற்கு உவமையென்று கொள்வதேயன்றி, நிமித்த காரணனாய் உளனென்பதற்கு மாத்திரம் உவமை யென்று மறந்துங் கொள்ளார் கொள்ளார். கொள்வாராயின், இவர் வாக்கியம் பொய்க்கு மன்றே. இன்னதற்கு உவமை வேதாந்த சாஸ்திரத்திற் கூறியிருக்கின்றதென் றுணரும், உரனிலாவிவர், எமபுரஞ் செல்லவிருக்கும் அற்பகாலத்தினையும், சும்மாவிருந்து கழிக்காது, வேதாந்திகளோடு விண்வாதந் தொடுக்க விரும்புகின்றது விந்தையிலும் விந்தையே. வேதாந்தத்தின் நறுமணக் காற்று, உலகெங்கும் வீசவேண்டுமென்று கருதி வாதஞ்செய்ய நினைப்பினு நினைப்பர். பெரிய பொருளுக்குச் சிறுபொருளை யொருபுடையொப்புக் கூறுவதேயன்றி, யெல்லாவற்றாலும் ஒப்புடைப்பொருளை, உவமை கூறுவதன்றாம். சாதிரிசியத்தின் இலக்கணமும், அநேக அவயவங்களின் சேர்க்கையென்றே கூறியிருக்கின்றது. 'சந்திரனைப்போன்று முகம்' என்று கூறுமிடத்து, சந்திரன் பௌர்ணிமியன்று இரவில் பொருள்களை விளக்குவதுபோன்று ஸ்திரீகளினது முகமும் அமாவாசையன்றிரவு இருட்டில் பொருளை விளக்கின்றி விளக்குமென்பதற்கு உவமானமன்று. பின்னையோ, சந்திரனைப் பார்த்தவுடன் சந்தோஷ முதலியன வுண்டாவன போன்று ஸ்திரீகளின் முகத்தினைப் பார்த்தவுடன் சந்தோஷ முதலியன வுண்டாமென்பதற் குவமையாம். இனி யெழுதுங்கால் சற்குருவைச் சரணாகதியாகவடைந்து, சாதக சதுட்டயங்கள் வரப்பெற்று, சாஸ்திரங்களை சாவதானத்துடன், சிரவணஞ்செய்து, பொருளைத் திரித்துணராது, செவ்வனே யுணர்வதாகிய மனனஞ்செய்து, அதனையே தைலதாரைபோன்று நிதித்தியாசனமுஞ்செய்து, பின் வரைவாராக! இவ்வாறு செய்யாது, இனியும் முன்பின் பாரியாலோசனையின்றி வரைவரேல், காமைமாநகரி லுள்ளார் காரியுமிழ்வதற் கிலக்கியமாவர்.

“ஒருவர்மாத்திர மின்புறுவதெப்படி” என்கின்றனர். இவர் கருத்து ஸ்திரீ புருஷர்களிருவருங் கூடியிருந்தா லின்பமுண்டாமென்பதாம். இன்பமென்னும் சொற்குப் பொருள் விஷயானந்தமென்றே கொண்டனர் போலும். பிரமசாரி, சந்நியாசி, வானப்பிரஸ்தர், விதுரர், விதவை முதலியோர்கள், ஒருவராய்த் தனித்திருத்தலின், அவர்கட் கானந்தமின் றென்று கொள்ளவேண்டிவரும். அவர்களோ சதா பரமேஸ்வரத் தியானியாயிருத்தலின் ஆநந்தமுடையோரென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. அவர்கட் கானந்தமின்றென் றிவரொப்புவரேல், விதுரராய இவர்க்கு ஆநந்தமின்றென்றே கொள்ளநேரும். நேரவே யினி நம் நண்பரது “சோமசுந்தர மாலைக்கு”க் கண்டன மெழுதுங்கால், துக்கியாய சொக்கலிங்கச் செட்டியாரெனப் பட்டங்கொடுத்து எழுதவேண்டிவரும்.

வரவே இவர் துவேஷத்தோடு கூடிச்செய்த சிவபூஜையும் நிஷ்பிரயோசனமாய் முடியுமென வுணர்க. உலகத்திலும், வியவகாரமுடையோர் "ஒருவருமின்றி யிதுகாறும் சித்தவிசிராந்தியாய் சௌக்கியமாயிருந்தேன்" என்று ஒருவரா யிருத்தலையே சுகமென்று கருதுகின்றனர். பின்னர் பற்பல வியாவகார நிமித்தமாய்ப் பலர்வந்து கூடுங்கால், கஷ்டப்படுத்துகிறார்களென்று அவர்மீது வருத்தமுற்று எப்பொழுது அகலுவரென் றெதிர்பார்க்கின்றனர். இதனாலும் ஒருவருக்கே யானந்த முண்டென்பது பசுமரத்தாணியாம்.

"இவர்களும் கூடஸ்தன் பிரமம் என்கின்ற இருபொருளுண்டெனக்கொண்டே, கூடஸ்த பிரம ஐக்கியம் கூறுகின்றார்கள். இதனால் அக்கூடஸ்தன் பசுத்துவ நீக்கத்துச் சிவப்பேருற்ற சீவான்மாவே யென்பதும், பிரமம் அவனுக்கின்பங் கொடுக்கின்ற பரமான்மாவென்பதும் விளக்கமாகின்றது." என்றார்.

ஈண் ) "ஆகின்ற சோயம்" என்னும் திருமந்திரச் செய்யுளை நினைப்பா , "அக்குழையன் இவனே" என்புழி முன்னர்ப் பார்த்த குண்டலமுடைய புருடனை, பின்னர், குண்டலமின்றி யொரு புருடன் பார்ப்பானாயின், அவனுக்கு குழையன் வேறு இவன் வேறு என்றுண்டாயிருக்கு மயலை நிவிர்த்திப்பான், உண்மையுணர்ந்த புருடன், "அக்குழையன் இவனே" யென்று கூறுவனாயின், அவ்விடத்து, குழையன் என்னும் புருஷனொருவனும், குழையின்றிய இவனே யென்னும் புருடனொருவனும், என இருபுருட ரிருக்கின்றனரா? இலரே. குழையாகிய வுபாதியினால், வேறுபோற் றோற்றிய பிராந்தியை நிவிர்த்தித்ததேயன்றி வேறின்றாம். அஃதேமான, கூடஸ்தனென்றும், பிரமமென்றும், நம் நண்பரைப்போன்றும், நண்பரது புத்திரனைப்போன்றும், கண்டப்பொருளா யிரண்டிலவாம். ஒரே ஸ்திரீக்கு, மகளென்றும், மனைவியென்றும், மாதாவென்றும், மாமியென்றும், மதினியென்றும், உபாதியின் வயத்தால் பலபெயர்கள் வருவதுபோன்று, ஒரே சேதனத்திற்கு, வியாபகத்தன்மையாற் பிரமமென்றும், அந்தக்கரண வுபாதியால் வரையப்பட்டிருத்தலிற் கூடஸ்தனென்றும், உபாதியால் வந்த இருபெயரேயன்றி, உண்மையி லிருபொருள்க ளிலவாம். உண்மையி லிருபொருளிருந்து, அவற்றிற் கைக்கியமாய சையோக சம்பந்தத்தினைக்கூறின், மோக்ஷம் மீண்டும் பிறப்புடை மோக்ஷமாம். சையோகம் அவ்வியாப்பிய விருத்தியாயிருந்து அநித்தியமா யுளதாகலின், ஒருபொருளிற்கு, பிராந்தியினாற் றோற்றிய இரண்டாந்தன்மையினை நிவர்த்தித்து, ஒன்றாந்தன்மையினைத் "தத்துவமசி" மஹாவாக்கியம் கூறுவதேயன்றி, நண்பரது கூற்றுப்போன்று, பிணைத்துவைத்திலவாம். சையோக சம்பந்தத்தினால், பிணைத்திருந்தமையினாலன்றோ, சுந்தரமூர்த்தி நாயனார் மீண்டும் பிறப்புற்றனர். இவரது மோக்ஷம் மீண்டும் பிறப்பைக்கொடுக்கும் மோக்ஷமாகலின், இஃதிவர்க் கிழுக்கின்றிப் பூஷணமே யாம்.

“ கூடஸ்தன் சிவான்மாவே ” என்றனர். தேற்றேகாரங்கொடுத்து வரைந்த இவரது புத்தியே புத்தியாம். கூடஸ்தன் என்னுஞ் சொற்குப் பொருள், முன்னமே விளக்கியிருக்கின்றாம். “ ஆரியன் ” என்பவரால் “ செந்திராதையருக் கெழுதப்பெற்ற பேதவாததிரஸ்காரத்தின் ” கண்ணும் பரக்கக் காணலாம். “ பிரமம் ” என்னுஞ் சொற்குப் பொருளும் முன்னர் யாம் விளக்கினோம். பேதவாததிரஸ்காரத்தின் கண்ணும் விளக்கி யிருப்பது கண்டமைவாராக. வேதாந்தசாஸ்திரத்திற்கூறுங் கூடஸ்தன் பிரமம் என்பதன்பொருளை வேதாந்தப் பெரியாரிடத்துக் கேட்டுத் தெரிந்துகொண்டாயினும் வரைந்தாரா? அங்ஙனஞ் செய்யாது, தம்மைச் சர்வஞ்ஞராகமதித்து, தம்மினத்தவர் கூறும், புன்மொழிகளை மெய்ம்மொழிகளாக நம்பி, கூடஸ்தன் என்பதற்குச் சிவான்மா என்றும், பிரமம் என்பதற்குப் பஞ்சகிருத்திய பரமேஸ்வரனென்றும் வரைந்தனர். அதிலும் ஒரு சூதுசெய்து, “ விளக்கமாகின்றது ” என்று வரைந்தார். ஞானமாகிய விளக்குடையார்க்கு விளங்குமே யன்றி, அஞ்ஞானமாகிய இருட்டுடைய இவர்க்கு விளக்கமாங் கொல்லோ! விளங்காது! விளங்காது!

“ இனிச் செய்யும் செயலெல்லாம் வியவகாரம். அச்செயல்களின் பலனை முடிவில் அநுபவிப்பதே பரமார்த்தம் என்பது யாவருக்குஞ் சம்மதமே. விவகாரத்திற் செய்வனவெல்லாம் பொய்யானால், முடிவிலநுபவமும் பொய்யன்றி மெய்யாகுமா? முடிவிலநுபவத்திற்கு மோசமாக விவகாரச் செயல்களைப் பொய்யென்ப தென்னையோ?” என்றார்.

விவகாரம் பொய்யானால், அதன் பலன் மெய்யாகா தென்று மிகவும் வற்புறுத்துகின்றார். “ பிஷ்டபேஷண நியாயம்” போன்று, கூறியது கூறல் இவர்களது குலதெய்வமாம். முன்னருங் கூறியிருக்க ஈண்டுங் கூறினர். இதனைச் சொற்பன ஸ்திரீ திருஷ்டாந்த முதலியவற்றால் முன்னர் விளக்கியிருக்கின்றோம். ஆண்டறிந் தமைவாராக. விவகாரம் பொய்யென்பதற்கு, விவகார காலத்தின்கண்ணே விவகாரம் பொய்யென்று பொருள்கொண்டனரோ? விவகாரகாலத்தில் விவகாரம் பொய்யன்றாம். பரமார்த்தகாலத்திலேயே விவகாரம் பொய்யாம். சொற்பனம் பொய், சாக்கிரம் பொய்யென்றால், சாக்கிரகாலத்திற் சொற்பனம் பொய்யென்றும், சொற்பனகாலத்தில் சாக்கிரம் பொய்யென்றும் அவ்விரண்டும் சுழுத்திகாலத்திற் பொய்யென்றும், அம்மூன்றும் துரியகாலத்திற் பொய்யென்றும் பொருள்கொள்க. இவ்வா றன்றித் தம் மனம்போனவாறு பொருள் கொள்ளற்க.

“ ஒருவன் ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொள்ளச் செய்யு முயற்சி சடங்கு முதலிய எல்லாம் விவகாரமே; அதற்குப் பரமார்த்தம் அப்பெண்ணைக் கலந்து அநுபவித்தலேயாகும். ஒருவன் பசியை நீக்கிக் கொள்ளச் செய்யு முயற்சி சமைத்தல் முதலிய செயல்கள் விவகாரம்;

அதற்குப் பாமார்த்தம் அதனையுண்டு இளைப்பாறும் அநுபவமேயாகும். ஒருவன் நிலத்தைச் சீர்திருத்தி நெல்லை விதைத்துச் செய்யுஞ் செயல்கள் விவகாரம்; அதற்குப் பாமார்த்தம் முடிவில் அப்பலனைப்பெற்று அநுபவித்தலேயாகும். இவை போல்வன பல " என்றார்.

விவகாரத்திற்கும் பாரமார்த்தத்திற்கும் உள்ள பேதத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமாயின் யாவரும் நம் நண்பரிடத்திற்றான் செல்ல வேண்டும். "ஒருவன் விவாகஞ்செய்துகொள்ள முயற்சித்தலும், பசியை நீக்கிக்கொள்ள முயற்சித்தலும், நெல்லை விதைக்க முயற்சித்தலும், விவகார"மென்கின்றார். "அப்பெண்ணோடு மைதுனித்தலையும், உண்டு இளைப் பாறுதலையும், நெல்லைப்பெறுதலையும் பாரமார்த்தம்" என்கின்றார். நடுநிலையோரே! கவனித்துப் பாருங்கள். நண்பர் கூற்றுப்படி வியாவகாரிகம் பொய்யும் பாரமார்த்திகம் மெய்யுமாம். கூறிய திருஷ்டாந்தத்தில், மெய்ப்பொருளொன்றும் பொய்ப்பொருளொன்றும் வேறுபாடின்றே? யாவும் வியாவகாரிகப் பொருளே! அதன்கண் எவ்வாறிருவித கற்பனை செய்தனர்? சிருஷ்டிகாலத்திலுண்டாய், முத்திகாலத்தில் நசிக்கும் பொருளை வியாவகாரிகப் பொருள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அப்பொருள்கள் பிரமஞானத்தினால் நசிப்பனவாம். சிருஷ்டிக்கு முன்னும், பிரளயத்தின் பின்னும், முத்திகாலத்திலும், உள்பொருளை பாரமார்த்திகமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அப்பொருள் நிர்க்குணப் பிரமமொன்றேயாம். பிரமஞான மின்றி, வஸ்துவின் யதார்த்த வுணர்ச்சியால் நசிக்கும் பொருள் பிராதிபாஸிகப் பொருளாமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வாறாய பேதமுணராது வீண்வாதம்தொடுத்து வீண் சிரமப்பட்டார். ஒருவன் மலடிக்கு மகனுளனெனக் கூறின், அக்கூற்றை, வியாவகாரிக மென்றும், அதனால் மலடிக்கு மகனுளனென வுண்டாய சாப்தபோதத்தினைப் பாரமார்த்திக ஞானமென்றும் கொள்ளினும் நம் நண்பர் கொள்வர். சாஸ்திர முணர்ந்தாலன்றோ விரோதந் தோற்றும். சாஸ்திர ஞானமிலார்க்கு விரோதந் தோற்றுவ தியாங்ஙனம்?

"இச்செயல்க ளில்லையானா லந்தந்த அநுபவம் வாய்ப்பதெப்படி? இதுபோலச் சீவர்களாகிய கூடஸ்தர்கள், சிவமாகிய பிரமத்தைச் சேர்ந்தநுபவித்தற்குச்செய்யும் சரியை கிரியாதி செயல்களு மெய்யாயுள்ளனவே. பரமார்த்தாநுபவமு மெய்யாயுள்ளதேயென்று கொள்ளும் பொருத்தம் இவர்களுக்கு விரோதமாய் விபரீதவிளைவைச் செய்வதென்னையோ? விரிப்பானேன்? நிற்க" என்றார்.

இதுவும் முன்னர்க் கூறியதனையே "வெள்ளரிப்பழத்துக்குப் பூண் கட்டியது போன்று" கூறுகின்றமையின், கூறியது கூறலென்னும் குற்றமடையாது விடுத்தாம். இதற்குச் சமாதானம் முன்னர் வந்துழிக்கண்டுணர்க.

" இனி ஆதிசங்கராசாரியரும் ஆரம்பத்தில் அகம்பிரம மார்க்கத்தி னின்று, பின்பு நீலகண்ட சிவாசாரியரால் தெளிந்து சிவதீக்ஷாதிபெற் றுச் சைவராய் வாழ்ந்தனர். அது அவர் செய்துள்ள நூல்களாலும், சந் திரமௌளீசுர பூஜாதியாலும் தெளியலாம்" என்றார்.

ஸ்ரீமந் மஹாதேவ அநுக்கிரக லீலாவிக்கிரகமாகிய சங்கராசாரிய சுவாமிகள், நீலகண்ட சிவாசாரியரிடத்து சிவதீக்ஷை பெற்றார்களென்று வரைந்தார். அங்ஙனம் அவரிடத்துத் தீக்ஷைபெற்றார்க ளென்பதற்குப் பிரமாணமெங்குளது? பிரமாணமின்றிப் பொய்புகலுவதி லிவரே சமர்த் தராவர். நீலகண்ட சிவாசாரிய ரெத்தன்மை வாய்ந்தவர்? கோகரணத் தில் வைதிக பிராமண குலத்திற் சனித்து, கிரகஸ்தரா யிருந்து, சகுண பரமாகப் பிரம சூத்திரத்திற்குச் சாமானிய பாஷியமியற்றி வாழுநாளில் சங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகள், திக்குவிஜயத்தின் பொருட்டு கோகரணஞ் சென்றிருக்குங்கால், வாதஞ்செய்து ஸ்ரீ சங்கரமூர்த்தியிடத் துத் தோல்வியுற்று, தமது சிஷ்யருடன், எமது லோக குருநாதனுக்கு மாணாக்கராயினரென்று சரித்திரமிருக்க, மாறாய் சிவரகஸியம் நவமாம் சம் 16-வது அத்தியாயத்தில் 61 சுலோகங்களால், பரமேஸ்வரன் பார்வ திக்கு நாமே ஸ்ரீ சங்கரன் என்னும் பெயரோடவதரித்து, பேதவாதிக ளைத் தொம்சம்செய்து, அத்வைதத்தை நிலைநாட்டுவோம் என்று பலவாறு புகழ்ந்து கூறியிருக்கும், ஸ்ரீமத் சங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமி கட்கு, ஜீவர்களுள் ஒருங்குவைத் தெண்ணத்தக்க நீலகண்ட சிவமென் பார், தீக்ஷைசெய்தற்கெவ்வா றருகராவர்? இன்னும் நீலகண்ட சிவமென் பார், வேதாந்தத்தை யொருபுடை யொப்பினவராயிற்றே! நண்பர் கருத் துப்படி அவர் தமதாசாரியராய, ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளுக்கு தீக்ஷை செய்வரா? அவர் நண்பருக்கு நேர்விரோதியுமாவரே! நண் பரோ ஈஸ்வரன் கேவலம் நிமித்தகாரண னென்பவர். அவரோ, ஈஸ் வரன் அபின்ன நிமித்த வுபாதான காரண னென்பவர். இவரோ ஆண்டானடிமைத் திறங்கூறி மோக்ஷதசையில் இரண்டும் ஸ்திரீபுமான் போன்று சையோகித்திருப்ப தென்பவர். நீலகண்டசிவமோ ஐக்கிய வாத [illegible]வமென்னுஞ் சிவாத்வைதங்கூறுபவர். இவ்வாறு இவருக்கும் நீல க[illegible]சிவத்திற்கும் முழுவிரோதமாய்ப் பற்பல விஷயங்களுள்ளன. நீல கண்டசிவங்கூறும் இவ்விஷயங்கள் நமக்கநுகூலமாம். இவ்வாறிருக்க தீக்ஷைசெய்தாரென்று பொய்ம்மொழிபுகன்ற மகாபாதகத்திற்கு என்ன பிராயச்சித்தஞ் செய்துகொள்வாரோ? சிவாவதாரமாகிய சிவத்திற்குச் செய்த பாபத்திற்குப் பிராயச்சித்தமில்லையென்றே, பிராயச்சித்தம் விதி க்கு நூல்கள் விதிக்கின்றன. சிவத்துரோகியுங் குருத்துரோகியுமாகிய இவரைக்காண்டலுந் தகாதாம். இவரெழுதியதுபோன்றே "இவரும் இவர் மதத்தினராய சிவஞானசுவாமி, செந்திநாதையர், ஆறுமுகநாவலர், அம்பலவாணநாவலர், சத்தியோஜாதசிவாசாரியார் முதலியோர்கள், ஸ்ரீ ரங்கத்தில் இராமாநுஜாசாரியார் பாரம்பரையிலுள்ள குருமார்களால்,

வைஷ்ணவதீக்ஷை செய்யப்பெற்று, பரம்பரை வைஷ்ணவராஞர்கள்.
இஃது அவர்களது நூல்களாலுணரப்படும்'' என்று யாம் எழுதின் ஒப்பு
வரா? ஒப்பாரன்றே? அதுபோன்றே, நாம் பொய்ம்மொழி புகலலாமா
என்று அறிவு அற்பமேனும் வேண்டாமா? பாபங்களிலெல்லாம் பொய்
புகல்வதே மகாபாவமென்று சாஸ்திரங்கள் புகல, அதனையுணராது இவ
ரும் இவர் மதத்தினருங் குலத்தொழிலாகக் கொண்டாடுகின்றார்கள். என்
செய்வார்பாவம்! ஊழ்வினை யாரை விட்டது?

இன்னும் ஒருவிந்தையைப் பாருங்கள். "அது அவர் செய்துள்ள
நூல்களாலும் தெரியலாம்'' என்றார். இதுகாறும் ஸ்ரீரங்கம் வாணீ
விலாஸ பிரஸில் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் செய்ததாக அச்சுவாகன
மேறியிருக்கும் 115 கிரந்தங்களுள், "நாம் நீலகண்ட சிவத்துக்கு
மாணுக்கராகி, சிவதீக்ஷை பெற்றுக்கொண்டோம்'' என்று பிரமாணமிருப்
பின் எடுத்து வரைவாராக! பிரமாணங்களை வரையாது கட்குடியன்
போன்று, கண்டபடியெல்லாங் கனைப்பது கற்றார்க் கழகன்றாம். "அது
அவர் செய்துள்ள நூல்களாலுந் தெரியலா''மென்று எழுதிவிட்டால்,
வேதாந்திகள், மௌநமுற்று ஒப்புவரென்று வரைந்தனரோ? இவ்வா
றாய கண்டனங்கள் வருமென்று முன்னரே யுணர்ந்திருப்பாராயின்,
இங்ஙனம் வரையாதிருந்திருப்பர். வரைந்தபின் இவர் குட்டெல்லாம்
நடுத்தெருவிற்கு வந்துதானே தீரவேண்டும்.

"வியாசரும் அகம்பிரமச் சார்பின் மதிமயங்கி நாராயணனே பரம்
பொருளென்று, விசுவநாத சந்நிதியில் பொய்கூறிக் கை தம்பிக்கப்பெற்று
அந்நாராயணரே வந்து பணிந்து பிரார்த்தித்து வேண்டிப்பெற்ற விசுவ
நாதர் திருவருளால், தம்பம் நீங்கப்பெற்றுச் சைவரேயாகி யுய்ந்தனர்''
என்றார்.

ஸ்ரீ வியாசபகவான் சைவராகி ஆண்டானடிமைத் திறங்கொண்
டுய்ந்தார் என்பதற்கு, புராணங்களில் பிரமாணமுளவோ? வியாசபக
வானை யெழுதி யிருக்கின்றனரா? அங்ஙனமிருப்பின், தம்மையாப்
பிள்ளை யென்னும் சுதேச இயற்பெயரினை யுடைய சுவாமிநாத பண்
டிதரென்பார் ஸ்ரீ வேதவியாச பகவானை அடங்கன் முறையின் முகவுரை
முதலியவற்றில், "மருளர்'' என்று பலவாறாக நிந்தித்து எழுதுவரா?
நண்பர் கூறியாங்கு சைவராயிருப்பின் சிவஞானசுவாமி யென்னும் நம்
பிரான் தமது பேருரையின்கண் ஸ்ரீ வியாசபகவானை, ஒருமைச்
சொல் முதலியவற்றாற் பலவாறு நிந்திப்பரா? இவர் மதத்தினர்
பலரும் ஸ்ரீ வேதவியாச பகவானை வாய்கொண்டமட்டுந் திட்டுவராக
லின், இவர் மதத்தினர் கொள்ளாத புதுக்கற்பனையினை யிப்பொழுது
நண்பர் கற்பிக்கின்றார். பிரமசூத்திரத்தினை யிவர் அகம்பிரம நூலென்
கின்றனர். நம் நண்பர் குலகுருவாய செந்திநாதையர் அதனைச் சைவ
சித்தாந்த சாஸ்திரமென்கின்றனர். இவ்விருவர் கூற்றில் எவர் கூற்றுக்

கூறு கூறுமோ? அறிஞர்கள் உணர்தற்பாலதே. இப்பிரம சூத்திரத் திற் கந்நியமாக அகம்பிரமச் சார்புடையநூல் ஸ்ரீ வேதவியாச பகவான் செய்திருப்பாராயின் அதனை வரைவாராக! செந்திநாதையரோ ஸ்ரீவியாச பகவானை எக்காலுஞ் சைவசித்தாந்தியே யென்கின்றனர். நண்பரோ முன்னர் வேதாந்தியாயிருந்து, பின்னர் சைவசித்தாந்தியாயினரென்கின் றனர். எப்பொழுதுஞ் சைவசித்தாந்தியா யிருந்திருப்பாராயின், பிரம சூத்திரமொன்றே போதியதாயிருக்க வேறு பேருரைகளியற்றவேண்டிய ஆவசியகமின்றாம். வேறுரைக ளியற்றி யதனுனே வியாசபகவானியற்றிய பிரமசூத்திர முதலியன, சைவசித்தாந்தக் கோட்பாடுடையனவல. வைதிக ராய வியாசபகவான் அவைதிகமாய சைவசித்தாந்தத்தைக் கொள்வரா? ஸ்ரீ வியாசபகவானென்னும் பெயருடன், ஒன்பது பேர்கள் அவதரித்தன ரென்று பாகவதம் கூறுகின்றது. நம் நண்பர் கூறியாங்கு சைவராக வாழ்ந்திருப்பின் எந்த அவைதிகக் குருவினிடத்துத் தீக்ஷைபெற்று, எந்த அவைதிக சாஸ்திரத்தினை, எந்தவூரில், எந்தக்குருவினிடத்துப் பாடங் கேட்டு, அவ்வாறநுட்டானஞ் செய்தனர்? இவற்றையெல்லாம் வரையாது, வீண்வெற்றுரையாகச் சைவரேயாய் வாழ்ந்தனரென்று, பிரமாணமின்றி வரையின் யாவ ருடன்படுவர்? யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவல ரும், தமது பிரசங்க ஆரம்பத்தில், "சங்கரன் உலகைக் கெடுத்தான். வியாசன் வீண்வாதந்தொடுத்து வேதமுதலியவற்றைக் கெடுத்தான்" என்று பலவாறான நிந்தை மொழிகளைக் கூறுவரா? அவர்களெல்லா ரும் "அத்வைதி" யென்று ஸ்ரீ வேதவியாசபகவானை யொதுக்கி யிருக்க அவர்களைப்பார்க்கிலும் கூரியபுத்தியுடையவராகலின், நம் நண்பருக்குச் சைவசித்தாந்தி யென்று தோற்றியது போலும்.

"ஸ்ரீராமர் பாலியத்திலே பிரபஞ்சத்தில் விமுகராய், ராஜபாரம் வகிப்பதில் நோக்கமின்றிச் சன்மார்க்கோப தேச விருப்புற்றுக் கிடைக்கப் பெறுமல், எப்பொழுதுந் துக்கமுற்றிருப்பது நோக்கித் தசரதர் வேண்டு கோளுக்காகவே, வசிட்டர் வந்து, (இந்திரனுக்கு அவன் பருவ நோக்கித் தமக்குக் கருத்தில்லாத "மங்கை மாரிடத்தின்பமே யின்பம்" என்பதா தியான காமநூற் போதனை செய்த வியாழ பகவான் போலத்) தமக்குக் கருத்தில்லாத, நாம் பிரமமென்னும் போதனைசெய்து, ராஜபாரம் வகிக் கும்படி யேவினராயினும், ராமர், பின்னர் அகஸ்தியராதியாற் சைவோ பதேசம் பெற்றுச் சிவலிங்க பூஜாதிகள் செய்து சைவராகியே வாழ்ந்த னர்" என்றனர்.

வசிட்டர் தமக்குக் கருத்தில்லாத "நாம் பிரமம்" என்னும் போ தனை செய்தனரென்றார். ஸ்ரீ வசிட்ட பகவான், தாமியற்றிய நூல்களி லெவ்விடத்தேனும், நாம் பிரமமென்னும் வேதாந்தமார்க்கம், உடன் பாடல்லவென்று கூறியிருக்கின்றனரா? அங்ஙனங் கூறியிருப்பின் அவ் வாக்கியங்களை யெடுத்து வரைய அஞ்சுவானேன்? தமக்குடன்பாடில்

லாத வேதாந்தத்தினை யுபதேசிப்பாராயின், அவ்வரைப் பெரியாரென் றியா வர்கொள்வர்? உண்மையுரைப்போர் பெரியாராவரே யன்றிப் பொய்கூறு வார் ஒருபோதும் பெரியராகார். ஸ்ரீ ராமபிரானை ராஜஸீகப்பற்றுடையவ ராக்கும்பொருட்டு, யான் வேதாந்தத்தினை யுபதேசித்தேனென்று யாண் டேனும் ஸ்ரீ வசிட்ட பகவான் கூறியிருக்கின்றனரா? அங்ஙனமின்றே! ஸ்ரீ ராம மூர்த்தியும், ஸ்ரீவசிட்ட பகவா னுபதேசித்த வேதாந்த மார்க்கம், உண்மையான மார்க்க மன்மையின், நான் சைவசித் தாந்த மார்க்கத்தைக் கைக்கொள்கின்றேன் என்று, எந்த நூலிலே னும் வரைந்திருக்கின்றனரா? இன்றே! இவ்வாறவர்களது பிரமாண வாக்கியங்களின்றி இவரினத்தவர்கள் பரம்பரையாகக் கூறிவருங் கற்ப னைக் கதையைப் பிரமாணமாகக்கொண்டு வரையின் அங்கீகரித்தலேலு மோ? ஏலாது! ஏலாது! வாசிட்டத்தினையும் மஹா ராமாயணத்தினை யும் நன்காராய்ந்திருப்பின் இவ்வாறு வரையார்! வரையார்! இதனால் ராமதாபநீயம்முதலிய வுபநிஷத்துக்களில் கூறப்படும் பரம அத்வைத சித் தாந்தத்தினை ஸ்ரீராமபிரான் கைக்கொண்டிருந்தனர் என நாட்டியதாம்.

“அர்ச்சுநர் யுத்த பூமியிலே கொலைப்பாவத்துக்கஞ்சி, வில்லையுங் கைவிட்டு நின்றதுகண்டு, சமயோஜிதமாகக் கண்ணபிரான் நாம் பிரம மென் றுபதேசித்த போதனைபெற்று, அக்கொலைத் தொழிலைச் செய்தா ராயினும், அவர் நான் பிரமமென்னும் ஆபாசநிலையைச் சிறிதுங் கொள் ளாமற் சிவபூஜையே செய்து சைவராயே வாழ்ந்தனர்” என்றார்.

யுத்த பூமியில் அர்ச்சுனன் கொலைசெய்தற்கஞ்சி, வில்லைவிட்டு நிற் குங்கால் கண்ணபிரான் நாம் பிரமமென்று சமயோஜிதமாய் உபதேசித் தார் என்றார். ஸ்ரீ கண்ணபிரான் சமயோஜிதமாய் யாவரையுங் கொல் லும்படி யுபதேசித்தனரா? இன்றே! கொல்லப்படுவன சரீரங்களே யன்றி ஆன்மா வலவென்றும், கொல்வனவும் சரீரங்களேயன்றி ஆன்மா வலவென்றும், பிறத்தலிறத்தல் உடம்பிற்கேயன்றி ஆன்மாவிற்கின்றென் றும், நம் நண்பர் மதத்தினரும் உடன்பட்ட யதார்த்த நிலையினை யுபதே சித்து, அவருக்கிருந்த மயலை நிவர்த்தித்தனரேயன்றி, வேறின்றாம். அத் வைத நூல்கள் கொலை நூலகளென நண்பரது கருத்தேபோலும். அத் வைத வுபதேசம் பெறுபவர்களெல்லாங் கோறல் செய்பவரெனக் கருது கின்றார். நம் நண்பரிடத் துபதேசம்பெற்று, சிற்சில புஸ்தகங்க ளச்சிடப் பொருளுதவிய மாணுக்கர்கள், ஆறுமாதம் மாமிச பக்ஷணிகளாயும், ஆறு மாதம் அமாமிச பக்ஷணிகளாயும் இருக்கின்றார்களென்பதை யுணர்ந்து, அவர்களை அக்கொலைப் பாதகத் தொழிலினின்றும், நிவிர்த்திப்பிக்கா திருக்கும், இவரே கொலைசெய்யும்படி யுபதேசிக்குங் குரவராவர். முக் காலமுணர்ந்து, விஸ்வரூப தரிசனங் காண்பித்த ஸ்ரீ கண்ணபிரானது உபதேசத்தினை, “ஆபாச நிலையென்று கருதி சிறிதுங் கொள்ளாது அர்ச் சுனர் வாழ்ந்தாரென்று ஆபாசச் சொற்புகன்று அவக்கடலில் மூழ்க

ஆசைப்படுகின்றார். ஸ்ரீ கண்ணபிரானை அர்ச்சுநர் தெய்வமாகப் பாவித்திருக்க, அவரதுபதேசத்தினை யாபாச வுபதேச மென்று கொள்வரா? அங்ஙனங் கொண்டிருப்பின், யாண்டாயினும் அவரதுபதேசம் ஆபாச மென்று கூறியிருப்பரோ? அங்ஙனங் கூறாதிருப்ப, நம்மன்பர் ஆருடத்தாலறிந்தனரா? அர்ச்சுநர் எவரிடத்துத் தீக்ஷைபெற்றுச் சைவராய் வாழ்ந்தார்? பிரமாணமின்றி வெற்றுரையாகத் தாமெழுதிய 21 பக்கமுள்ள புத்தக முழுவதும், உலகத்திலுள்ளவர்களுள் பெரும்பான்மையோர் சைவராய் வாழ்ந்தனரென்று எழுதி முடித்தார். எழுதி முடித்தாராயினும், சமணர் பௌத்தர் முதலியோர்களைச் சைவரென்று கூறாது விட்டதன் கருத்து இன்னதென்று புலப்படவில்லை. அவர்களையுஞ் சைவரென்றே சொல்லிவிட்டால் அறுபத்து மூவரையும், வேதாந்தப் பெரியோர்களையும், வைஷ்ணவப் பெரியோர்களையும், மூர்த்திகளாகச்செய்து ஸ்தாபித்துப் பூஜை செய்துவரத் தாம் விரும்பும் சிவாலயங்களில் இடமின்றிப் போமெனக் கருதியே யொதுக்கினர் போலும்.

"ராமர் அர்ச்சுநர் இருவரும் அப்பொழுது கொண்ட நிலைமைநோக்கி, அவர்களை யந்தந்தக் காரியங்களிற் செலுத்துதற்காகவே, வசிஷ்டர் கிருஷ்ணரிருவரும், வாசிஷ்டமும், பகவத்கீதையும் உபதேசித்தார்களன்றி, உபதேசித்த இருவர் கருத்தும், உபதேசம்பெற்ற இருவர் கொள்கையும், அதுவல்ல வென்பதை, "அர்ச்சுநர்க்கு மிராமருக்கு மதிகார மவை நோக்கி யறைந்த நூலின், கருத்தறியாய்" என்ற மகாராஜாதுறவு நூலினாலுங் காணலாம். இந்நூல் நாம் பிரம மென்பவராற் பாராட்டப் பெற்றதே" என்றார்.

உபதேசித்தவருக்கும் உபதேசம் பெற்றவருக்கும் உடன் பாடல்லாத ஒரு மதத்தினை யுபதேசிப்பானேன்? அவர்களதனை அங்கீகரித் துடன் படுவானேன்? இதுவே நூல் வழக்கென்பாராயின், நமது நண்பரதாகமத்தினைத் தமது கருத்தின்றியே, யீஸ்வரன் உபதேசித்தாரென்றும், அதனை யிவர் மதத்தினர் உடன்பாடின்றியே வாமாகமம் போன்று உடன்பட்டாரென்றும் பிறர்கூறின் எத்துன்பமுறுவரோ அது போன்று பிறரைப்பழிமொழிகள் நாம் கூறின் ஒப்புவரா வென்று சற்றேனும் யூகம் வேண்டாவோ? இவ்வாறு கூறியதனால் இவர்க்கு என்னையிலாபங்கிடைத்தது? இவ்வபிப்பிராயத்தினை விளக்குதற்கு மேற்கோளாகக்கொண்ட மகாராஜாதுறவுச்செய்யுள் ஒன்றனையேனும், முன்பின் உள்ளவற்றையேனும் ஆராய்ந்துவரைந்தனரா? "ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு" என்னும் பழமொழிப்படி, அவசரப்புத்தியால் விசார மின்றி "அருச்சுநர்க்கு மிராமருக்கு மதிகாரமவை நோக்கியறைந்த நூலின் கருத்தறியாய்" என்னும் இவ்வளவு வாக்கியத்தினைத் "திருப்பதி யம்பட்டன் போன்று" பிரமாணமாக எடுத்துக்கொண்டனர். மேல் "**ஞாந மொன்றே பிரமாணம்**, சரிதையது கணக்கன்றாகும், விருத்தம், அறிவாசார முடையோனே ஞானி, இல்லோன் விருத்தனாகும், திருத்தமுடன்;

அமைச்ச ! இது துணிவென்றே யுட்கொள்வாய், நீ ராஜாகி, '' என்றுள்ள வாக்கியத்தினை யெடுத்திருப்பாராயின் தமக்கு அநுகூலமா யிருக்கின்ற தென்பதும், பிரதிகூலமாயிருக்கின்றதென்பதும் விளங்கும். அவ்வளவு தூரஞ்செல்லுதற்கு ஆற்றலற்ற இவர்க்கு முன்பின்னுள்ள விஷயங்க ளெங்ஙனங்கோசரமாம்? முன்பின்னுள்ள சரித்திரத்தின் றொடர்பினை யாவதுணர்ந்தனரா? உணராது வெற்றுரையாகக்கூறி '' வாய்க்கொழுப் புச் சீலையில் வடிந்தது போன்று '' என்னும் பழமொழிக்கு இலக்காயினர்.

'' நன்மகாராஜன் துறவடைந்து, ஆரண்யத்திற் பிரமாநந்த மூற் றிருக்குங்கால், வித்தகனென்னும் மந்திரிசென்று, அரசனைத்தரிசித்து, ஞாநமடைதற்கு இல்லறமும் போதியதாயிருக்க, துறவறமெற்றிற்கு ?'' என்று வினவினன். அதற்குத்தக்க சமாதானங்கள் கூறியபின், '' ஞாந மடைந்ததன்பின் ஸ்ரீ ராமர் அர்ச்சுநர் முதலியோர்கள்போல் இல்லற வாழ்க்கையிலிருக்கலாம் '' என்று மந்திரிகேட்க, அதற்குச் சமாதானமாக நன்மகாராஜன், லோகபாலர்களாய், அவதார புருஷர்களாயுள்ள ஸ்ரீராமர் அர்ச்சுநர்களின் உத்தமாதிகாரத் தன்மையினைக்கருதி, ஸ்ரீ வசிட்டபக வானும் ஸ்ரீ கண்ணபிரானும் உபதேசித்த ஸ்ரீ வாசிட்டம் பகவற்கீதை யென்னும் நூல்களின் கருத்தினை யுணர்ந்தா யில்லை. அந்நூல்களிற் கூறப்பட்ட பிரமஞாநமொன்றுமே பிரமாணமாக யாங்கொள்ளத்தக்க தாகும். ஸ்ரீராமபிரான் சமுத்திரத்தில் கரையிட்டு, இலங்கைசென்று இராவணனைச் செயித்ததும், அர்ச்சுநர் பாரதப்போர் நடாத்தினதுமாய சரித்திரங்களை யாம் கொள்ளேம். அவைகள் பிராரத்த கருமாநுசார மாகலின் ஞாநசாஸ்திரங்கள் விதிப்பனவலவாம். ஞாநாசாரமுடையவர் யாவரோ அவரே ஞாநியாவர். ஞாநாசார மிலாதவர் ஞாந சாஸ்திர விரோதியாவர். அமைச்ச! திருத்தமுடன் இது துணிவென்றே யுட் கொள்வாய் என்று கூறி, நான் இல்லறத்துக்குவரேன். நீ யுனதூருக்குச் செல்வாய் என வுபதேசஞ்செய்துவிட்டு மௌந மூற்றிருந்தனர் என்று அம்மகாராஜாதுறவு என்னும்நூல் கூற அதனை யுற்றுநோக்காது தமக் கநுகூல மென்று கருதி '' அருச்சுநர்க்கு மிராமருக்கு மதிகாரமவை நோக்கி யறைந்த நூலின், கருத்தறியாய் '' என்னும் இவ்வளவு வாக்கியத் தினை மாத்திரம் '' அந்த கோலாங்கூல நியாயம் '' போன்று கைக்கொண் டார். கைக்கொண்டதனாலன்றே மதங்கொண்ட பசுவாலினைப்பிடித்துத் தன் வீட்டுக்குச்செல்ல நினைத்த குருடன் போலாயினர். அவ்வாக்கியத் தினைக் கொள்ளாதிருப்பின், இக்கதியுற வேறருந்தவஞ் செய்யவேண்டும். தவமின்றி யிக்கதி யடையலாமென்று கருதியன்றே, இவ்வாக்கியத்தினைக் கையாடினர்.

'' இந்நூல் நாம பிரமம் என்கின்றவர்களால் பாராட்டப்பெற்றதே '' என்றார்.

ஒரு நூலிற் கையாட நினைத்தவர் தமக்கு எதிரிகளாயுள்ள வேதாந் திகளாற் பாராட்டப்பெற்ற நூலில், பாதகமா யிருக்குமேயன்றிச் சாத

கமா யிராதென்று கருதாது, " ஒளியப்போய் தலையாரிவீட்டி லொளிந்தான் " கதைபோன்று, எதிரிகளாயுள்ள வேதாந்திகளது, தமக்கு முழு விரோதமாயுள்ள வாக்கியத்தில் நுழைந்து, மறைதலாகிய பிரமாணமாகக் காட்டுதலைச் செய்யச் சென்று சிறைவாசமாயினர். இவ்வாறு செய்யாது சும்மாவிருப்பின் சிறைவாச மிவர்க்குக் கிடைக்குமோ? அந்தோ! இவரதற்பமதி யிருந்தவாறென்னே!

" இனி அந்த வாசிஷ்ட கீதாதிகளிலும் சைவநலங்கள் பொதிந்துள்ளன. இதனை " அற்பவறி வினர்க்கிந்த வரிய மெய்ந்நூ, லீனமுறு மடமைதரு மிதுபோன் மற்றை யெந்த நூல்களூ மடமை யியற்றா தன்றே " ' ஆய்ந்தவென் சிந்தை சிவ நாயகன் வசமா கைக்கே, யேய்ந்தது நிலையுங் கொள்ளா திறைவனைப் பிரிந்தாள் போல '—' ஆவா விப்போ துள்ளபடி யறியு நெறியி லெனை யறிந்தேன், ஓவா விகற்ப மற்றறிவுள் ளொளியாஞ் சிவ னுருவி துவோ'—'ஈனமில்லை வாகமர்க்குச் சிவனுய்' என்பன வாதிகளால் விளக்கும் வாசிட்டத்தாலும் " என்றார்.

வாசிஷ்டத்தில் சைவநலங்கள் பலவுளவென்று சிற்சில செய்யுளிற் சிற்சில வாக்கியங்களைக் காண்பித்தார். முற்றிலுங் காண்பித்திருப்பின் முரண்வெளியாம். வாசிஷ்டத்தின் வைராக்கியப் பிரகரணத்தில், ஸ்ரீராம பிரான் ஸ்ரீ விசுவாமித்திர முனிவர் கேட்ட வினவுக்கு, தனது மனோபாவத்தைச் சொல்லிக்கொண்டு வருமிடத்துள்ள செய்யுட்களுள்,

" மாந்தர்தம் இளமை நில்லா திவையெலா மநத்தி னெண்ணிச்
சாந்திகொள் பெரியோர் நீவிர் சமாதியோ கத்தைச் சார்மின்
ஆய்ந்தவென் சிந்தை சிவ நாயகன் வசமா கைக்கே
யேய்ந்தது நிலையு மெய்தா திறைவனைப் பிரிந்தாள் போல " 117

என்னும் இச்செய்யுளுமொன்றும். இதன்கண் தமக்கு ஏதோ அநுகூலமிருப்பதாகக் காண்பித்தார். " ஆராய்ந் தறிந்த என் மநமானது கூடஸ்த பிரம வைக்கியத்தினை யடைவதற்கே யிசைந்தது. நாயகனைப் பிரிந்த நாயகியைப்போல, ஆத்ம நிச்சயத்திலும் விஷய விச்சையிலுஞ் சேராது." என்பது நண்பர் காட்டிய இரண்டு வரிக்கும் பொருளாம். இதன்கண் இவர்க்கு யாதும் அநுகூல மின்றிப் பிரதிகூலமாய், எமக்கு அநுகூலமாயினவாறு காண்க. வலியுளதேல் இதன் மூலசுலோகத்தினையும் ஆராய்ந்து பார்ப்பாராக! இச்செய்யுளில் முன் இரண்டு வரியில் இவர் கூற்றுக்கு மாறாய்ப் பாச மநித்திய மென்று கூறப்பட்டிருக்கின்றது.

இதற்கு முன்னுள்ள,

" இறப்பிலா விந்த மோக மிறையுமீட் டெண்ண மின்றி
மறப்பதே நல்ல தென்று மதித்துயர் மநத்தி னுக்குத்
திறப்படக் காணப் பட்ட தில்லெனச் சித்தி னாலே
யுறப்பெறு மெப்போ தப்போ துயர்பா சுகம தாமே. " 10

" வழிபடு மிதனை விட்டு மற்றுள நூல்க ளென்னுங்
குழிகளிற் புரண்டஞ் ஞானக் குணத்தினற் பிறப்போர்க் கெல்லா
மொழிவற வொருவர் செய்தற் குரித்தன்றாய்த் தானே யுண்டாங்
கழிதலிற் பரம வின்பங் கற்பங்க ளாலுங் கூடா." 11

என்னும் இவ்விரண்டு செய்யுட்களும், இன்னும் பற்பல செய்யுட்களும் இவர்க்குப் பிரதிகூலமாகக் கூறியவற்றை யுணர்ந்திருப்பாராயின் இச்செய்யுளைக் காண்பித்திரார். இரார்.

முமுக்ஷுப் பிரகரணத்தி லுள்ள,

"ஊனமிலா ஞானநூல் விசாரத் தாலே யுயர்வீடு நண்ணுமென லுண்மை யன்றோ, தானறியு மநுபூதி ஞான நன்னூற் சற்குருவிம் மூவகையுந் தம்மி லொத்தே, யானவகை யியற்றில்விடா தான்மாத் தோன்று மற்பவறி வினர்கற்ற வரிய மெய்ந்நூ, லீனமுறு மடமைதரு மிதுபோன் மற்ற வெந்தநூல் களுமடமை யியற்றா தன்றே." 14 என்னும்

இச்செய்யுளில், பின்னுள்ள ஒன்றரை வரியில் தமக்கநுகூலமிருப்பதாகக் காண்பித்தார். முன்னுள்ள வாக்கியங்களில் சுருதி குரு சுவாநுபவ மூன்றுங்கூடில், எப்பொழுதும் நீக்கமற நிறைந்த ஆன்மாத் தோன்றும் என்று கூறப்பட்டிருக்கின்றது. பின் வாக்கியத்தில் அற்ப அறிவுடையார் அப்பியவித்த ஞானசாஸ்திரமானது, இழிவுள்ள அஞ்ஞானத்தினைக் கொடுக்கும். இந்த ஞானசாஸ்திரம் போன்று அற்ப அறிவினையுடையார்க்குக் கருமம் பத்தியினைக் கூறுஞ் சாஸ்திரங்கள் அஞ்ஞானத்தினைக் கொடுக்காதென்று, நம் நண்பரது அற்ப அறிவின் அப்பியாஸத்தினையே கண்டித்துப் பேசியிருக்க அதனை யுணராது பாதகத்தினைச் சாதகமாக வுணர்ந்து பாணுசூரனைப் போன்றாயினர்.

" மடமையொடு வாழ்கின்ற வாழ்வி னீசர் மனைதொறுமோட் டிரந்துழல்கை வரிசை யாகு, மடர்தனநட் புறவுபர தேசந் தீர்த்த மாச்சிரம மெய்வருத்த மனைத்தி னுனுந், தொடருதவி யில்லைமந வருத்தத் தாலே தூயபத முறுமுத்தித் துவார பாலர்க், கடவகுணங் கேட்டியுயர் சாந்தி வந்தாற் காதலுந்துன் பமுங்கதிர்முன் கங்குல் போற்போம்" 15

என்று பின்னுள்ள செய்யுளில், நண்பரது அற்ப அறிவின் அப்பியாஸத்தினை யிகழ்ந்து பேசியும், பாசத்தினைப் பொய்யென்று கூறியிருத்தலையும், நேத்திரத்தினைக் கீழ்நோக்கிப் பார்த்திருப்பரேல், தமக்குப் பிரதிகூலமான செய்யுட்களை மருண்டு கையாடார். கையாடினவர் பிறர்பாலதன் பொருளைக் கேட் டுணர்ந்தாயினுங் கையாடினராரி பிறர்பா லுணர்ந்து கையாடி யிருப்பின் இவ்வாறாய சங்கடத்திற் காளாகாமற் றப்பித்துக்கொள்ளலா மன்றோ?

உபசாந்திப் பிரகரணத்தி லுள்ள பிரகலாதன் கதையில்,

" ஆவா விப்போ துள்ளபடி யறியு நெறியி லெனை யறிந்தே
னேவா விகற்ப மற்றறிவுள் ளொளியாஞ் சீவ னுருவினுவோ!

தாவா தெங்கு முளனாளுந் தத்து வத்திற் சகமெல்லா
மேவா நின்ற விரவிமுதற் கடமீ ருக விளங்கியதால்" 30

என்னும் இச்செய்யுளில் முன்னிரண்டடியைத் தமக் கநுகூலமாகக் குறித்தனர். அதன்கண் யாதநுகூலமுளது? அது என்னையானுணர்ந்தேன், அறிவுக்குட் பிரகாசரூபமான ஆத்மசொருப மிதுவோ? என்று தன்னையறிந்த ஆச்சரியத்தினைக் கூறுவதாம். பின்னிரண்டடியில், "ஆத்மாவாகிய கூடஸ்த சொரூபத்தில் எல்லாப் பிரபஞ்சங்களிலும், விரவிய சூரியன் முதல் கடம் வரையுள்ள வஸ்துக்கள் யாவும் விளங்குகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனானும் இவருக்குக் கைவந்த தொன்றுங் காண்கிலம்.

மேற் கூறிய பிரகரணத்தி லுள்ள வீதகவ்வியன் கதையில்,

"சூரியமென் பார்க்கதுவாய்ப் பிரம மென்று சொல்லுவார்க் கதுவாய் விஞ் ஞாந மென்று, தானியம்பு வோர்க்கதுவாய்ப் புருட னாகிச் சாங்கியர்க்கு மியோகியர்க்கீ சன்று னாகி, யீனமில்சை வாகமர்க்குச் சிவனாய்க் கால மென்பாருக் கதுவாய்மத் தியர்கட் கெல்லா,மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க் காணு மநத்தினர்க்கெல் லாமான பொருடா னானன்" 74

என்னும் இச்செய்யுளின்கண், "ஈனமில்சை வாகமர்க்குச் சிவனாய்" என்னும் வாக்கியம் தமக்கு முக்கிய ஆதாரமான அநுகூல மென்று, "உண்மை நாயன்மார் மகிமை" யென்னும் நிந்தா நூலினும், இந்நூலினும் வரைந்தனர். தமிழில் மொழிபெயர்த்த "ஆளவந்தார் முனிவர்" எதுகைத்தொடை நோக்கி "ஈனமில்" என்னும் அடைப்பதங் கொடுத்திருக்கின்றன ரென்றுணரு முரணின்றி, புத்தகங்கடோறும் அதனையே யெடுத் தெழுதுகின்றார். அச்செய்யுளின்கண் அவ்வம் மதத்தினர்க்கு அவ்வத் தேவதையாக, ஒரே பிரமப்பொரு ளிருக்கின்றதென்று, அவிரோதபாவம் கூறப்பட்டிருக்கின்றதே யன்றி, இவர் கருதுவது போன்று விஷமபாவம் கூறப்படவில்லையாம். இதற்கு மூலமாயுள்ள சுலோகத்தின்கண், "ஈனமில்" என்னும் அடைச்சொல் இன்றென்று இனியேனும் வடநூல் வல்லார் வாய்க்கேட் டுணர்ந்து அதனை வழங்காது வாழ்வாராக! "ஈனமில்" என்னு மடை, 'சைவாகமர்க்கு' என்னுஞ் சொல்லிலுள்ள "சிவ" என்னுஞ் சொல்லுக்கு உரித்தாமே யன்றி, ஆகமத்திற்காவது, அதனை யுடையார்க்காவது உரிய தன்றாம். தூராந்வயம் குற்றமுடைத்தாகலின். இவ்விஷயத்தினைச், சங்கரத்வேஷியரின் வாய்ப்பூட்டின் இரண்டாம் பாகத்தில் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிக ளவர்கள், கண்டித்திருக்கின்றார்களாகலின், யா மீண்டு விரிக்காது விடுத்தனம். இவர் காட்டிய வாசிட்டச் செய்யுள் நான்கினாலும், இவர் யாதொரு பயனும் பெறாது, யாம் பயன் பெற்றமையின், இச்செய்யுட்களைத் தமக் குரியதென மறந்தும் நினையா திருத்தலே சாலும்.

"எண்ணிய வுலகமு முலகுக் கீசனும்
புண்ணிய பாவமும் பொய்யென் றேகொள்வார்

“ கடப்பரி தாய நரகமென் கின்ற கடல்களில் வீழவே கடவார் ”
என்பனவாதிகளால் விளக்கும் பகவற்கீதையாலும் நன்கு தெளியலாம் ”
என்றூர்.

அசுரர்களுடைய சுபாவத்தினைக் கூறும் 16-வது தேவாசுர சம்பத்து
விபாக யோக அத்தியாயத்தி னுள்ள,

“ எண்ணிய வுலகமு முல்குக் கீசனும்
புண்ணிய பாவமும் பொய்யென் றேகொள்வர்
பெண்ணினோ டாண்புணர் கின்ற பெற்றியா
னண்ணிய யாவையு மென்று நாட்டுவார்.” 7

“ தொடக்கற வில்லா வினைவெனப் பட்ட சூழலைப் பற்றியே சுழல்வா
ரடக்கரி தாய மயக்கமென் கின்ற வலையுளே யகப்பட்டு நின்று [இக்
ருடற்குடில் வாழ்வாம் புன்னுனிப் பனிநீ ருலர்ந்திடி னுயிர்நடுக் கெய்
கடப்பரி தாய நரகமென் கின்ற கடல்களில் வீழவே கடவார் ” 13

என்னும் இச்செய்யுட்களில் முற்செய்யுளில் முன்னிரண்டடியையும், பிற்
செய்யுளில் நான் காவதடியையும், தமக்கநுகூலமாக வொப்பினர். யாதநு
கூலமுளதோ ? அதன்கண் உலகாயாது சுபாவத்தைக்கூறி, மேலிரண்
டடியில் உலகத்திற்கு ஸ்திரீபுருஷர்கள் சையோகத்திற்கேதுவாய காம
மே காரணமென்று கூறுவார்களென்று கண்டிக்கப்பட்டிருக்கின்றது.
பிற்செய்யுளில் அவர்களையே ‘ நரகத்தில் வீழ்வார்கள் ’ என்று நிந்திக்கப்
பட்டிருக்கின்றது. இதனானும் இவருக்குக் கிடைத்த பலன் யாது ?
மாருய் அந்நூல் முழுதும் பிரமமே நித்தியம், பசு பாசம் அநித்திய
மென்று கூறப்பட்டிருக்கின்றது.

அன்றி, ஒரு நியாயஸ்தலத்தில் இவர்போன்ற நுண்ணிய மதியுடைய
வக்கீ லொருவர், பத்திரிகையில் “ மாஜிஸ்டிரேட் 163-வது செக்ஷன்படி
போக்கிரியைத் தண்டித்தார் ” என்றிருப்பின், அவ்வாக்கியத்தின் தொ
டர்பறுத்து “ மாஜிஸ்டிரேட்.........போக்கிரி...... ” என்றிருக்கிறது
என்று நியாயாதிபதியிடங்கூறின், நியாயாதிபதி தொடர்பு பாராது பத்தி
ராதிபர்க்குத் தண்டனை விதிப்பரா? அவ்வக்கீலுக்கு மதிப்புரை கொடுப்
பரா ? அதுபோல வாசிட்டாதி நூல்களில் முழுக் கவிகளின் றொடர்
பறுத்து, “ நெடுமால் திருமருகா.........மதுராபுரி யம்பிகையே ” என்று
கூறும் இக்கூரிய மதியுடைய வைசிய வயோதிகரும் வாசிட்டாதி நூல்
களில் முழுக்கவியினை எடுத்து பிறர்க்குக்கூறின் தனக்கு விளங்காத
அர்த்தத்தினைக் கூரிய மதியையுடைய அவர்கள் அக்கவிகளின் உரைவே
றென இவர் முகத் தறைவர். அதனாற் றமக்கு மானக்கே டுண்டா மென
அஞ்சிச் செய்யுட்களைத் துண்ட துண்டமாய்க் கோறல் செய்து காட்டு
கிறார். ஆனாலும், அறிஞர்கள் இவர்போன் மதி மயங்கார்க ளாகலின்,
யாங் காட்டிய முழுக் கவியினையும் அதனது கருத்தினையு மிவ ரின்று
மவலக் கடல் வீழ்ந் தழியா திரங்கி யிவர் முகத் தறைவாராக.

" அன்றியுங் கண்ணர் அர்ச்சுனர்க்கு விஸ்வரூபங்காட்டி எல்லாம் நானே. என்னைத்தவிர வேறொன்று மில்லை. என்னையே நீ சரணாக அடைந்து பூசிப்பாயென்று கூறியது, அக்கண்ணர், உபமன்னிய பகவானுடைய திருவடி சிரமேற்கொண்டு சிவதீக்ஷைபெற்றுச் சிவோகம் பாவனை கைவரப் பெற்ற திருவருள் வலியாலன்றி வேறில்லை. இதனை 'யாதவன்றுவ ரைக்கிறை யாகிய, மாத வன்முடி மேலடி வைத்தவன்' என்பதனாலும், இன்னும் பாரதம், அரிவம்சம் முதலிய நூற்களாலும், அர்ச்சுனர் விசுவரூபங்கொண்ட கண்ணரை நோக்கி நீர் யாரென்று கேட்டபோது, நான் ஆதிபுருடனையே சரணாக அடைகின்றேனாதலால், அவனே யான். சர்வசங்காரஞ் செய்கின்றவன் நானே யென்று கூறியதனாலும், அதுகேட்ட அர்ச்சுனரானவர், அக்கண்ணர் சிவபாவனையால் அச்சிவமாகி நின்று கூறியவுண்மை தெரிந்து, சிவபூஜையே செய்துவந்தமை முதலிய பல காரணங்களாலும் தெளியக் காணலாம் " என்றனர்.

இவ்விஷயம் எம்மவராற் பலகாலும் மறுக்கப்பட் டிருத்தலினாலும், தாமியற்றும் புத்தகங்கடோறும் இதனையே யெழுதுவதனாலும் இதனை விசாரித்திலம்.

பகவற்கீதை 7-வது மாயாரூப அத்தியாயத்தில்

" தானந்த மிலியுவமை தாநின்று தாவரிய
வானந்த வுருவமென வெனையொன்று மறிவதிலர்
கோனந்தன் மகனரசர் குலமைந்த னிவனுமெழி
லானந்த மிலியொருவ னிவனென்ப ரறிவிலிகள் " 20

" மருவுற்ற பிரகிருதி யதிலுற்று மறைவனெழி
லொருவர்க்கு மறியும்வகை வெளிநிற்ப திலையுலகில்
வெருவுற்ற பெருமயலின் மன்முற்று விழிமறைய
வருவுற்ற வெனையுலக மறிகிற்ப திலையடைய " 21

என்று உள்ள இவ்விரண்டு செய்யுட்களாலும் ஸ்ரீ பகவானே நம் நண்பர் போன்ற அறிவிலிகட்கு, தமது மகிமை விளங்காதென்றும், தம்மைப் பாவ விசேடத்தாற் சிவனாகப் பாவிப்பாரென்றும், கூறியிருக்கின்றமையின், இவர் கூறிய கூற்று, இவரது போகூழ்வலியின் பாவ விசேடத்தாலாம்.

" தத்துவராயர், சிவப்பிரகாசர், சிதம்பர சுவாமிகள் முதலிய பிற்காலத்தவர்களும், " தமக்குமே லொரு கடவுளுண்டு, அவன் பரமசிவனே " யெனக்கொண்டு, பல நூல்களாற் றுதித்து, ஆண்டானடிமைத் திறங்காட்டி வழிபட்டு வாழ்ந்தார்கள் " என்றார்.

பொய்புகலப் புகுந்தவர் பொருந்தும்படியாகப் புகலலாகாதா ? "பிடிக்குப்பிடி நமச்சிவாயம்" என்னும் உலக வழக்குப்போன்று, வாக்கியங்கடோறும் ஆக்ஷேபமுண்டாமாறு எழுதுவது அறிஞர் கூற்றன்றே! தத்துவராய சுவாமிகள் ஆண்டானடிமைத் திறங்கொண்டு சைவராய் வாழ்ந்தா

றென்று வரையப் புகுந்தவர், அவர்களியற்றிய, "ஈஸ்வரகீதை, பிரம கீதை, குறுந்திரட்டு, பெருந்திரட்டு, பாடுதுறை, அடங்கன்முறை," முதலிய நூற்களைத் தம்மிடத்தும் பொருளில்லாதிருப்பினும், பிறர்பாற் பொருளையாசித்தாவது கிரயத்திற்குப்பெற்று, நன்காராய்ந்து வரைந்தனரா? வரையாது, தத்துவராய சுவாமிகள் முன்னர் வேதாந்தியா யிருந்து, பின்னர் யாரிடத்தாவது சைவதீக்ஷைபெற்று, சைவராய் வாழ்ந்தாரென்று வரையாத வேரா சூழ்ச்சியுஞ் செய்தார். "பலநூல்களாற் றுதித்து" என்று பாசாங்கு பண்ணினவிவர், பல நூல்களைக் காண்பித்தனரா? அப்பல நூல்களை, யிவருக்கநுகூலமா என்று பலரும் பார்க்கும்படி காண்பிப்பாம்.

"சசிவன்னபோதம்"

"பூசனையு மதுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறறற வறிவதறி வெனவே"
"ஆக்கி யப்பா சிவர் தங்க ளுடம்பி ரண்டு மிலக்கணு
வாக்கி யப்படி நீக்கி னுலொரு வத்து வேபா வத்துவே"

அஞ்ஞவதைப்பரணி.

"பணியப் படுவா ருள்ளிருக்கும் பாதே வதையைப் பாராதே
மணியைத் துலக்கி இணுகிணென வரும்பேய் தனக்கும் வாரீரே."
"வேதா கமங்கள் சொன்னபொருண்மெய்ம்மையறிவார்போலிருந்து
பேதா பேதஞ் சாதிக்கும் பெரும்பேய் தனக்கும் வாரீரே."
"ஞானம் போலே பலசொல்லி நாடற் கரிய முத்தியினுந்
தானுஞ் சிவனும் பாசமுமென் சைவப் பேய்க்கும் வாரீரே"
"நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமாகி
சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய்"
"அழிந்தற மாயை யிருட்டெலா மறிவுரு வாகநம் மன்னலார்[யே"
மொழிந்தது மிங்கொரு வார்த்தையே மூவுல கும்மொரு வார்த்தை
"எம்பி ரானை வந்தெ திர்ந் திறந்த வஞ்ஞ னிங்குரு
னும்பர் வானு ரனிரும லொன்றி ஞனவ் வொளியொடே"
"அல்ல லான காம ராச னுனி யான சேனையு
மில்ல வாகி ஞான ரூப மாகி யேயி லங்குமே"

"பொய்ம்மை யாகிமெய் போல விளங்கிய,பொருடெ ரிக்கினற் புற்புதக் கண்ணின,மெய்ம்மை யான பொருளை யுளத்தினில், மீண்டு பார்க்கில் வெறுங்குரு டாவன"

"என்றிவ் வுலகுள தன்று முதலெதி,ரின்று வளாயிதி னென்றுதா, னின்ற தெனவிலை யென்று மொழிவற, நின்ற தொருபொரு ளொன்றுமே"

"முத்திவரும் படியன்றி முற்றுடலம் விடுமளவுங்
கத்திவரும் படியாகக் கற்பித்தா யெங்களையே"

"மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன்
பேசாம லிருந்துவிடு மதுவன்றோ பெருந்தகைமை"

"வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மற்கொடுமை
செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்"

"பொதுவிதுவாய் நிறைந்தபரம் பொருளேபோல் யாவர்க்கு
மதுவதுவா யிருந்துவிடு மதுவன்றோ வவிரோதம்".

பாடு துறை.

"மெய்ஞ்ஞா நிகட்கு விரதங்கள்கூடாமை மெல்லியலா யேடிகேளா
யஞ்ஞாந மாயையைச் சுட்டுக்கொடல்ல தறிவுதியா துதித்த
விஞ்ஞாந மாயையினு லதன்காரியத்தாகும் விரதமயமுன் [லாதே"
மெய்ஞ்ஞாந மாகி விளங்கலான் மேல்வினை மேவவொன் றுமே

"இந்த வுடலம் விடுவதன் முன்வினைரந் திப்பவந் தீராவிடின்
வந்து வந்துபல ருகிப்பிறந் தெய்த்து மாண்டே விடுவர் கிடீர்"

"நான்மறையோதிப் பொருளுரைத்து நாடறியக்கல்வி சாற்றினுலும்
தானதுவாகை யரிதுகாணுஞ் சலிப்பறநிற்கை யரிதுகாணும்"

"ஆறுசமயப் பொருளுங்கற்றே யங்குள்ள தர்க்கங்கள் சாற்றினுலும்
ஆறியிருக்கை யரிதுகாணு மதுவிதுவாகை யரிதுகாணும்"

"வேறுபிறிதிலா மெய்ம்மைதன்னை வித்தாரமாக விளம்பினுலு
மாறியிருக்கை யரிதுகாணு மவிரோதமாகை யரிதுகாணும்"

"பிணஞ்சுடு தடியென்ன வென்னைக்கொண்டே பெரும்பற்றது யெல்லா மறச்சாடி, யணைந்த வென்னையு மப்படி பீறில்போ தத்தில் விட்டனுபோகத் திருந்தானே"

"சந்த மொன்றின்றி யிருக்கவேண்டுந் தானேவழகிய ருகவேண்டு
மிந்த வுடம்பிலே காணவேண்டு மெங்குந்தாருகி யிருக்கவேண்டும்"

"காட்சி யொன்றின்றி யிருக்கவேண்டுங் கரத்தின்மணிபோலக் காணவேண்டு, மீட்சி செலவற் றிருக்கவேண்டும் விடாதேபற்றுதே யிருக்கவேண்டும்"

"தன்னிலேயெல்லா மிருக்குமாகிற் றுனெல்லாத் துன்று மிருப்பனுகிற், பின்னிலன் முன்னில னுவனுகிற் பெரிது முடிந்ததென் வாழ்க்கைப்பாடே"

"அஞ்ஞான காரிய மனத்தையு மற்விட்டு, விஞ்ஞான மாமேனுமென் றுந்தீபற, வெளியாகி நின்றோமென் றுந்தீபற"

"முடியாத பிறவிகண் முடிந்திட மாயையைத் துடியாம லறுத்தோமென் றுந்தீபற, துரிசற்று நின்றோமென் றுந்தீபற"

" முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற் பின்சாதி கழிந் தோமென் றுந்தீபற, பிரமமே யானேமென் றுந்தீபற "

அதுவேகா ணிதுவென்றான் சூரியனருள்செய்ய விதுவது வாகு மென் றுந்தீபற விலக்கணை புகுந்ததென் றுந்தீபற "

" தொம்பதந் தனிலுள்ள தூகளினை யறுத்தக்காற் றம்பத மறிவே யென் றுந்தீபற, தாக்கற்று நின்றோமென் றுந்தீபற "

" தற்பதந் தன்னிலுஞ் சபளத்தைக் கழித்தக்கா, லிற்பது போத மென் றுந்தீபற, நீக்கியொன் றில்லையென் றுந்தீபற "

" அசிபதந் தனக்குள்ளே யவனேகா ணிவனென்ன, வுசிவத்தொன் றானேமென் றுந்தீபற, வொழிவற நிறைந்ததென் றுந்தீபற "

" பாக்கியத் தாலேநாம் பழமறை மொழிந்திட்ட, வாக்கியங் கேட் டோமென் றுந்தீபற, வரவுபோக் கற்றோமென் றுந்தீபற "

" அக்கண மறிவாக வடியினை தருவார்க்குத், தெக்கணை காணேமென் றுந்தீபற, செய்வதொன் றில்லையென் றுந்தீபற "

" உந்தீபற பெண்கா ளுந்தீபற, வுணர்வோ மானோமென் றுந்தீபற "

" என்னை யறியா வறியாமை போயிட, வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து, பின்னமில் லாத பிரமநீ யென்றிடப், பேச்சற்ற மெய்ப் பொரு ளானேமே யப்பா "

" கண்ட கருக்குழி மாளும்படிக்குக் கருணையி னாற்கலந் தாண்டு கொண்டு, பண்டை வடிவது நீயானு யென்றிட்டுப், பார்க்கப் பரமா யிருந் தோமே யப்பா "

" சோதித்துப் பார்க்கிலேன் சுருதிக ேற்றிலென், பேதிக்கப் போ காத பிரமநா மானேமே "

" ஆதிப் பிரம வறியாமை தன்னாலே, பேதித்துத் தோன்றிற்றென் றிம்பிலடி, பிறப்பிறப் பில்லையென் றிம்பிலடி "

" வந்த பிறவியும் வானாதி பூதமு, மிந்திர சாலமென் றிம்பிலடி, யெனக்கழி வில்லையென் றிம்பிலடி "

" ஏகமே யல்லா விரண்டில்லை யத்வைதப், பேதாமே யானேமென் றிம்பிலடி, புலன்வழி கெட்டதென் றிம்பிலடி "

" ஆரியன் வந்திங் கடிதலை வைத்தபின், பூரண மானதென் றிம்பி லடி, போக்குவர வில்லையென் றிம்பிலடி "

" பன்னு மறையின் படியே பரானாகத், தன்னை யுணர்ந்தே மென் றிம் பிலடி தத்துவந் தானேயென் றிம்பிலடி "

" ஒன்றாகி நின்றபே ருணர்வே யுணர்ந்திட், டோமென்னும் காத்தி னிற் பந்தாடா நின்றேன், பின்றாதே யென்னேடே பிழைப்பாயோ பந்தே, பேய்த்தேரி னீருண்ணப் போவாயோ பந்தே "

"கறையறு முளத்தூசிற் காமாதி முழுதுங் கமையென்னும் பெருங் கல்லிற் கரிசறப் புடைத்து,வறையுறு மலமா மதியுவர் பிடித்து வைம்பூதத் தொடக்கென்று மறவாவி வைத்து, வுறைதரு பெருமையாயை யொதுக்கற வொலித்து வொழிவற வொளிர்போதப் பிரமமே யாக, மறைமுறை கழுவிய வண்ணத்தனடியேன் வாசாம கோசர வண்ணத்த னடியேன்"

"தேசறு முளத்தூசிற் றிகழ்மையன் முழுதுஞ் சிதையவே யெடுத் தடித் தலம்பியங் கதனை,யாசறு சமதம மதியுவர் பிடித்து வகிலத்தோடணை வொன்று மறவாவி வைத்துப், பேசுறு பெருமாயை பிறழ்வற வொலித் துப் பிறிதற வொளிர்போதப் பிரமமே யாக, மாசறக் கழுவிய வண்ணத் தனடியேன் வாசாம கோசர வண்ணத்த னடியேன்"

"அழுக்குறு முளத்தூசி லாகுமுக் குணமீ டணைமுழு தறப்புடைத் தலம்பியங் கதனை, யிழுக்கறும் விமலமா மதியுவர் பிடித்து யானென தென்முழு தறவாவி வைத்து, புழுக்கூடி னுளமாயை புரையற வொலித் துப் புரணபூ ரணப்போதப் பிரமமே யாக, வழுக்கறக் கழுவிய வண்ணத்த னடியேன் வாசாம கோசர வண்ணத்த னடியேன்"

"அன்னிய மில்லையென் றாதேடா காளம் ஆனந்த மானேமென் றாதேடா காளம், துன்னு சுடரேயென் றாதேடா காளம் சோதியுட் சோதியென் றாதேடா காளம்"

"பிறவி கழிந்ததென் றாதேடா காளம் பேதைமை தீர்ந்ததென் றாதேடா காளம், அறிவே வடிவென் றாதேடா காளம் அறியாமை போன தென் றாதேடா காளம்"

"கோசங் குலைந்ததென் றாதேடா காளம் கூாறி வானதென் றாதே டா காளம், பாசம் பறிந்ததென் றாதேடா காளம் பரமே பரமமென் றாதே டா காளம்"

"பற்றற்று நின்றேமென் றாதேடா காளம் பார்ப்பறப் பார்த்தோ மென் றாதேடா காளம், உற்ற வுணர்வேயென் றாதேடா காளம் உன் னொளி யானேமென் றாதேடா காளம்"

"உள்ளது போதமென் றாதேடா காளம் உலகமோக் காளமேன் றாதேடா காளம், வெள்ள வெளியிதென் றாதேடா காளம் வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம்"

"ஊனே மறிவதென் றாதேடா காளம் உணர்வே பிரமமென் றாதேடா காளம, நானே யவனுமென் றாதேடா காளம் நானுவதில்லை யென் றாதேடா காளம்"

"நில்லா வுபாதிகளை நிருபியா நிலையாலே, பொல்லாத விடயத்திற் புகுந்துவிழுங் குறத்தியல்லேன்,எல்லாம் பிரமமென வென்னில்வே றிலை கண்டு, சொல்லா லுணர வொண்ணுச் சுகமாங் குறத்தியேனே"

ஈசுர கீதை 11—அத்தியயம்.

" எதமுற நாரணனை யென்னிலயல் காணும்
பேதவிழி யாளர்பிற விப்பிணிய ருரே
மாதவனை யானெனை மனத்தினினை கிற்கும்
போதவிழி யாளர்பரி பூரண மடைந்தார் " 72

2-ம் அத்தியாயம்-3வது செய்யுள்.

" இந்த ஞானத்தை யெய்திய வின்பத்தா
ரந்த மில்பிர மத்துரு வாயினோர்
பந்த மேவிடார் பண்டுமின் றுமென்றே
யெந்தை யீறிலி யீச னியம்பினான்."

பிரம கீதை.

" தருமம தறிவில்பா சண்டர் தங்களை
மருவலால் வேதமா வாக்கி யப்பொருள்
கருதிடா ரதுகா மணியிற் காட்டிடும்
குருவையும் வழிபடார் குதர்க்க மேவலார் " 2-19

" வேதநூன் மிருதி புராணமத் துவித மெய்ம்மையே விளம்பமெய்த்
சாதியா நிற்கத் தத்துவ ஞானத் தவருமிப் பொருளையே சார [தர்க்கஞ்
வாதியாஞ் சிவனு ராயண னுனிங் கறைந்தது மபேதமா யிருக்க
வாதியாமொருவர்க் கிதையனுதரித்தல் மாயையினுடையவல் லபமே"

" ஆதர முடையீர் கேண்மி னருமறைப் பொருளீ தென்றே
யோதலா துவமை யில்லாப் பொருளிதி லைய முண்டேல்
தீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையி னிடுவே னென்றான்
நாதனு யுலக மெல்லாம் படைக்குநான் முகனு யுள்ளோன் "

" பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி னர்த்தம்
இத்தகைத் தாகும் வேறென் றில்லையா மிதனி லுங்கள்
சித்தநம் புதலுண் டாகச் செப்பினே மாணை மூன்றே
டத்தனுர் பாதந் தொட்டே யென்றன னலரின் மேலோன் "

" அன்பரா யுள்ளீர் கேண்மி னறிவித்த பொருண்மெய் யன்றேல்
என்சிர மிற்று வீழ்வ தென்றன னிதுவு மன்றி
யின்பமே யளிக்கு மீச னிவ்விடந் தன்னின் வந்து
தன்பெருங் கருணை யாலுந் தளர்வறப் பண்ணு கின்றான் "

" நானே முழுது மெனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை
யானபொருளை யருமறைதா னறையும் படியா னதனாலும்
யானு மிசைத்த படியாலு மிதுவே திடமா யுளபொருடான்
ஊனை மின்றி நான்முகனு முரைத்த துங்கட் குண்மையிதே "

" உண்மையிற் பேத மின்றி யிருந்தேயும் பேத மென்னல்
வெண்மையேசெய்த ரூப வியாபாரந் தோற்றங் கேடு
பண்வயி னிவற்றுற் கொள்ளும் பயனும ரூபம் வேறு
முண்மையி லெல்லாம் பொய்யா லுண்டாகு மனைத்து மன்றே "

" தொல்லைநல் வினையால் சுருதினன் மிருதி சொன்னவாதுணிந்தவத்
[தூயோர்
ஒல்லையில் பரமாத் துவிதவே தனத்தை யுள்ளவா றுணரவே யுணர்வர்
நல்லவிப் பரமாத் துவித ஞானியைநா ராயணன் நானுருத் திரனும்
எல்லையி லெல்லாத் தேவரும் பூசித் தேத்தவும் படுமிவ னென்றும் "

" ஈசனும் ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத்
தேசிக னேவல் செய்பவன் காவலன் சென்னியி லிருப்பதுமன்னி
மாசிலாப் பரம ஞானியா மூனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கில்
ஆசிலா வரியு மொப்பல னனு மொப்பல னேவரொப் பாரே "

" பின்ன கடாகா யாதிக ளாலா காயம பேதம் பேதமு முதே
யன்ன வனேகா கார னேகா காரவ கம்புக் காலு மனைத்தா
மன்னிய பேதா கார மபேதா காரமு மாய்மா தேவனி ரானேல்[றே"
இன்னதெ னுமத் தானெனு மாறெ னியாவையு மீசா னன்பிறிதன்

" இந்த வுடம்புறை சீவப ரங்க ளெனப்படு மன்ன மிரண்
டந்த விரண்டிலு மொன்று வினைப்பய னங்கு நுகர்ந்திடு மாந்
தொந்த மறும்பர மொன்று முணுது சொலப்படு பேதமில் வான்
வந்த கடத்தி லகப்படு பேதமெ னப்படு மாயை யினுல் "

" மண்ணதோர் திரளைக் காண வனைந்தகா ரியங்க ளந்த
மண்ணில்வே றிலாதெக் காலும் வருதலே யாத லால்வே
றெண்ணிடு நாம ரூப மிசைந்திலை யாரு மென்று
மண்ணிதே யுள்ள தென்றும் வானவர்க் கயன்முன் சொன்னுன்".

" தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையே யக்
கற்பித ஜீவன் றானு மதானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
அற்பமும் வேறு காதுசித் தாகா ரத்தாலே "

" வேதமோ தியதே மெய்ப்பொருள் மற்றைப் பொருளெலா மித்தையே வேத, மோதமே வுற்ற பொருளிரு வகையா மதனிலொன் றென்று முண் மையதாய், போதவா நந்த மாகிய சிவனும் பொருளது மற்றதப் பொருளில், வதமே வாமற் கற்பிதமாகு மற்றத னியல்பையு மிசைப்பாம்."

" புகலரின் றிடுபிரம புரமெனும் பதியதனில்
தகரபுண் டரிக மெனு மகமிலங் கியதகர

ககனமுண் டதுமறைகள் கருதநின் றனபிரம
மிகவிரும் புவர்பிறவி விடவிரைந் துளவிமலர் ”

“ தத்தமா லான பெத்தவா தியர்தாந் தங்களிற் றுங்கடர்க் கங்கள்
கத்திடா நிற்கும் பரிசெலாஞ் சுருதி மிருதிகள் கருதிய தழிக்குஞ்
சுத்தமா விருத்த மாகுமென் றேயென் றுணிவுதொல் பிறவியிற் சுழல்வார்
சித்தமா னதுபோ யிவற்றிலே காதல் செய்யுமுன் செய்ததீ வினையால்”

“ காதும்வா தியர்க ளாலே கலியுகத் துள்ளோர் கெட்டு
வேதமோ தியவா செய்யார் மிருதிசொல் லுவதுஞ் செய்யார்
பூதியு மணியார் ஞான சாதந பூத மாக
வோதுவ தொன்றுஞ் செய்யா ரொழிந்ததே யுகந்து செய்வார்.”

என்பன வாதிச் செய்யுட்களில் தத்துவராய சுவாமிகள், ஆண்டா னடிமைத் திறத்தினையும், பசுபதி பாசங்கள் நித்திய மென்பதனையும், விளக்கி யிருக்கின்றனரா? மாறாய், நாடற்கரிய முத்தியின்கண்ணும் சீவனுஞ் சிவனும் பாசமும், நித்தியமாய்க் கொண்டொழுகுஞ் சைவர்க ளைப் பேய் என்று கூறியிருக்கின்றனர். சும்மாவிருப்பின் இவ்வாறாய இவரது அறியாமை பலருக்கும் வெளிப்படாது போய்விடுமென்று கருதி யன்றோ இவ்வாதந் தொடுத்தார்.

சிவப்பிரகாச சுவாமிகள் சைவராயிருந்து வாழ்ந்தா ரென்று “ மூக் கரையன் கதை போன்று” முணு முணுக்கின்றார். அம்முணு முணுத் தலையும் சற்று விசாரிப்பாம்.

## வேதாந்த சூடாமணி.

“ விடயமது சிவசீவர் தமதேகத் துவமாம்”.“ நீ கடவு சொரூப நிசம் சச்சிதா நந்தம், நித்தியம்பூ ரணமாக நீ நினைந்து கொள்ளே.”

“ இகலிலா அறிவுமாத் திரமாகி நின்ற விலக்கியமாம் பிரமகூ டத்த வுயிர் கொள்ளிற், புகரிலா வதுவிதுவே யிதுவதுவே யென்னப் பொருந் துதா தான்மியம்வந் துறுமெனவே யறிக”

“ என்றுமெவ் விடத்தினுமோ ருடம்புமுறா தொன்றா, யிருந்தசச்சி தாநந்த சிவசொரூப மாதல், நன்றிதரு விதேககை வல்லியமென் றிசைப் பர்”

“ அவ்வகிலங் கட்கெலாம் பொய்ம்மையே புகலு மரியதாம் வேதாந்த பக்கமதி லினைய, யெவ்வமறு சுருதிவிசா ரத்திறு லுண்மை யெனுமுத்தி கூடுமென லெவ்வாறிங் கென்னி, லவ்வியமென் சொற்பனமா தனைவி ழுன் மெய்ம்மை யாயவீ ரியவொழிவுங் கற்பிதமாம் வடிவிற், செவ்விய வொண் கடவுள்வழி பாட்டினு லிட்டஞ் சேர்தலும்போ லுணர்வான் முத்தியுஞ்சித் திக்கும்”

" தடத்தினுயர் கரையமர்வோ னத்தடத்துப் புனலிற் றானதோ முகமாக விருப்பதுபொய் யென்று, படைத்ததெளி வுளமொடிருப் பினு மதோ முகமாம் படிவந்தோன் றுதல்போல மூலவகங் கார, மடுத்துவரு சீவபா வாதிகமோ மித்தை யறிதுரியன் றானெனவே யுணரினுஞ்சீ வாதி, தொடுத்தவுல குறுதலினாற் சீவன்முத்தன் றனக்குத் துய்க்கும்வினைப் போகவிவ காரமுடம் பாடாம்."

" அப்பிரம காண்டத்துட் சிவமொடுயி ரயிக்க மறைதலாற் சங்கரா சாரியனுங் குருவால், ஒப்பரிய பாடியமொன் றுரைக்கப்பட் டது "

பிரபு லிங்க லீலை.

" சச்சி தாநந்த சங்கர னாகவே
யச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்
றுச்ச மாந்துயர்த் தோன்மலி யாக்கையை
யிச்சி யானதை யானென வெண்ணியே "

" பூத நீயலை பொறிகளு மலையலை புந்தி
யேது நீயலை யிவற்றினை மயங்கியா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்துமே போக்கிச்
சோதி யாகிய பிரமமே நீயெனச் சொல்லி "

" ஞேய ஞாநஞா துருவெனு மிவைபல நிற்கு
மாயின் வேறறு முத்தியன் றதுசக மாமென்
றேயு மாறிது அதுவெனுஞ் சுட்டலா வியல்பை
மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல் "

" வான மல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞாந மல்லேன் வினையல்லே னானே சிவமென் றெண்ணினோ
னான மில்லா வொருசிவமே யாவ னிவ்வா றுன்னாதா
னீன மெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழலு மென்ஞான்றும்."

" தன்னைச் சிவமென்ற றிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாத்
தன்னைச் சிவமென்ற றியாதா னறியா னென்றுந் தன்னுண்மை
தன்னைச் சிவமென் றறிந்தவன்றே தாழ்வாம் பாசந் தனைநீப்பன்
தன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே துணையாகும் "

" தன்னைப் பேத மாய்க்காண்கை சகத்திற் காணப் பட்டதாந்
தன்னைப் பேத மறச்சிவமென் றறிவோன் ஞானி தானொருவ
னென்னைக் கருதி மறையதுநீ யானு மென்ன வத்துவிதத்
தன்னைப் புகலுங் கண்டதனைச் சாற்றன் மறையின் கருத்தன்றே "

என்பனவாதிச் செய்யுட்களில் சைவராய் வாழ்ந்து, ஆண்டா னடிமைத் திறங் கொண்டிருந்தே மென்று கூறாது, மாறாய் சீவப் பிரம வைக்கியத்தினையும், பொய்ப் பொருளைக் கொண்டு மெய்ப் பொருளை யடைபலா மென்பதனையுஞ் சிறாரு முணருமாறு விளக்கி யிருக்க, அதனைச்

செவ்வனே தெரிந்து கொள்ளும் புண்ணிய மின்றிக் "கிழக்குமேற் கறியா தான் வழக்குப் பேச வந்தான்" என்னும் பழமொழி போன்று வரைந்து வாணாளை வீணாளாக்கிக் கொண்டனர்.

சிதம்பர சுவாமிகளையும் ஆண்டா னடிமைத் திறங் கொண்டு சைவரே யாய் வாழ்ந்தா ரென்று வெற்றுரை தொடுத்து விசன முறுகின்றார். சிதம் பர சுவாமிக ளியற்றிய, ஒழிவி லொடுக்க வுரை, கொலை மறுத்த லுரை, வைராக்கிய சதக வுரை, வைராக்கிய தீப வுரை, அவிரோத வுந்தியா ருரை, திருப் போரூர் சந்நிதி முறை, முதலிய நூற்களையேனும் நல்லாசிரி யரிடத்து நன்கு பயின்றாயினும், வரையத் துணிய வேண்டாமா? அவர்கள் தமது ஆசிரியர் ஸ்ரீ குமார தேவர் பேரி லியற்றிய நெஞ்சுவிடு தூது:—

—சுகசொரூபம்.

" ஒன்றென்றே சொன்னூ லுலகமே தென்றிடவே
நின்ற பழுதையிடை நீரவ—மன்ற
ஓதிக்குமா றப்பொருளி னுண்டாமென் றோத
வீதித்த பழுதை விளங்கின்—மதித்தயாம்
பேசு மதுபோ லெழிற்சிவங்கண் டிம்முலக
மோகாதி தோன்ற லெனையென்ன—மோகமறக்
கானலினீ ரில்லையெனக் கண்டுநீர் தோன்றுதல்போ
லீனமில்பொய் யாத்தோற்ற மென்றிசைப்ப—வான
பழுதையினிற் பாம்பும் பகல்கான னீரு
மெழுமோ தகையா யிவைதாங்—குழுமியே
நானுவா யோர்பொருளி னண்ணுவதே தென்றிசைப்ப
ஆனாத பொன்மண்ணி லாபரண—நாநா
கடமாதி தோன்றுமொரு காரணம்போற் றோற்றுந்
திடமாங் காரணன்று செப்பத்—திடவா
னொருவன் றொழிலா னுளவா மிவைதா
மருவுமிவை யாவரால் வந்த—துரையெனவே
விண்ணினிடைப் பீலி வெயிற்குஞ்சந் தோன்றுவபோ
னண்ணு மெனவே நயந்துரைப்ப—வெண்ணுமவை
பற்பல வாகுனும் பகருருவொன் றாமிவைதாந்
துப்புடைநா னாவுருவாய்த் தோற்றுவதென்—செப்புகெனக்
காந்தருவ மாநகர்போற் காணெனவே யந்நகர்தான்
போந்தவிவ காரமின்றாய்ப் பொய்யாகு—மேய்ந்த
விவற்றுள் விவகார மெய்வதெவ னென்னக்
கவற்றுள் கனவுவிவ கார—நவிற்றுதல்போ
லாமென் றுரைப்ப வதுநினைவின் வாதனையாந்
தோமுறுபொய் வாதனைதாந் தூய்தாய—சேமப்
பொருட்கே தெனவந்தப் பூரணத்திற் றோன்றுந்

தருக்கா னினைவாகுந் தானென்—றுரைப்ப
வதற்குவினை யெழுமோ யாதென்று கேட்பக்
கதித்த கனவிலை கண்டா—யிதைப்பொய்யென்
றுன்றுது கேட்டி யுளஞ்சற் றசைந்தக்கான்
மூன்றும் பரமுயிர்கண் மொய்த்தெழுந்த—மன்று
வுலகமிவை தோன்று முளமிறந்தா லிந்தக்
கலகமெலாம் பொய்யாய்க் கனதை—யிலகியதோர்
மெய்யென்றே யாகு மினிரு முளத்துருவ
னையா வுருவமொடு நாமமாம்—பொய்யுளந்தா
னுன்னினைவு தீதென்றே யூகத்தா னேக்குமிடத்
தங்கினைவு நாமவுரு வாகுங்கா—ணங்கினைவு
கோடி கணத்திற் குதித்தெழலா லிவ்வுலகு
நாடற் கருவுருவ நாமமாய்ப்—பீடுபெறத்
தோற்று கினைவைத் துணித்தாற்சற் சித்சுகமே
மாற்றற் கரிதாய் வயங்கலுறுஞ்—சாற்றுமிதா
னுள்ளமே யிவ்வுலகா மிவ்வுலகே யுள்ளமா
முள்ளமலா தேயுலக மொன்றில்லை—யுள்ளே
மதுரந் தருஞ்சாத்தன் வன்கோயின் முன்னே
சதுரங்க மாவலமாத் தங்குங்—குதிரைகரி
தேரா ளெனும்பெயருஞ் செப்பியபேர் கொள்ளுருவு
நேராது பொய்யென்று நீக்கியே—தேருமிடத்
துற்றிடுமக் காலத்து முள்ளமண்ணே மற்றெல்லாம்
வெற்றவெறும் பொய்யாய் விடுமிவைபோற்—சொற்ற
பெயருருவ மானவெல்லாம் பேணுது நீக்கிற்
செயிரறுசித் தொன்றே திகழும்—
கடலிற் றிரைநுரை காண்டிவலை மொக்குள்
இடமுற் றெழினு மிதுபொய்—திடமுறுமெய்
யாவதெதுவென் றறியுமிடத் தப்பொருளின்
மேவு திரைநுரை வெண்டிவலை—தாவியெழும்
மொக்கு ளெனும்பெயரு மொழிபெயர்கொள் ளும்முருவும்
ஒக்க வெறும்பொய்யா முருசியுடன்—றக்க
நெகிழ்ச்சி குளிர்ச்சிமய நீரொன்றே மெய்யாம்
பகுக்கு மவைபோலப் பாரிற்—றொகைக்கரிதாய்க்
காணு முருநாமங் காணுது பொய்யாகும்
மாணுறு சிற்சுகமே வாய்மையாம்—மாணு
இருப்பதுசத் துச்சத்தா லெண்ணுருவ நாமம்
இருப்பதுபோற் றேன்றும்வே றில்லை—யுரைப்பரிதாய்த்
தோன்றுதல்சித் துச்சித்தாற் றேன்று முருநாமந்
தான்றனித்துத் தோன்றுவது தானில்லை—யான்றசுகந்

தானே யுளதிதனுற் றங்கு முறுநாமம்
ஆறு சுகம்போ லணுகியிடு—நாறேது
வேறேது மில்லை விரிதிரையா திகடாங்
கூறுசல மொன்றே குறிக்குங்கால்—தேறல்
பொருளொன்றே யாகும் புனிதமுறு நெஞ்சால்
தெருளொன்றிக் காணென்று செப்ப—அருளொன்று "

## திருப் போரூர் சந்நிதி முறை மாலை.

பாம்பாகத் தோன்றிற் பழுதைசற்றுந் தோன்றாதாம்
பாம்பின்றாத் தோன்றிற் பழுதையே—மேம்பாடாய்ப்
பொய்தோன்றின் மெய்தோன்றா போரூரா நின்னருளான்
மெய்தோன்றிற் பொய்தோன்றா வீடு.

கானலைநீ ரன்றென்று காட்டக்கண் டாறொருவன்
மானலநீ ரென்று மயங்கல்போ—னீலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும்போ ரூரானே
மெய்யெனவுண் ணேந்தேன் மிக.

## ஷை கட்டளைக் கலிப்பா.

" கான னீரினை மெய்யென்ற வாவியே கனவி டாய்கெட வுண்ணக் கருதினே, ஞான நீருவர் நீறென நாடுவ தன்ன மாமய லென்றினி யாறுவேன், வான நாடரு மாமுனி வோர்களு.மதித்த வாரண முந்துதித் தேதொழுந், தான மாமழை யானைக் கிளையவா சமர மாபுரிச் சண்முக வேலனே "

" பழுதை பாம்பல வென்றொருளி யாற்கண்டும் பாம்பு வாதனை தீரா தவனென, வெழுமுன் சிற்சுக நின்னரு ளாற்கண்டு மிந்நி லப்பொய்ம்மை வாதனை நீங்கிலேன், முழுது ணர்தல் முதலாய வெண்குண மொய்த்த பஞ்சர மேமறை யுச்சியே, தழுவு வெண்சுதை மாளிகை நீடிய சமர மாபுரிச் சண்முக வேலனே."

## ஷை குறுங் கழி நெடில் விருத்தம்.

" கடைபடு முலகப் பொய்யினை மெய்யாக் கருதினேன் கானனீ ரென்று, மடமையாற் கருது மவனென வினியுன் மலர்ப்பதச் சுகத்தை யென் றடைவேன், றடவரைக் குறவர் குலத்தெழு வல்லி சாதகக் கொடி யடர் தருவே, மிடலெழு தோகைப் பாகனே போரூர் வீறிவா ழாறுமா முகனே."

" எங்குமென் சொரூப சச்சிதா நந்த விலகொளி யிருந்திடு மதனுட், டங்குபல் பொருள்கள் கானலிற் சலம்போற் றாமுறும் வேறிலை யென்றே, பொங்கருட் குருவாய் வந்துநீ யளித்தும் புலையனேன் மயங்குறு கின் றேன், வெங்கதிர் விலக்குந் தண்டலைப் போரூர் வீறிவா ழாறுமா முகனே."

"நெஞ்சகத் துள்ளும் புறனுமாய் நிறைந்த நின்பரி பூரண நினைந்து, வஞ்சகச் சகப்பொய் யனைத்தையு மறந்து வாழுநா ளெந்நா ளடியேன், செஞ்சடைக் குழக னஞ்செவிக் கமுதாத் திகழ்மறை முடிவினைப் புகன்றோய், தஞ்செனப் பணிவோர்க் கருடரும் போரூர்ச் சரவண பிரணவப் பொருளே"

"அறிவுதன் னினைவிற் கலந்துறு போதி லரும்பர முயிர்சக முளவாம், பிறிவிலவ் வறிவந் நினைவினை யகன்றாற் பேதாபே தங்களொன் றின்றி, நெறியுறத் தானே தன்னிடத் திருக்கு நிச்சய மென்றெனக் கிசைத்தான், பொறிமறு மார்பன் மருகவேளனையாள் போரிவா ழாறுமா முகனே."

"சுருதியின் றுணிவா னினைவுகொண் டுலகந் துச்சமென் றுணர்தனிச் சயமாங், கருதுறு நினைவை யடக்கியிவ் வுலகங் கானலென் றுணர்ந்திடல் சமாதி, யிருவகை யாய்முன் னுரைத்தவை யின்றி யிலங்கறி வுருவமா யிருத்தல், பொருவறு சகச ஞானமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே."

"நிச்சய ஞானஞ் சமாதிஞா னங்க ணிராசையார் மனத்தினிற் கலங்கா
தெச்சமின் றிருக்கு மாசையார் மனத்தி லிரண்டுஞா னங்களுங் கலங்கு
நச்சுதல் வெகுளி யின்றிய சகச ஞாநிக ளசையுளர் போலப்
பொய்ச்சகத் துறினுங் கலங்குறு ரென்றான் போரிவா ழாறுமா முகனே."

"சித்தொரு நான்கிற் பிரமங்கூ டத்தன் செப்புமா யாரகி தங்கண்
மத்தமி லீச னுயிர்கடா மாயா சகிதங்கள் வழுத்துமிவ் வீசன்
சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினற் றகுகதி தேடிலன் சீவன்
பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே"

ஷ நேரிசை வெண்பா.

"அறிவைவிடத் தோன்றிடா தம்புவியு நெஞ்சுஞ்
செறியறிவாய் நில்லென்று செப்பிப்—பிறிவறவென்
னெஞ்சைத் திருத்தி நிறையவைத்த போரூரன்
கஞ்சத் திருத்தண்டைக் கால்"

என்பன வாதி செய்யுட்களில் அத்வைதத்தினை அவைதிக சைவ சித்தாந்திகள்கண் டஞ்சுமாறு வெளிப்படையாக ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் புகன்று, துவைதிகளது பதி பசு பாச நித்தியத் தன்மையினையும் ஆண்டானடிமைத் திறத்தினையும் அறவே யழித் தொழித் திருப்பவும், இன்னும் உரை நடை முதலியவற்றிலும், அத்வைதத்தினை யவல மதியினரு முணருமா றறிவித் திருப்பவும், அவற்றினை யெல்லாம் அறியும் ஆற்ற லின்றி "கீழே விழுந்தவன் மீசையின் மண்படடதா பார்" என்பது போன்று வெற்றுரை தொடுத்து நம் நண்பர் வீண் வாதம் பேச வந்தனரே. அவ்வாதம் "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை, வெல்லுஞ்

சொல் லின்மை யறிந்து, என்னும் வாக்கின்படி நிலைபெறாது போயிற்றே. போகவே "உடன் படற்பால தல்லதனை யுடன்படுதல்" என்னுந் தோல்வித் தானத்தைத் தொன்று தொட்ட தொடையாகத் தோளிற் போட்டுக் கொள்ளாது தூரத்தே செல்லுதல் யாங்ஙன மேலும்.

"இக்காலத்திலுஞ் சமிவன மென்னும் கோவிலூர் மடத்துக்கு மூல புருஷராய், ஆண்டவ ரென்று அவ்வகையாராலேயே கொண்டாடப் பெற்ற முத்தி ராம லிங்க சுவாமிகளும், வாசிஷ்ட கைவல்ய கீதாதி நூல்கள் பிறர்க்குப் போதித்து வந்தாலும், "தமக்குமேலொரு ஆண்டவனுண்டு, அவன் ஸ்ரீசாலிவாடீசுவரி சமேத ராஜகட்க பரமேஸ்வரனே, நாம் அவனுக்கு அடிமையே" என்ற வுண்மைக் கருத்தாலேயே சைவ நெறித் திருப்பணியாதிகளே செய்து, பின்னையோரும் அந்நெறியே பற்றி யொழுகும்படி வழிகாட்டியாய் வாழ்ந்தார்." என்றனர்.

"வாசிட்ட கைவல்ய கீதாதிநூல்களைப் பிறர்க்குப் போதித்து வந்தாலும்" என்று உம்மை கொடுத்து எழுதியதன் கருத்து யாதோ? உம்மையால் தமக்குக் கருத் தில்லாத அத்வைத நூல்களைப் போதித்துக் கொண்டு ஆண்டானடிமைத் திறமே தம துட்கருத் தென்று கொண்டு வாழ்ந்தார்களென்று கருதுகின்றூர். எழுது மிடங்கடோறும் இவ்வாறே அறி வின்றி யெழுதலாமோ? தாம் ஆண்டா னடிமைத் திறத்தினை முக்கியப் பொருளாகக் கொண்டு, தமது மாணக்கர்கட்கு "நாம் பிரமம்" என்னுந் தமக்குக் கருத் தில்லாத அத்வைதக் கொள்கையினை யுபதேசிப்பவ ரெங்ஙனம் ஆசிரியராதல் கூடும்? தங் கொள்கையினை மாணக்கர்கட்குப் போதிப்பவர் ஆசிரிய ராவரே யன்றித் தமக்குடன்பா டல்லாதவோர் மதத்தினை யுபதேசிப்பவ ராசிரிய ராகார். இவரது உபாசனமூர்த்தியாகிய யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலரும் தாம் அகம் பிரம மென்னும் அத்வைத மார்க்கத்தினைக் கைக்கொண்டவராய்த் தமக் குடன்பா டல்லாத, ஆண்டா னடிமைத் திறங் கூறும் அவைதிக சைவ சித்தாந்தத்தினை அவரது மாணக்கராய நம் நண்பருக்கு உபதேசித்தனர் போலும். அங்ஙனம் உபதேசித்தமையா லல்லவா, தமது அநுபவத்தினையுந் தம்குரவர தநுபவத்தினையும், பிறர் மதத்தினரது குருமார்களிடத்தும், அவர்களது மாணக்கரிடத்தும் கற்பிக்க முன் வந்தனர். அநுபவிக்காது பிறர்மீது கற்பிக்க முற்படுவோ?

தன்னில் வேறிலா மையிற்பர முத்தியிற் றனதுபுத் தியினாலே
யந்நி யங்களாய்த் தோற்றுமா பாசர்க்கும் பரபத மறிகின்றான்
முன்ன மெய்ப்படி மூடமாந் தசையிற்றன் மோகத்தா லெலாம்பெத்த
மென்ன வுற்றனன் முத்தியு மப்பரி சிருக்கும தியல்பேயாம்.

என்ற பிரம கீதைச் செய்யுளின்படி ஞானிக்கு யாவரும் ஞானியாகத் தோற்றுகின்றனர். அஞ்ஞானிக்கு யாவரும் அஞ்ஞானியாகத் தோற்றுகின்றனர்.

தருமராஜர்க்கு உலகி லுள்ளார் யாவரும் நல்லவர்களாகத் தோற்றி னர். திரியோதனர்க்கு உலகத்தி லுள்ளார் யாவரும் அயோக்கியராகத் தோற்றினர். அதற்குக் காரணம் அவ ரவரது அநுபவமும் புண்ணிய விசேடமும் பாவ விசேடமுமே யாம்.

ஓர் பாவியானவன், பூர்வ சன்மத்திற் செய்த பாவ விசேடத்தால் மூக்கின்றியவனாகப் பிறந்தான். அவனை யெல்லோரும் மூக்கரையன் என்று எளனஞ்செய்து வந்தார்கள். அதனை நிவிர்த்திப்பான் அவனோர் சூழ்செய்து "எனக்குக் கைலாயம் தெரிகின்றது. நீங்களும் என் போன்றே மூக்கரைய ராவீர்களாகில், உங்கட்கும் கைலாயம் தோற் றும்" என்று தனக் குடன்பாடல்லாத தனையே புகன்றனன். அவர்களுட் சிலர், அவன் வார்த்தையினை மெய்யெனக் கருதி, மூக்கை யறிந்து கொண்டு, அண்ணாந் துயரப் பார்த்தார்கள். கைலாயந் தோற்ற வில்லை. தோற்றாதாகவே தாம் செய்தது தவ றென்று தோற்றினும், பிறர் பழிப் பை நிவிர்த்திப்பான் 'எங்கட்குங் கைலாயம் தோற்றுகின்ற தென் றவர் களும் தமக்குடன்பா டல்லததனையே பிறர்க்குப் புகன்றனர். பின்னுஞ் சிலர் அவ்விடைப்பட்ட மூர்க்கரையரது வார்த்தையினை மெய்யெனக் கருதி மூக்கரையராகி யிவ்வாறே பலரும் மூர்க்கரையராயினர். அது போன்றே அவைதிக சைவ சித்தாந்தக் குருமார்களுள் மூல புருடராயி னோர் "நாம் பிரமம்" என்னும் பரமாத்வைதக் கொள்கையினை யுடைய ராய்த் தமக்குக் கருத் தின்றிய அவைதிக சைவசித்தாந்த ஆண்டா னடி மைத் திறத்தினை, அதிகாரிகளின் அபக்குவத்தினைக் கருதி யுபதேசித் தனர். அவ்வுபதேசத்தினைப் பெற்றுப் பின். ஆசிரியராய இடைப்பட்ட குரவரும், தமக்குப் பரிபக்குவம் வந்த ஞான்று, ஆண்டா னடிமைத் திறத்தினை யறவே யொழித்து "நான் பிரமம்" என்னும் வைதிக சித் தாந்தத்தினைக் கைக்கொண்டவராய்த் தமக் குடன்பா டல்லாத அவை திக சைவ சித்தாந்த ஆண்டா னடிமைத் திறத்தினை அதிகாரிகளின் அப க்குவத்தினைக் கருதி யுபதேசித்தனர். அவ்வுபதேசத்தினைப் பெற்றுப் பின் ஆசிரியராய கடைப்பட்ட குரவரும், தமக்குப் பரிபக்குவம் உண் டாயவிடத்து ஆண்டா னடிமைத் திறத்தினை யறவே யுமிழ்ந்து "பிரமை வாகும்" என்னும் ப்ரஸித்த வேதாந்தத்தினைப் பெரி தெனப் பெரியாரா லுணர்ந்து பேணினராய்த் தமக்குடன்பா டல்லாத வேத பாஹ்ய துவிதாக மக் கோளைக் கேட்போர் தாங்கருதிக் கிளர்ந்தனர். இவ்வாறே தமக்குடன் பா டல்லாத ஆண்டா னடிமைத் திறத்தினையே பலரும் உபதேசித்து வந் தனர். அவ்வாறே யிவர் குரவரும் "நாம் பிரமம்" என்னும் வேதா ந்த மார்க்கத்தினை முக்கிய சித்தாந்தமாகக் கைக்கொண்டவராய்த் தமக்கு ஒருவாற்றானும் கருத் தின்றிய ஆண்டா னடிமைத் திறத்தினை நம் நண் பருக் குபதேசித்திருக்கின்றனர். இவ்வாறு, இவர் பரம்பரையி லுள்ள அநுபவத்தினைக்கொண்டே யன்றோ, எமது பரமேஷ்டியாய குருநாதன்

மீதும், கூறத் துணிந்தனர். இவர் கூறிய கூற்று இவர் மதத்தின்கண்ணே யன்றி யெங்கள் மதத்தி லின்றாம்.

ஆண்டவ ரென்று விதந் தோதப் பெற்ற ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிக ளென்னும், எமது பரமேஷ்டிய குருநாதன், தாம் முக்கிய சித்தாந்தமாகக் கொண்ட "பிரமைவாகம்" என்னும் அத்வைதத்தினைப் பிரதிபாதிக்கும் வாசிஷ்டம் கைவல்யம் கீதை முதலிய நூல்களைப் பக்குவியாய மாணுக்கர்கட்கு, தம துண்மைக் கருத்தென்றே யுபதேசித்தார்கள். உபதேசித்தார்களாயினும், சகுண பிர்மோபாஸனையினுனே நிர்க்குணப் பிரம மடையத்தக்கதாம். அச்சகுணப் பிர்மோபாஸனை செய்ய வலியிலார்,

"சிரந் துறக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் வழிதீ, பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம் பரமனுரு வாயவிராட் புருடவடி வெனினும்"

"அன்றியள வுறுபெருந்தோட் படைபணியோ டுற்ற வண்ணல்வடி வெனினுமினைந் தவயவங்க டம்மி, லொன்றொன்றை விடுத்துநின்ற வவயவமாத் திரமா முண்மையாம் பிரமத்தின் மநமடங்கல் பாவஞ், சென்றளவு கரணமுறா வொருபிரமந் தன்னிற் சிந்தையடங் குதலபா வம்படைப்பி லொழிவிற், றன்றெரித றெரியாமை யிடத்திரேனார் பரிசாய்த் தன்வடிவாம் பிரமத்தின் மநமிறன்மா யோகம்" 136

என்ற வேதாந்த சூடாமணிச் செய்யுளின்படி காரியப் பிரம முதலியவற்றை யுபாசித்து அதன் வலியாற் காரணப் பிரமோபாஸனை செய்து, சுத்தப் பிரம மடையத்தக்கதா மென்னும் வேதாந்த சாஸ்திரத்தி னுட்கருத்தினைப் பற்பல மாணுக்கர்களுக்கு மறிவுறுத்தற்குச் சிவாலயப் பணி முதலியவற்றை, நம் நண்பர் மதத்தினரும், நண்பரும் செய்துவரும் வாசா ஞானம் வாசாப் பணி போன் றின்றி,உண்மை யன்புடன் உண்மைப் பணியாகச் செய்தும் வந்தார்கள். அவர்கள் உண்மைக் கருத்தினைத் தம் மாணுக்கர்கட் குபதேசித்து வந்தமையா னன்றோ, இதுகாறும், அவர்கள் பரம்பரையில் வந்த யாவரும் உண்மையான பிரம ஞானிகளாய்ப் பிரமரூபமாயினர். முன்னர் ஸ்ரீமத் ஆண்டவரைச் சைவ சித்தாந்தி யெனப் பகர்ந்து, பின்னர் "ஆண்டவரும் திருப்பணியாதிகளே செய்து பிரபஞ்ச வெறுப்புடையரா யிருந்தமையாலும், பெரியோரை யடைந்து நன்மை பெற வேண்டு மென்று விரும்புகின்றவர்களுக்கு, இக்கோயிலூர் மடமே புகலாகத் தோன்றப் பெற்று வந்தடுத்தார்கள். அடுத்தாலும், 'அங்கு ஆண்டவ னொருவன் நமக்கு மேலா யுளன். நா மெல்லா மடிமைகளே. நாம் ஆண்டவனைச் சரியை கிரியை யோக ஞான நெறி நின்று வழிபடுதலே முத்தி சாதனம்' என்கின்ற போதஞ் விளக்கங் கிடைப்ப தருமையாய் 'எல்லாம் பொய் - நானே பிரமம்' என்கின்ற போதனையே மலிந்து இடத்தலால்..." என்று மைய லுற்று மாறாய் வேதாந்தி யென் றுடன் பட்டு முன் பின் னுள்ள முறா ணறியாது மொழிவாராயினர். அப்பெருந்

தகையா ரியற்றிய "சுவாநுபவத் திரு வாக்கு" என்னும் நூலினையே னும் ஆராய்ந் தறைந்தனரா? அந்நூலில் உள்ள,

"ஆலோ னிறந்து மும்மையாகத் தண்ண லிறந்துங் கமலமுறை
நாலா நநத்தோன் முடிந்திறந்து நார தாதி யோரிறந்துங்
காலா திகளு மொழிந்திறந்துங் ககன மாதி யழிந்திறந்தும்
ஆலோ கங்க ளிறந்துநின்று யம்மே கொப்பை யுடையாளே"

"கண்ட பொருளல்ல காணும் பொருளல்ல கண்டபொருள்
மண்டு மிருளல்ல மாயு மொளியல்ல மன்னுமொளி
பண்டென் பதுமல்ல வின்றென்ப தல்ல பராபரமாம்
அண்ட மடங்க வடங்காப் பெருவெளி யையுளியே"

"கனவிற் குழவி மடிபெற் றுளுட் களித்தவள் தான்
நனவிற் கருதப் பொய்யா னதுபோ னனவினுற்ற
தனமிக்க மக்களும் பெண்டிருஞ் சுற்றமுந் தன்னுடம்பும்
இனமுற்ற வென்னை யறியப்பொய் யாகி யிருந்ததுவே."

"விண்ணாதி பூதமெலாஞ் சிவமே யாகு மெய்யுருவும் பொய்யுருவுஞ் சிவமே யாகும், கண்ணான வேதமெலாஞ் சிவமே யாகுங் கருதுகின்ற நினைவெல்லாஞ் சிவமே யாகும், எண்ணிறந்த பேதமெலாஞ் சிவமே யாகு மிப்படியே தினந்தோறுங் காண்பா னாகிற், பெண்ணாணு மலியா கும் பேத மின்றிப் பிரமமய மாதறிண்ணம் பேத மின்றே."

"தன்மயமாஞ் சத்தி தானினைக்க நாமவுரு
மின்மயம்போற் றோன்றி விளிந்திடுமே—யென்மயமே
யாமே யவையெல்லா மானால்யா னும்மெனதும்
போமே சிவமாய்ப் போம்"

"பின்னு பின்ன மொன்றிலதாய்ப் பெரிதாஞ் சத்தா சத்திலதாய்
முன்னு நின்ற நிரவயமாய் முடியா திருந்த சாவயமாய்ப்
பன்ன வேது மில்லாமற் பகரு மநுடக் கொம்பாகு
மன்ன மாயை தனையகற்று யம்மே கொப்பை யுடையாளே"

"எல்லா மிறந்த நிலையாகி யானு மெனது கற்பிதமாம்
எல்லா மாகி யல்லவுமா யிருந்து விளங்கு மின்னமுதே
பொல்லே னவிவே கத்தாலே புன்மை விடய மாக்கரைந்தே
யல்லற் படுவ துனக்கழகோ வத்தா வண்ணு வாரணனே"

"முத்துவெண் ணகையார் சித்தம தொக்க முயல்வதே கருமமென் றுன்னிப், பித்தரின் மயங்கிப் பிறவியங் கடலிற் பீழையுற் றழுந்தாறு வேனைச், சித்தம தொக்க வாவென வழைத்துத் தீகஜநீ பிரமமென் றருளு, முத்தம குருவே பொருள்வைமா நகர்வா ழுகந்தமே சிகசிகா மணியே"

" அத்தியந்தா பாவ மாகுமிழி கோசமைந்தும்
புத்தியினு னித்தியமாய்ப் பொற்புறல்போற்—புத்தியினு
லில்லாதாய் நீங்காதோ வேழைமந மேயிதனிற்
புல்லா திருந்தவனே பொய் "

" ஈயக் கதிரா மிலக்கணமு மின்குறளு
மாயப் பொருளா வறைந்தாலு—நோயகலா
துன்னை மறந்த வொருதுரிய பூமியிலே
மன்னி யிருக்க மதி "

" இந்தப் பெரும்பிரமா காரமிலை யெய்தாமற்
றெுந்தப் பிராந்திநிதந் தோய்ந்தனையே நெஞ்சகமே."

" எல்லா மிறந்ததிலை யீதென்று கண்டிருந்து
நில்லாம லந்தநிலை நீங்கினையே நெஞ்சகமே "

" துன்பத் துவிதம் தொலைந்தசுக நிஷ்டையிலே
யின்பத் துருவா யிருப்பதென்றோ நெஞ்சகமே "

" சித்திரத்தி லேவரைந்த தீபம்போ னில்லாமற்
கத்தித் தலைவெடிக்கக் கற்றனையே நெஞ்சகமே "

" எல்லா வுலகு மிறந்துமிற வாதபதஞ்
செல்லாது காண்பவற்றிற் சிக்கினையே நெஞ்சகமே "

" அத்திபா திப்பிரிய வாதிவெளி யாயிருந்தாற்
சுத்தமிலாச் சீவபரத் தொய்தமெங்கே யஞ்சுகமே "

என்னுஞ் செய்யுட்களில், அத்வைதத்தினைக் கூறி யிருக்க, அதனை யுணரும் புண்ணிய விசேட மில்லாது சைவ சித்தாந்தி யென்று முன்னரெழுதித் " தான் கெட்டது மன்றிச் சந்திர புஷ்கரணியையுங் கெடுத்தான்" என்னும் வழக்குப் போன்று, மற்றோரையும் ஏமாற்ற நினைத்தார். நினைத்தவர், அவர்களது சரித்திரத்தினை யாராய்ந்து அவ்வழியாயினுஞ் சென்றனரா? துறவு சுவாமிக ளென்றும், துற வாண்டவ ரென்றும் வழங்கப் பெறும் ஸ்ரீ அருணாசல ஞான தேசிக சுவாமிக ளிடத்தில், பக்தி செய்தொழுகிய நம் நண்பரது உபாசன குருவாகிய யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவல ரியற்றிய,

" சீர்கொண்ட சகவருட மாயிரத் தெழுநூறு சேருமறு பத்தொன்பதிற் றிருமருவு பிலவங்க வருடமதின் மீனமாந் திங்களெட் டாந்தேதியிற் றிரமருவு பானுவா ரத்தினுத் திரமெனச் செப்புநக்ஷத்திரத்திற் சிறந்தபூ ரணியெனுந் திதியதனி லினிதுவரு திகழ்கன்னி லக்கினத்தே, கார்கொண்ட புயல்வண்ணன் மலரயன் வருந்தியுங் காணாத பெரு வாழ்வெனுங், கறைமிடற் றிறைராஜ கட்கபர மேசுரன் கருணையுரு வோடமர்ந்து கனவெழில்கொள் மணிமாட நிலவுசமி வநமெனக் கழறுமுயர்

பதியில் வாசன் கணிதமறு சீடர்தம தகவிரு ளேரத்தவரு கருதரிய ஞான தபனன், போர்கொண்ட காமக்கு ரோதலோ பாதியாம் புகல்குற்ற நீங்கு புனிதன் பொறையறி வடக்கமருண் முதலநற் குணமொடு பொருந்திவளரு ருற்ற முதல்வன் புவனமூன் றினுமிவன் புகழ்சென் றிடற்கிடம் போதாதெ னச்சிறந்தோன் பொருவிலா துயர்சுத்த வேதாந்த சாஸ்திரம் போதமிக் குள்ள நிபுணன், பேர்கொண்ட நிர்மல சமாதிசா க்ஷாத்கார பிரதாப மிகுசி ரேஷ்டன் பெருமை நிறை தருமுத்து ராமலிங் கக்குரு பிறங்கியிடு மத்து விதநிட் பிரபஞ்ச நிர்விஷய நிஷ்களா தீதமாம் பெருவெளிய தாகி நின்ற பேசரு மகண்டபரி பூரண சுகாநந்த பிரமமா யிலகிறேனே " என்னும் இச் செய்யுளில் சமான ரகிதமானது அத்வைத மென்னும், பிரபஞ்சம் பொய் யென்னும், ஜீவப் பிரம வைக்கிய முடைத் தென்னும், இவ்வாறுய தன்மையினை ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிக ளுடையவர்களா யிருந்து பிரம வுருவ மானார்க ளென்னும், விளக்கி யிருப்ப, அதனை யுணராது "குதிரை குருடானாலுங் கொள்ளுத் தின்பதிற் குறைவில்லை" என்பது போன்று, குருட்டுத்தனமாய் எழுதினார். இவரது உபாசனு குருவாய ஆறுமுக நாவலர் ஸ்ரீ அருணாசல ஞான தேசிகப் பெருந்தகையா ரிடத்து எங்ஙனம் அன்பு பூண் டொழுகின ரெனின்,

"துறவு சுவாமிக ளிருவருந் தில்லையை யடைந்து நடராஜ தரிசனஞ் செய்து ஆத்மாநுசந்தானபரர்களா யிருந்தனர். அப்போது யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நல்லூர் என்னும் நகரத்தில் வசிக்கும் சைவ சித்தாந்த வித்வத் சிரேஷ்டராகிய ஆறுமுக நாவல ரவர்கள் ஸ்ரீ நடராஜ தரிசநத்தின் பொருட்டுச் சிதம்பரத்தை யடைந்து, சிற்சபேசர் திருவீதியி லெழுந்தருளத் தரிசனார்த்தமாக அங்கு வந்து சேர்ந்தனர். அப்போது துறவு சுவாமிக ளிருவரும்,அடியார் குழாங்களோடு நின்று, சபாநாதனைத் தரிசித்துச் செல்லுவதை நாவல ரவர்கள் கண்காக்ஷியாகப் பார்த்துப் பின்றொடர்ந்து கேணி மடத்திற் சென்று இரண்டு மூர்த்திகளையும் அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து வணங்கி நின்றனர். அவரைச் சுவாமிகள் " தாம் யார்?" என்று வினவ, அவர் " யான் வசிப்பது யாழ்ப்பாண நல்லூர். என் பெயர் ஆறுமுகம். ஸ்ரீ நடராஜப் பெருமானைத் தெரிக்கும் பொருட்டு இங்கு வந்தேன் " என்று கூறி நிற்க, அவர் வார்த்தை நயத்தைக் கேட்டு உட்காரும்படி ஆஞ்ஞாபித்ததின் பேரில் சற்று நேர மங்கிருந்து, அவர்கள் பிரபாவங்களைக் கண்டு ஆச்சரிய மடைந்து உத்தரவு பெற்றுச் சென்று, பின் நாடோறும் அவ்வாறே வந்து தரிசித்துப் போவர். சுவாமிகளும் அவரது நல் லொழுக்கத்திற்கு வியப் படைந்து ஸ்காந்தப் புராணத்தைத் தினந்தோறும் பகல் பதினைந்து நாழிகைக்கு மேல் பிரசங்கஞ்செய்து வரும்படி ஆஞ்ஞாபிக்க, அங்ஙனமே செய்து வந்தனர். சுவாமிகள் அப் பிரசங்கத்தைக் கேட்டுச் சந்தோஷித்து,ஒரு நாள் இன்று முதற் புராணப் பிரசங்கஞ் செய்து வரவேண்டுமே யன்றிப் பாதிரிமார்களுக்குப் பாடஞ்

சொல்ல லாகா தென்று உத்தரவு செய்ய, அவ்வாறே, அன்று முதல் பாதிரி மார்களுக்குப் பாடஞ் சொல்லுத லொழிந்து, புராணப் பிரசங்கஞ் செய்து வாழ்ந்திருந்தார்" என்னுந் துறவு சுவாமிகள் சரித்திரத்தி லுள்ள இச் சரித்திரத்தா லுணர்க !

இவரது உபாசனு குருவாய ஆறுமுக நாவலரை முன்னர் "நான் பிரமம்" என்னும் வேதாந்தக் கொள்கையி லிருந்து பின்னர் சைவ சித்தாந்தி யாயின ரென் றெழுதினு மெழுதுவர். "ஆண்டவ ரென் றவ்வகை யாராலே கொண்டாடப் பெற்ற" என்றார். இவர் கூற்றுப்படி சைவ சித்தாந்தக் கொள்கை யுடையவர்களா யிருந்திருப்பின், இவராலும் இவர் மதத்தினராலுங் கொண்டாடப் பெற்றிருக்கலாமே? அவ்வா றின்மையின் "வஞ்ச மநத்தான் படிற்றொழுக்கம் பூதங்க, ளைந்து மகத்தே நகும்" என்றபடி வஞ்சகத் தன்மையோடு, 'சைவ சித்தாந்தக்கொள்கை யுடையவ' ரென எழுதினரே யன்றி முழுக்கருத்துட னெழுதினவ ரல்லர். அங்ஙன மெழுதி யிருப்பரேல், பின், 'வேதாந்தக் கொள்கை யுடையோ' ரென்று மாறுகொளக் கூறுவரா ?

"நாம் அவனுக் கடிமையே யென்ற வுண்மைக் கருத்தாலேயே" யென்றார்.

யா மிதுகாறுங் காட்டிய சுவாநுபவத் திரு வாக்கி லுள்ள செய்யுட்களில், இவர் காட்டிய இரண்டு தேற்றேகாரங்கட்கு மாறாய், அத்வைத சித்தாந்தமே நிலைநாட்டப்பட் டிருக்கின்றது. அதனை யுணராது "ஆண்டானடிமைத் திறத்தையே" யுண்மையாகக் கொண்டிருந்தார்க ளென்று "அறிவே னறிவேன் ஆலிலை புளிபோன் றிருக்கும்" என்பது போன்று இரண்டு தேற்றேகாரங் கொடுத்து வரைந்த அறி வின்மையை யாவரோ கண்டு நகையார். "உண்மைக் கருத்தாலே" என்று ஏது கொடுத்தனரே. அவ்வேது "இன்மைக் கருத்தாலேயே" யென்னும் வேறோரேதுவினைக் கொணர்ந்து, இவரது பிரதிஞ்ஞையினைக் கோறல் செய்து, 'சற்பிரதி பக்ஷ மென்னும் ஏதுப் போலிப் பெயர் புனைந்து நின்றதனை, தர்க்கநூல் வல்லார்வாய்ச் சரணாகதி யடைந்து கேட்டுச் சாந்தி பெறுவாராக ! இவர் கூறிய மேற்கோளு(பிரதிஞ்ஞையு)ம் கோளாய வாறு காண்க.

முன்னர் "வாசிட்டங் கீதாதி நூல்களில் பல சைவ நலங்க ளுள" என்று பிரதிஞ்ஞை செய்தார். அப்பிரதிஞ்ஞையும் முன்னர் யா மறிவித்த அந்நூல்களின் செய்யுட்களால் அழிந்தமையின், "பிரதிஞ்ஞா சந்நியாசம்" (மேற்கோ ளழிவு) என்னும் தோல்வித்தானத்தை யுற்றவருமாயினர். அப்பிரதிஞ்ஞையும், யா முன்னர் அறிவித்த அந்நூற் செய்யுட்களால் அந்நூலி லின்மையின் "ஆகாயத் தாமரை மண முடைத்து" என்னும் ஆசிரயாசித்த ஏத்துவாபாச முடையோரு மாயினர். இவ்வாறு 'பிரதிஞ்ஞா சந்நியாசம்' என்னுந் தோல்வித்தானத்தையும், சற்பிரதி பக்ஷம்,

ஆசிரயாசித்தம்' என்னும் எத்துவாபாசங்களையும் நண்பர் ஆபரணமாக அணிந்து கொள்ளுகின்றனரே யென்று யாம் மிகவு மிரக்க முறுகின்றோம். முன்னர் வாசிட்டங் கீதாதி நூல்கள் சைவாநுகூலமா யிருக்கின்ற தென்றனர். பின்னர் "வாசிட்ட கைவல்ய கீதாதி நூல்கள் பிறர்க்குப் போதித்து வந்தாலும்" என்ற வாக்கியத்தால் சைவாநுகூல மின்றென்று கூறுகின்றார். சிறார் போன்று அறிவிலியாய் முன்னர்ச் சைவநூலென்றும், பின்னர் அத்வைத நூலென்றும் "பழைய குருடி கதவைத் திறவடி" என்னும் பழமொழிக் கிலக்காய் மீண்டும் மீண்டும் அம்முரண் மொழிகளையே, முத்திக் கேது வெனக் கருதி முரசறைகின்றார்.

"பின்பு சீடராய் அங்கு வந்த துறவு சுவாமிகளும் அச்சைவ நெறியே மேற்கொண்டு, அக்கோயிலூரில் முப்போது முண்டு வசித்திருத்தலின் நோக்க மில்லாமற் சிதம்பர மடைந்து ஸ்ரீமந் நடராஜ தெரிசந செப தப தியானாதிகளே பெருவாழ் வெனக் கொண்டு ஆண்டா னடிமைத் திறமே பேணி ஒரு பொழுது பிக்ஷை யேற் றுண்டு,பிக்ஷைப் பெருவாழ்வினராய் வாழ்ந்தனர்" என்றார்.

ஸ்ரீமத் ஆண்டவரிடத்து மாணாக்கராய துறவு சுவாமிகள், தமது குருவினது கொள்கைக்கு மாறாய கொள்கையினைக் கைக்கொள்வர்களா? நம் நண்பர் கொள்கைப்படி ஸ்ரீமத் ஆண்டவர் 'சைவ சித்தாந்தி'யா யிருப்பினும், அக்காலும் ஆண்டா னடிமைத் திறம் பேணுதற்காக ஸ்ரீ கோவிலூரி னின்று மகல வேண்டாமே! "செப தப தியானாதிகளே பெரு வாழ் வெனக் கொண்டு" என்றனரே,

" மந்திரஞ் செபந் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தமி லாத முத்திக் குபாயமே யறிய வேண்டும்
சிந்தனை புறனே செல்லிற் றுயரமே திரிய மீட்கில்
பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான வின்பஞ் சேர்வார்" என்னுந் தேவிகாலோத்திரச் செய்யுளைக் கைக்கொண்டு ஒழுகிய ஸ்ரீ துறவு சுவாமிகள், செப தப தியானங்களையே பெரு வாழ் வென்னும் மோக்ஷ மென்று கொள்வர்களா? " அக்கோயிலூரில் முப்போது முண்டு வசித்திருத்தலின் " என்று வசை மொழி புகன்றார். என்றையத் திநம் நண்பர் கோவிலூரில் வந்து முப்போது மந்நம் புசித்தலைப் பந்தியி லொருங் கிருந்துண் டுணர்ந்தனரோ? உணர்ந்திருப்பி னந் நாளைக் குறிப்பிட்டு வரையலாமே! அவ்வாறு 'முப்போது முண்பதில் நோக்க மில்லாதவர்களாய்ச் சிதம்பரஞ் சென்றார்கள்' என்று ஸ்ரீ துறவின் பெருந்தகையாரை வரைந்தவர், பின் யோசனை செய்து வரைந்தாரா? அங்ஙனங் கருத்துடையவர்களா யிருப்பின், ஸ்ரீ முத்து ராம லிங்க ஞாந தேசிக சுவாமிக ளென்னும் தமது குரு மூர்த்தியின் ஆஞ்ஞையைச் சிரமேற் கொண்டு, அக்கோயிலூர் மடாலயத்தின்கண் பிரம ஞானாசாரிய மூர்த்தியா யெழுந்தருளி யிருந்து,

எண் ணிறந்த மாணுக்கர்கட்குப் பிரமோபதேசஞ் செய்துகொண் டிருந் திருப்பார்களா? அவர்க ளியற்றி யுள்ள 'கைவல்ய வுரையினையேனும், சீடாசாரத் தினையேனும்' உணர்ந்து உளறுபடை செய்தனரா? நம் நண்பர் அவைதிக தாந்திரிக சைவ சித்தாந்தி யெனப் பெயர் வைத் துக் கொண்டு, காலையில் ஸ்நாநம் ஜெபம் தபம் பூஜை யின்றி,

"ஆசினை யடைந்த நெஞ்சிற் றுமத ருணவு கேட்கில்
ஊசின பழஞ்சோ றெச்சி லும்பர்பூ சனைக்கா காமை
யேசின வெந்தி லாத வினையன விவற்றி ளுலே
காய்சின முதலா யுள்ள துயரெலாம் விளைவ கண்டாய்"

"இப்படி யன்றி வேறு யிராசத ருணவு கேட்கிற்
கைப்பன புளிப்பு வர்ப்புக் கூர்ப்பன கடிய வெய்து
நெய்ப்பயி னெருப்புப் போலச் சுடுவன விவற்றி ளுலே
மெய்ப்படு நோயு நெஞ்சத் திடும்பையும் விளைவ வேலோய்"

என்னும் பகவற்கீதைச் செய்யுளிற் கூறியாங்கு, புளித்த இட்டலி யினையும், மாட்டெண்பு கலந்த சீனியினையும், இன்னும் இவை போல்வன பலவற்றையும், வயிறு புடைக்க ஏகாந்த ஸ்தாநத்தி லிருந்து புசித்துப், பின் அது ஜீரணிப்பான் மூன்று மணிவரை மஹான்களை நிந்தித்தும், அதன் பின் பூசாரி யென்னும் பெயருக் கியைய ஏனைச் சைவ சித்தாந்த வைசிய மணிகளை யேமாற்றும் பொருட்டு, டம்பமாக

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூஜையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே"

என்று பிரமாநந்தப் பரமபத வாழ் வுற்ற எமது பட்டினத்துப் பெருந்த கையார் கூறியாங்கு வாக்கு மநமுங் கண்ணும் வேறிடஞ் செல்லும்படி பூஜை புரிந்து, பின் அறுசுவைகளும் பொருந்தும்படியான அன்னுதிகளை யபரிமிதமாக விலாப்புடைக்கவருந்தி உண்டு, அவ்வுணவும் பரிணமிப்பான் வேத நிந்தை, வேதாந்த நிந்தை, விஷ்ணு நிந்தை, வித்வான்கள் நிந்தை, விப்பிரர் நிந்தை முதலியவற்றினை விரிவாய் மாலுறு மாலைக் காலம் வரும் வரைச்செய்து, பின் காலை முதல் மாலை வரை யாவரையு நிந்தித்த வுஷ்ண த்தினை நிவிர்த்திப்பான், அரசாங்கத்தாருக்கு முக்கிய ராஜதானியாகிய சென்னபட்டணத்து முகத்த லளவைக் கருவியாகிய பக்காப்படியால் ஒரு படி ஆன்பாலை வாங்கி அரைப்படியாக அக்கினி பகவனிடத்துப் பிரார்த்தி த்து வற்றச் செய்து, அதனேடு தமக் கிஷ்டமான அன்னுதிகளையும் அள வின்றிப் புசித்து, அயர்ந்து நித்திரை செய்து வருகின்றனரே! அது போ ன்றே கோயிலூரின்கண்ணும் முப்போதும் அந்நம் புசித்து வருகின்றூர்க ளென்று கருதிக் கழறினர் போலும். ஒரு திநமாயினும் கோவிலூரின்

கண் வந்திருந்து அங்கிருக்கும் அடியார் குழாங்களையும், அவர்கள் செய்யும் கைங்கரியம் சிரவணம் முதலியவற்றினையும், கண்கூடாகப் பார்த்துப் பந்தியி லொருங் கிருந்து போஜனஞ் செய்திருப்பாராயின், "நரி வாலினால் ஆழியின் ஆழம் பார்த்தல் போல்" என்னும் பழமொழிப்படி மகிமை யுணராது மனச் சான்றுக்கு மாறாக வரையார். வரையார்! ஸ்ரீ துறவின் பெருந்தகையாரைச் சைவ சித்தாந்தி யென்று வரையக் கருதிய நண்பர், அவர் கண்மீது திரு வாவடு துறை யாதீனத்து மஹா வித்வான் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை யவர்களால் துதிக்கப் பெற்ற,

"துறவொழுக்க மனைத்துமொரு வடிவுகொண் டாலன்ன தூயவன்றன் மயமாக யாவையுங்கண் டிருப்போன், மறவொழுக்கங் கடிந்துயிர்கள் சுவாநுபவ மருவ வயங்கியவே தாந்தசிர வணமேற்றும் வலியோன், அறவொழுக்கந் தலையெடுப்பக் காரணங்கண் டுவப்போ னடங்குமிட மாகிய சி தாகாசப் பிரியன், உறவொழுக்கம் வளர்த்தவரு ளைசலதே சிகனென் றுரைத்திடுநந் தீசனெனு மொருவனைவாழ்த் திடுவாம்"

என்னும் இச் செய்யுளையேனும் ஆராய்ந்து அறைய லாகாதா? இச் செய்யுளில் அவர்களை அத்வைதிக ளென்று கூறி யிருக்க மாறு கூறி மயங்கினரே.

இன்னும் ஸ்ரீ துறவின் பெருந்தகையா ரியற்றிய,

"தந்தைமுதற் பந்துவெலா மநந்த தேகந் தருவதலா லனாதிபவ பந்தந் தீர்க்கார், சிந்தையினா லாய்ந்திடிலப் பந்து வெல்லாஞ் சிறுமை தருஞ் சத்துருவே யாகா நிற்ப, ரந்தமிலா வருள்வடிவாங் குருவோ வென்றா லகண்டபர ஞாநத்தை யருளா னல்கித், தொந்தமதா மநாதிபவ பந்த மெல்லாந் துப்பறவே நன்றாகத் துடைத்துக் காப்பன்"

"இந்த விடும்பை யுடம்புறு மேது
தந்தை யெனப்புகழ் கின்றிலர் தக்கோ
ரந்த மிலாத வகண்டமு நம்முட்
டந்தவர் தந்தை யெனச்சமை வுற்றார்"

"வருபிறப் பறவே வேண்டினன் மறைமீ றென்னுமம் புயத்தினை மலர்த்தற், கிரவியாய் நெஞ்சிற் கிசைந்தநற் குருவை யாதொரு வழுயினா விறைஞ்சி, யருள்சுரந் திடுதற் காவதே செய்வா னருமறை முடிவெலா மறையும், பொருளைநே ராக வுமக்கெனக் கீசன் புகன்றவப் படியிலே புகன்றேன்"

என்னுஞ் சிடாசாரச் செய்யுட்களானும் பதி பசு பாசங்கள் அநித்தியங்க ளென்னுங் கொள்கை யுடையோர்க ளென்பதை யினியேனு முணர்வாராக!

" ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனாய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்த மூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளுந்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே. "

என்னுங் கைவல்யநவநீதச் செய்யுட்கு, எமது துறவின் பெருந்தகை யார் இயற்றிய வுரையில், நம் நண்பரது கோளாகிய ஆண்டா னடிமைத் திறத்தினையும், பதி பசு பாச நித்தியத்தினையும் சுருதி யுத்தி சுவா நுபவ வாயிலாய் விரிவாய்க் கண்டித்துப் பத்துப்பக்க மெழுதியிருக்க, அவை யாவும் தமக்கு மூா ணென வுணராது, " அஷ்டதரித்திரன் மூப்பத்திர ண் டறமும்,சர்வசுவ தக்ஷிணை யாகமும் செய்ய நினைத்த கதை"போன்று, வீணாக வெழுதி வெட்க முற்று வெந்நிட விரும்புகின்றார்.

" இவ ரிடத்துச் சீடராய் வந்த மெய்யப்ப சுவாமிகளும், அங்கு மூப் போது முண்டு வசித்தலினும், அக்கொள்கையிலுஞ் சிறிதும் நோக்க மில் லாமல், அக்கோயிலூரை விட்டு நீங்கி மதுராபுரியை யடைந்து, ஒருபோ துண்டு சிவ தீக்ஷாதி பெற்றுச் சித்தாந்த சாஸ்திர முற்று முணர்ந்து, பிரபஞ்சப் பற்றை வேரறக் களைந்து, ஸ்ரீ சோமசுந்தர பாதங்களையே யிறு கப் பற்றிச் செயற் கரிய சிவ நியமாநுஷ்டான தற்பர சிவ ஞாநச் செல்வ ராய் அம் மதுரா புரி யெல்லை கடவாமற் சீவன் முத்தராய் வாழ்ந்தனர் " என்றார்.

" இவ ரிடத்துச் சீடராய் வந்த மெய்யப்ப சுவாமிகளும்" என்றாரே. ஸ்ரீ துறவு சுவாமிகளைக் குருவா யடைந்த இவர்க்கு, அவர்கள், நம் நண்பர் கூற்றுப்படிக் கைக் கொண்ட சைவ சித்தாந்தம் நோக்க மில்லாது போயி ற்றோ ? நம் நண்பர் துறவின் பெருந்தகையாரைச் ' சைவ சித்தாந்தி ' யென்று கூறுகின்றமையின்,ஆண்டா னடிமைத் திறங் கொள்ள வேண்டு மென்று கருதிச் சீடரா யடைந்த மெய்யப்ப சுவாமிக்கு நோக்க மிலதாகவே ஸ்ரீ துறவின் பெருந்தகையார் கருத்துப் பரம அத்வைத சித்தாந்த மென்று சித்த மாயிற்று. நம் நண்பருக்கு ஒருவகைக் குருவாய மெய்யப்ப சுவாமி யென்பார், நம் துறவின் பெருந்தகையாரை யத்வைத சித்தாந்தி யென்று கருதுகின்றனர். அம்மெய்யப்ப சுவாமியின் மாணாக்கராய நம் நண்பர், நமது துறவின் பெருந்தகையாரைச் சைவ சித்தாந்தி யென்று சாற்றுகின் றனர். இவ்விருவரது கூற்றில், எவரது கூற்று எதுவரை யுண்மையாம் என்பதனையு மாராய்வாம். நண்பர் கூற்றுப் பிரமாணமாமேல் நண்பரது குரவன் கூற்றுப் பொய்யாம். நண்பரது குரவன் கூற்று மெய்யாமேல் நண்பர் கூற்றுப் பொய்யாம். இவ்வாறு " சுந்தோபசுந்த " நியாயத் தால் இருவர் கூற்றும் பொய்யாய்ப் போயினவாறு காண்க.

ஒரு சிறிய ஆபாசச் சுவடியின்கண் ஆரம்ப முதல் அந்தம் வரைப் பரம் பரையாக வுள்ள வாக்கியங்களுள் ஒன்றையேனும் முன் பின் மூா ணின்றி

கற்றூர் பார்த்துக் காமுறும்படி வரையத் தலைப்பட்டனரா ? அந்தோ ! இவர் தலைவிதி யிருந்தவா றென்னே ! யாம் எத்தனையோ பண்டிதரைப் பார்த் திருக்கின்றோம். இவர் போன்ற அறிவிலியைப் பார்த்திலம். "பெரிய மாதேவ சுவாமிகளும், அக்கோயிலூரிற் சிலகால மிருந்தும், மற்றவர்கள் போல நால்வகை யறுசுவை யுணவு கொள்ளாது வெற்றந்தத்தையும் பசையறக் கழுவி யுண்டு சிவ ஸ்தல சஞ்சாரியாய்ப் பின்பு திருப்பெருந் துறையை யடைந்து சிவாநுபூதிச் செல்வராய் வாழ்ந்தனர்" என்று வரைந்தார்.

வரைந்தவர் சைவ சித்தாந்தி யென்று வரையாது, தங் கொள்கைக்கு மாறாய், அத்வைதி யென்றும், வைராக்கிய முடையவர்களா யிருந்தார்க ளென்றும், வரைந்தார். "சிவாநுபூதிச் செல்வராய்" என்னுஞ் சொற்றொடர், "சிவன் பரசிவனுமே" என்னுந் திருமந்திரச் செய்யுளின்படி, "சிவன் நான்" என்னும் அநுபூதிச் செல்வராய் வாழ்ந்தார் எனத் தத்துவமசி மஹா வாக்கியப் பொருளை யறிவித்தலையும் அறிவாராக !

"அக்காலத்தில் தந வைசியர்களாகிய நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வசிக்கின்ற நகரங்களில் வேறு சைவ சித்தாந்த மடாலயங்களில்லாமையாலும், ஆண்டவருந் திருப்பணியாதிகளே செய்து, பிரபஞ்ச வெறுப்புடையரா யிருந்தமையாலும், பெரியோரை யடைந்து நன்மை பெற வேண்டு மென்று விரும்புகின்றவர்களுக்கு இக்கோவிலூர் மடமே புகலாகத் தோன்றப் பெற்று வந்தடுத்தார்கள். அடுத்தாலும், அங்கு ஆண்டவ னொருவன் நமக்கு மேலா யுளன், நா மெல்லா மடிமைகளே, நாம் ஆண்டவனைச் சரியை கிரியா யோக ஞாந நெறி நின்று வழிபடுதலே முத்தி சாதந மென்கின்ற போதனை விளக்கங் கிடைப்ப தருமையாய், எல்லாம் பொய், நானே பிரமம் மென்கின்ற போதனையே மலிந்து கிடத்தலால் அதில் விருப்ப மின்றி மேற்குறித்த பெரியர், அவ்விடத்தை விட்டுச் சென்று ஆண்டா னடிமைத் திறமே பேணி வாழ்ந்தார்கள்" என்றனர்.

அக்காலத்தில் நகரத்தார்க ளுள்ள ஊரில் சைவ சித்தாந்த மடங்க ளின்மையால் இக்கோவிலூரே புகலிடமா யிருந்த தென்றனரே. இக்கால் நகர வைசியர்க ளிருக்கின்ற ஊர்களில் எத்தனைச் சைவ சித்தாந்த மடங்க ளிருக்கின்றன. ஒன்றேனு மின்றே. ஆண்டா னடிமைத் திறம் பேணி பெரியாரை யடைய வேண்டு மென்று விருப்புடையோர் தங்கொள்கைக்கு மாறுய கொள்கையுடைய அத்வைதப் பெரியாரை வந் தடைவானேன் ? குன்றக்குடியில் 207 வருஷமாக வுள்ள திருவண்ணாமலை யாதீனம், பிராமண குலத்தி லவதரித்து அவதூதாயிருந்த, தெய்வ சிகாமணி தேசிகரவர்கள் வேதாந்தியா யிருக்க. பின் அவர்கள் பரம்பரையில் வந்த சைவத் தம்பிரான்கள் சைவ சித்தாந்த மடமாக மாற்றிய, அதிசமீபமா யிருக்கும்

அம்மடத்தின்கண் ணிருக்கும் பெரியாரைப் போய்ச் சரண கதியாக அடைந் திருக்கலாமே? அங்ஙனஞ் செய்யாது கோவிலூரி லுள்ள பெரியாரையே சரணகதியாக வந் தடைந்தமையின் கோவிலூருக்கு வந்த மாணாக்கர்கள் யாவர்க்கும் அத்வைதமே யுடன்பா டென்று இவர் வாக்கியத்தானே வெளியாகின்றது.

நம் நண்பர் வசிக்குங் காரைமா நகரில், தமக்குபதேசிக்கச் சைவ சித்தாந்தப் பெரியார் கிடைக்கா திருப்பின், தமக்கு நேர் விரோதியாய கிறிஸ்துவப் பாதிரிமார்கள் வசிக்கும் மடாலயத்தினைப் புகலிடமாக அடைவார் போலும். அங்ஙனந் தான் அநுபவியா திருப்பின் பிறர்மீது வெற்றுரை கூறுவரா ?

ஸ்ரீ மகாதேவ சுவாமிகள் தேகாந்தம் வரையும் பகவத் கீதை வாசிட்டம் முதலிய நூல்களை நாடோறும் பாராயணஞ் செய்து வந்தவர்களாயிற்றே? அதனையேனு முணர்ந்து வரைந்தனரா? அவர்கட்குக் குருவாய நேமுத்துப்பட்டி ஐயா வென வழங்கும் பழநியப்ப சுவாமிக ளென்பவர்கள் வேதாந்தக் கொள்கையுடையோ ரென்பதையேனு முணர்ந்து வரைந்தனரா? சிவ ஸ்தல யாத்திரை செய்வதே சைவ சித்தாந்த மோக்ஷ மென்று,

திருமந்திரம்—ஞானம்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நகரின்மிக் காரே. 1467

தவ தூடணம்.

கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் தொடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. 1644

ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய் காயமிடங் கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. 1633

அவா வறுத்தல்.

" மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே " 2614

சர்வஞானோத்தரம்.

ஆன்மாவே பரமசிவ மெனவுண்மை யாக வறிகின்று னவ்வெந்த வவத்தையடை யினுமவ், வான்மாவே பரமுத்தி யெளிதலடையு மிந்த வான்மலா பத்தையொத்த லாபமவே றில்லை, ஆன்மாவே விசிட்டகா ணாதீத வாக்கு மனாதீத சருவஞ்ஞ ஞனபூ ரணனும், ஆன்மாவே பரமசிவ சொருபமா கலினு லான்மரூ பத்தையே சிந்திக்கக் கடவன். 18

வன்னமாச் சிரமமுயர் தவஞ்செபந்தி யான மந்திரந்தீர்த் தந்தெய்வ வுபாஸ்தி திக்கு காலஞ், சொன்னதரு மஞ்சாதி சங்கமெலாம் விட்டுச் சுயம்பிரகா சத்தினே நிராசிரய னாகி, அன்னியசிந் தனைவிட்டுச் சகல பதார்த் தத்து மாசையற்றுப் பாவனா தீதனா யென்றும், தன்றனலே தன்னைத்தன் னிடத்திலே தானே தானிருந்து சிந்திப்பர் தகுஞானத் தவரே.

ஆனசக காரணனும் புருட னானே வக்கரவத் துவநானே பரப்பிரம நானே, ஈன மன்றி யழிவற்ற பரசிவனு நானே யென்றுசிவ யோகத்தாற் கருமத்தை யிழந்து, ஞானநிலை யாலைய முழுதுமறுப் பானாய் நாடரிய சீவபர வைக்கியத்தை யடைந்து, மோனமா நிருவிகற்ப னாவரன்போ னித்த முத்தனா வான்மவுபா சனைபண்ணக் கடவன். 64

நிர்க்குணமாய் நிர்மலமாய் நிருவிகற் பனுமாய் நித்தமிரஞ் சனநிரா தாரநிரா மயமாய், அற்புதமாய்ப் பிராகிருத வப்ரமேய வசந்தேக மாய வியா வியமாய்ச்சூக் குமமாய்த், தற்பரமாய் ஞானவழி யிற்காணும் விசுத்த சாசுவத மாய்ச்சருவ சர்வகத மாகிச், சிற்பரமாய்ச் சருவதோ முகவியா பகமாஞ் சிவனைத்தன் னிடத்திலே பின்னமறத் தெரிந்து. 65

. மந்திரம் பதவர்ணம் புவனந்தத் துவங்கண் மருவுகலை யாதிமூர்த் தாமூர்த்த மாக, மூந்துபிராக் கிரியைமார்க் கங்களா மண்ட முழுதுந்தன் னிடத்திருப்ப தாகவே கண்டோன், சந்ததமுஞ் சருவதரி சநசர்வஞ் ஞனாகிச் சர்வபரி பூரணனின் மலவிமுத் தனுமாய், வந்தசே வலநிரதி சயா நந்த மயனாகிச் சிவசாக்ஷாத் காரதைையா யிருப்பன். 67

என்னுஞ் செய்யுட்களுள் கூறப்படாமையானும் சிவஸ்தல தெரிசந யாத்திரை, மோக்ஷ சாதநமே யன்றி மோக்ஷரூப மன்றாம்.

அதில் விருப்ப மின்றி மேற்குறித்த பெரியர் அவ்விடத்தை விட்டுச் சென்று ஆண்டா னடிமைத் திறமே பேணி வாழ்ந்தார்கள் என்று வரைந்தவர், எவ்வூரி லெக் குருவை யடைந்து எச் சாத்திரத்தினைப் பாடங் கேட்டு ஆண்டா னடிமைத் திறம் பேணினார்க ளென்று வரையாது வெற்றுரையாக வரையின் பிரமாணமாமா? தீக்ஷை, குருபதேச முதலியன வின்றிச் சைவ சித்தாந்தத்தினைக் கைக் கொண்டார்க ளென்பது நம் நண்பர் கருத்தே போலும்.

“ புண்ணிய பாவ மில்லை. சுக துக்க மில்லை. பந்த மோக்ஷ மில்லை. நாம் பிரமம். நாம் எது செய்யினுஞ் செய்யலாம் என்பதே யுறுதியாகக்

கொண்டு, தேகாந்தம் வரையும் மாமிசாதிகளில் மிகப் பிரியமாய்ப் புசித்து வந்தாரும், துறவுக்கு விரோதமான மாதர் போக மேற்கொண்டு அதுவே தேகாந்தமாயி னாருஞ் சிலருளர்.'' என்று வரைந்தார்.

மாமிசாதிகள் புசிப்போரும் துறவுக்கு விரோதமான விஷயாநந் தங்களை யநுபவிப்போருமாய்ப் பல ரிருந்து நாசத்தை யடைந்தார்க ளென்று வசை மொழி புகன்று,

திருமந்திரம் அசற்குரு நெறி.

"உணர்வொன் றிலாமூட னுண்மையோ ராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணான்
பணிவொன்றி லாதோன் பரநிந்தை செய்வோன்
அணுவின் குணத்தோ னசற்குரு வாமே.''

என்னுஞ் செய்யுளுக் கிலக்காகக் கருதுகின்றார். இவர் இன்னாரென்ற பெயருடன் வெளிப்படையாக எழுதி யிருப்பாராயின், கிரிமினல் கோர்ட்டில் கேஸ் தொடுக்கப்பட்டு, சென்னை சூளை சோமசுந்தரநாயகர் வைஷ்ணவர்களை நிந்தித்து நூறுரூபாய் அபராதங் கொடுத்தது போன்றும், தேவிகோட்டையி லிருந்து, பத்திரிகை நடாத்திய வோர்யாழ்ப்பாணி கோவிலூரைப் பற்றி நிந்தையாக எழுதி 50 ரூபாய் அபராத மிறுத்தது போன்றும், நம் நண்பரும் பொதுப் படையாகக் கூறியது தாம் அபராத மிறுக்கும்படியா நேரும் என்னுங் கருத்தை யுட்கொண்டே போலும்!

"பாவ புண்ணிய மில்லை. சுவர்க்க நரக மில்லை'' என்ற போதனை யினி யெதைத் தான் செய்விக்க மாட்டாது'' என்று வரைந்தார்.

சுவர்க்காதிகள் அநித்திய மென்று பல நூல்களும் பறை யறைவித்தாற் போன் றறிவித் திருக்க அதனை யுணராது, சுவர்க்க மில்லை யென்னும் ஞானமானது சாத்திர நிஷித்த காரியங்களைச் செய்விக்கு மென்று வீணே பெரியோர்களை நிந்தித்து நாகிற் காளாகக் கருதுகின்றனர்.

"மாதர் போக மற்ற சைவா தீனங்களில் இப்போ துண்டென்பரேல், அவர்கள் பிறரால் ஒரு திரணமாகவு மதிக்கப்படா ரென்ப'' என்று திருவாடுதுறை யாதீனம், சூரியனார் கோவில், திருப்பனந்தாள், தருமபுரம், மதுரை திருஞான சம்பந்தர் மடாலயம், குன்றக்குடி திருவண்ணாமலை யாதீனம், முதலிய விடங்களி லுள்ள சைவ சித்தாந்தப் பெரியோர்களால் ஸ்தாபிக்கப் பெற்ற ஆதீனங்களையும், அவற்றி லுள்ள அதிபர்களைத் துரும்புக்குச் சமானமானவர்க ளென்றும், நிந்தித்து எழுதி யிருக்கின்றார். இதனால் இவர்க்குச் சைவ சித்தாந்தம் உடன்பா டன்றென்று வெளியாயிற்று.

பிரமசாரி, கிரகஸ்தன், வானப் பிரஸ்தன் சந்நியாசி என்னும் நான்காச்சிரமங்களுள், ஓராச்சிரம மின்றி விதுராய வீணாச் சிரமத்தினை

தாம் கைகொண் டிருப்பது போன்றே, சைவ சித்தாந்தமும் வேதாந்தமு மின்றி யிடைப்பட்ட வீண் மத மொன்றைப் பெரியார் கொள்கைக்குஞ் சாஸ்திரங்கட்கு மாருய், சுவகபோல கற்பனையாகக் கற்பித்துக் கொண்டு வீண் வாதந் தொடுத்து வாணுளை வீணுளாகக்கக் கருதுகின்றனர்.

எஞ்சி யுள்ள இரண்டு பக்கங்கட்கும் முன்னரே யெம்மவரால் பல காலும் "நல்ல மாட்டிற் கொரு சூடு, நல்ல மனிதர்க் கொரு சொல்" என்று கண்டிக்கப்பட் டிருத்தலினுலும், யாமுங் கண்டியா திருப்பின் மீண்டும் இதனையே எழுதுவ ரென்னுங் கருத்தினுலும், அவற்றின் கண்டனத் திற்கு இரண்டாம்பாகம் எனப் பெயர் தந்து வரைவோமாக!

நண்ப ரெழுதிய தூர்வையாகசப் படத்தில், "ஞாநசனகர், ஸ்ரீ சங் கராசாரிய சுவாமிகள், இரும்பூதூர் ஸ்ரீ தத்துவாராய சுவாமிகள், நல் லாற்றூர் துறை மங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள், திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், கோவிலூர் ஆண்டவ ரென்னும் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிக சுவாமிகள்; துறவு சுவாமிக ளென்னும் ஸ்ரீ அருணுசல ஞாந தேசிக சுவாமிகள், திருப் பெருந்துறையில் ஸ்ரீ பெரிய மகாதேவ சுவாமிகள், என்னும் எண்மரையும் ஆண்டா னடிமைத் திறங் கொண்ட சைவ சித்தாந்தப் பெரியார்" என்று கூறப்பட்டிருக்கின்றமையின் அவ் வெண்மருக்கும் விக்கிரகங்கள் செய்து சிவாலயங்களில், அறுபத்து மூவ ரோடு எழுப்பத் தொருவராக ஸ்தாபித்து நித்திய நைமித்திக பூஜையாதி களும் விமரிசையாக நடத்தி, அறுபத்து மூவர் மடம் என வழங்கு மடத் தினை எழுபத் தொருவர் மட மெனப் பெயரை மாற்றி, அம்மடத்தின்கண் இவ் வெண் மருக்கும் குருபூஜா காலங்களிற் படித்தற்குச் சரித்திரம் வேண்டுமாகலின், பெரிய புராண மியற்றிய சேக்கிழார் நாயனுருக்குப் பிரதிநிதியாக நம் நண்பர் இருந்து கொண்டு, அவ் வெண்மரது சரித்திரங் களையுஞ் செய்யுளாகப் பாடி, அப்பெரிய புராணத்துட னெருங்கு சேர்த் து, அச்சிட்டு, அரங் கேற்றி, அப்புத்தகத்தினை யானையின்மே லேற்றிக் காரைமா நகரை வலம் வந்து, பின்னர் எழுபத் தொருவர் மடத்தினுள் வைத்து பூஜை முதலியன செய்து யாவரும் படிக்கும்படி செய்வாராக! அங்ஙனஞ் செய்யா திருப்பரேல் இவ ரெழுத்து நீர்மே லெழுத்துக்கு நிக ராகு மென் றுணர்வராக! விரிப்பிற் பெருகும். பின் வரும் இரண்டாம் பாகத்தையும் பார்த்து நன்மை கடைப்பிடிப்பா ரென நம்புகின்ேறும்.

நம் நண்பர் பெரியோர்களின் சரீரத்தினை 'நார்த் தொடுத்து' ஈர்த் து முச்சந்தியிற் போடவேண்டுமென்று வற்புறுத்திக் கூறுகின்றமை யின், இவரது சரீரத்தினையும் துஞ்சியதின் பின், நார்த்தொடுத்து ஈர்த் துக் கொண்டு காரைமா நகரை மும் முறை வலம் வந்து முச்சந்தியில் பல பேய் நாய்கள் பிடுங்கித் தின்னும்படி போடுங்க ளென்று ஞாதியரிடத்து ஆஞ்ஞை செய்து தம் சரீரத்தினை விடுவாராக! அவ்வாறு செய்யாது மௌந முற்றுச் சாவரேல் தம் வாக்கியம் பொய்த்துப் பிரமாணமாகக்

கொள்ளாது வீண் வெற் றுரையுடைய புத்தகமா மென்றறிஞருணர்வா ரென் றுணர்வாராக!

தெருள்விழியோ ரிது தன்னைத் தேர்ந்தனுபூ தியிற்கொள்வர்
மருள்விழியோ ரிது தன்னை மாயாவா தமதென்பர்.

திருமந்திரம்.

ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளு நானுமொன் றுனே
னிழிந்தாங் கினிவரு மார்க்கமும் வேண்டேன் 2958
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே.

பிங்கள ஷு ஐப்பசி மீ

சொக்கலிங்கச் செட்டியாரின் தூஷணை நாவுக்கோர்
சூட்டுக் கோல்

முதற்பாகம்

முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |

## சூட்டுக்கோற் பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 6 | 15 | மறவாற் | மறவாமற் |
| 4 | 29 | சோற்றில | சோற்றில் |
| 11 | 10 | தரிசிநம் | தரிசநம் |
| 17 | 15 | காலத்தில்பேதம் | காலத்தி லபேதம் |
| ,, | 32 | தரும்படிப்பிரார் | தரும்படி பிரார் |
| 18 | 28 | உபநிஷத்து | உபநிஷத்தநு |
| 21 | 30 | ஈசாவஸியம் | ஈசாவாஸியம் |
| 23 | 11 | பின்ளையார் | பிள்ளையார் |
| 38 | 31 | கருடபாவனை பொய்யே | கருடபாவனையின் பலன் பொய்யே |
| 60 | 1 | அத்தியயம் | அத்தியாயம் |
| 69 | 6 | மூக்கின்றியவ | மூக்கறுபட்டவ |
| ,, | ,, | மூக்கரையன் | மூக்கறையன் |
| ,, | 9 | ஷை | ஷை |
| ,, | 16 | ஷை | ஷை |
| ,, | 17 | ஷை | ஷை |
| ,, | ,, | ஷை | ஷை |
| 74 | 33 | சந்நியாசம் | ஹரி |
| ,, | 37 | ஷை | ஷை |
| 83 | 11 | தத்துவாராயர் | தத்துவராயர் |
| ,, | 24 | வேண்டு | வேண்டு. |

| 78 | 14 | டைந்து | யடைந்து |
| --- | --- | --- | --- |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 30 | வாயிலரல் | வாயிலாய் |
| 9 | 34 | பாகத்தில் | பக்கத்தில் |

நூல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 3 | பொருட்டு | பொருட்டுச் |
| 5 | 32 | பெற்று | பெற்றுப் |
| 6 | 2 | மாத்திர | மாத்திரமாயு |
| 6 | 9 | பக்ஷவாதியாத | பக்ஷபாதியாக |
| 7 | 17 | பொருளிளை | பொருளினை |
| 12 | 13 | மீறுக | யீறுக |
| 14 | 15 | ஆவரும் | அவரும் |
| 14 | 26 | கின்றீரென் | கின்றேனென் |
| 15 | 24 | மென்று | மென்றுணராது, |
| 16 | 31 | திருவாசக சுருதி | திருவாசகச் சுருதி |
| 20 | 2 | வபதிடதங் | வுபதிடதங் |
| 22 | 33 | மத்திடாவகை | மதித்திடாவகை |
| 24 | 21 | பாரமார்த்தப் | பரமார்த்தப் |
| 27 | 12 | பட்டினத்து | பட்டினத்துச் |
| 33 | 6 | தேத்த | தேத்தக் |
| 35 | 38 | நாகாக்க | நாகாக்கக் |
| 36 | 24 | சிலாவயங் | சிவாலயங் |
| 48 | 37 | கருதி | கருதிச் |
| 56 | 22 | நசமாகி | நாமாகிச் |
| 58 | 22 | டேற்றிலென் | டேற்றிலேன் |
| 58 | 28 | பேதாமே | போதமே |
| 64 | 14 | ஒதிக்குமா | உதிக்குமா |
| 64 | 77 | ஆஞேத | ஆஞேத |
| 65 | 34 | முறுநாமங் | முருநாமங் |
| 66 | 1 | முறுநாமம் | முருநாமம் |
| 69 | 16 | மூர்க்கரையராது | மூக்கரையராது |
| 69 | 17 | ,, | ,, |
| 73 | 34 | ஸ்காந்தப் | ஸ்காந்த |
| 78 | 14 | டைந்து | யடைந்து |

## ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளவர்களால் இயற்றப் பெற்ற நூல்கள்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும் - ராஜயோக பாஷ்யமும் | 0 | 4 |
| 2. | வியாச தாத்பர்ய நிர்ணயம் | 0 | 8 |
| 3. | வேதாந்த சஞ்ஞா | 0 | 2 |
| 4. | நைஷ்கர்மிய சித்தி | 0 | 8 |
| 5. | சுவாராஜ்ய சித்தி | 0 | 8 |
| 6. | விசாரசாகரம் - மூலமும், அதற்குச் சரியான அகவலும் | 2 | 0 |

### அச்சி லிருப்பன.

| | | | |
|---|---|---|---|
| 7. | பேத திக்காரமும் சத்கிரியை யென்னும் உரையும் | 1 | 0 |
| 8. | ஹரிமீடையும் - ஹரி தத்வ முக்தாவலியும் | 0 | 8 |
| 9. | சிவ சங்கராவதாரம் - சங்கராசாரிய சுவாமிகள் ஈசுவராவதார மென்பதற்குப் புராணப் பிரமாணங்கள் | 0 | 8 |
| 10. | மஹாத்ம சரிதாமிர்தம் | 1 | 8 |
| 11. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா | 1 | 8 |
| 12. | ஈசாவாசிய உபநிஷத்தும் சங்கர பாஷ்யமும் | 0 | 4 |
| 13. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி | 0 | 8 |
| 14. | வேதாந்த பரிபாஷை | 0 | 5 |
| 15. | தர்க்க சங்கிரக மூலமும் - தர்க்க சங்கிரக தீபிகையும் | 0 | 4 |

---

விஜய சக்தி (வெற்றி வேல்) இது திருப்பரங் குன்றம் ஸ்ரீமத்-செந்தி நாதையர் எழுதிய மகா உக்ர வீரபத்ராஸ்திரம் என்னும் புத்தகத்தின் மறுப்பாம்.

---

| | | |
|---|---|---|
| வேதாந்த சாஸ்திர ரத்நாவலி | 1 | 0 |
| பஞ்சதசி செய்யுள் | 0 | 10 |
| சங்கர விஜய விலாசம் (சித்விலாச சுவாமிக ளென்னும் சித்புருஷ ரியற்றியது) | 0 | 12 |

லோகோபகாரி ஆபீஸ்,

கோமளேசுவரன் பேட்டை,

சென்னை.

௨





சிவமயம்.

ஸ்ரீ சங்கராசாரிய குருப்யோ நம:

# சூட்டுக் கோலாற் சூடுண்டு துள்ளி யெழுந்த தூத்துக்குடி முத்தைய பிள்ளை கடாவை யடக்குங் கட்டாரி.

இது

கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக சுவாமிக ளவர்களின்

பாதசேகரரும்

உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசாரியருமாகிய

ஸ்ரீ காசிகாநந்த சுவாமிக ளவர்களால்

விடப் பெற்று

சென்னை

கோமளேசுவரன் பேட்டை

சச்சிதாநந்த அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப் பெற்றது.

1919.

உ

சற்குருப்யோ நம:

# கூட்டுக் கோலாற் குநின்டு, துள்ளி யெழுந்த தூத்துக் குடி முத்தைய பிள்ளைக் கடாவை யடக்குங் கட்டாரி.



ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214 (திருக் குறள்)

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும். 476

திருவாவடுதுறை யாதீனத்திற் சம்பளம் பெற்றுத் தென் சமுத்திரக் கடையிலுள்ள தூத்துக் குடியில், "திருவாவடுதுறை யாதீன சைவப் பிரசாரகர்" என்னும் பெயருடன், வேதாந்தம் சைவ சித்தாந்தம் என்னும் இரண்டினையுங் கைக் கொண்டு வசிக்கும், பொ. முத்தைய பிள்ளை யென்பார் "ஸ்ரீமத் காசிகாநந்த சுவாமியார் கட்டுரையின் மேல் கடா" என்றொரு சிறு ஆபாசச் சுவடியினை யெழுதி, சிவநிந்தை, சிவாதார நிந்தை, நீத்தார் நிந்தை, வேதாந்த சாஸ்திர நிந்தை முதலிய நிந்தைகளை நிரம்பப் பெற்று, வெளியிட்டிருக்கின்றனர். அவரால் வெளியிடப் பெற்ற அப் புத்தகம் தன் பெயருக் குரிய கடா விஷயங்களைத் தாங்காது, விடைக் குரிய விஷயங்களையும், 4-வது பக்கத்தில், "இனியேனும் இவரும் இவர்சார்பினரும், திருமந்திரம் முதலிய திரு வாக்குகளுக்குச் சைவ சித்தாந்தப் பெரியாரிடம் பொருள் கேட்டு உண்மை யுணர்வார்களா?" என்றும், 5-வது பக்கத்தில் "தருக்க ஞானத்தில் வல்லவர் போன்று தம்பட்ட மடிக்கும் சாமியார் அறியாமைக்குக் காரணம் யாதோ?" என்றும், "இப்பொருள் கூறுதல் இவர் மதத்தினர்க்குப் பழம் பாடமே, ஜீவன் ஈஸ்வரன் என்னுஞ் சொற்களுக்கு இவர் கூறிய பொருளே பொருளென, மாயா வாதச் சார்பில்லாத வடமொழி வல்லார் முன் சாதிப்பாரா?" என்றும், 7-வது பக்கத்தில் "எத்தடிப்புப் பற்றி" என்றும், "செட்டியா ரவர்க ளெழுதியதும் பொய்யாதலின் அதற்கு இவ்வளவு சிரமப்பட வேண்டாமே. இதனானே, பொய்யை மெய் யென்று வீணச்சிரமங் கொள்ளும் புண்ணிய முடையார் சுவாமியாரும் இவர் மரபினரு மென்பது விளங்க வில்லையா?" என்றும், 9-வது பக்கத்தில் "சுவாமியாரையும் இவர் மரபினரையும் மாயா வாதிக ளென்று எந்தச் சைவர்கள் கூறினும், நாங்கள் மாயா வாதிக ளல்லர். வேதாந்திக ளென்று மட்டுஞ் சொல்லிக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோர்களே யன்றி,

சைவர்களாகிய நீங்கள் தாம் மாயா வாதிகள் என்று கூறுதல் பொருந்து மா?" என்றும், 12-வது பக்கத்தில், "சாஸ்திரங்களைக் கேட்கு முறை யிற் றக்கோரிடங் கேட் டுண்மை யுணராது, மனம் போன வாறு சொல்லு தலும் எழுதுதலும் முறையாகுமா?" என்றும், "இவர் எந்நுணிவு கொண் டெழுதினர்" என்றும், 13-வது பக்கத்தில் "சுவாமியார் தர்க்க சாஸ்திரத் தில் வல்லவர் போன்று தம்மைப் பலவிடங்களினும் வியந்து கொள்ளுகின் றனரே" என்றும், "இனியேனுங் கவனித்து அங்கீகரிப்பாரா" என்றும், "இவருக்குத் தாயுமான சுவாமிகள் மீது இத்துணைக் கோபம் வந்தமைக்குக் காரணம் என்னையோ?" என்றும், 14-வது பக்கத் தில், "தெரியாதாயின், வாதத்திற்கு வரும் போதாயினும் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்றும், "தன் நாவைக் காத்துக் கொள்ள முடி யாமல், படிப்பின் கர்வம் பற்றியா?" என்றும், "சித்தாந்த நூல்களைச் செவ்வனே தெரிந்து கொள்ளாக் குறை பற்றியா?" என்றும், 15-வது பக்கத்தில், "ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் முன்னர் பௌத்த மதத்தை வெல்லுதற் பொருட்டு ஏகான்ம வாதஞ் சாதித்து, பின்னர்த் தா மூய்ய வேண்டிச் சைவ சித்தாந்த நெறியைத் தலைக்கூடி நின்று" என்றும், 16-வது பக்கத்தில் "இவரும் இவர் சார்பினரும் ஒரு வார்த்தையாவது குற்ற மறச் சொல்ல விரும்பாது, வெற் றுரையாகப் பலவாய வார்த்தைகளைச் சொல்ல விரும்பி, ஒரு நூலையாவது கசடறக் கல்லாது, பல நூல் வல்லா ரென் றறி யாதார் புகழ, மேலெழுந்த வாரியாய், பல நூல் படித்தவ ராதலின், அது பற்றி இப் புரட்டுக் கதை கூறினாரா?" என்றும், "அந் நூலையும் அவ் வுரையினையும் முறையாய்ப் பாடங்கேட்டு நன் குணர்ந் தெழுத வேண்டும்" என்றும், "இனியேனும் படித்துச் சிவ ஞாந சுவாமிகளை பற்றிக் கூறிய குறைக்கு, மன்னிப்புக் கேட் டுய்வாரா?" என்றும், "கற்றறிந் தடங்காக் குறையினாலேயே யென்பதை மறுக்க முடியுமா?" என்றும், 17-வது பக்கத் தில் "இவர் மதத்திற்கு முதலாய ஆசிரியராய் விளங்கிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், தா மூய்தற் பொருட்டு ஆண்டா னடிமைத் திறம் பேணி, பௌத்த மதத்தை வெல்லுதற் பொருட்டு ஏகாத்ம வாதஞ் சாதித் திருக்க வும், அவ் வுண்மை யறியாது அவர்க்குப் பின் வந்த இடையாய ஆசிரியரும், கடையாய ஆசிரியரும் ஏகான்ம வாதமே ஆதி சங்கராசாரிய சுவாமிகள் கொள்கை யென்று தம்பட்ட மடித்துத் திரிவது, நுணுகி யாராயும் அறி வின்மை என்பது மறுக்க முடியுமா?" என்றும் "இனியேனும் அறிந்து கொள்ளுவாரா?" என்றும், 18-வது பக்கத்தில், "இவர் மதத்தைத் தம்மட் டில் வைத்துக் கொள்ளாது, பெரியார் கருத்தும் இதுவே யென்று அவர் கண் மீதும் தமது மதத்தை யேற்றுகின்றார். அந்தோ! இத் தீச் செயலுக் கென்ன பய னடைவரோ?" என்றும், "இப் புரட்டு முகவுரையும் வாங்கிச் சேர்த்து வெளியிட்ட சுவாமியாருக்கும் திருக் குற ளாராய்ச்சி யுண் டென்று ஒப்புதல் கூடுமோ? தாங் கற்ற நூல்களினும் தமக்கு நுணுகிய வா ராய்ச்சி யுண்டோ வில்லையோ என் றையுறச் செய்வதை விட, தம்மளவில் தா மடங்குதல் முறைமை யென்பதை யினியேனும் அறிந் தடங்குவாரா?"

என்றும், "ஷணப்பன் வீட்டுக் கோழி தானே விலங்கில் மாட்டிக் கொண்டது போன்று, யோசனை யின்றித் தாமே மாட்டிக் கொண்டார்" என்றும், "இனி யேனும் இத்தகைய குற்றங்களில் மாட்டிக் கொள்ளாது" என்றும், உள்ள வசை மொழிகளையும் தன் னகத்தே தாங்கி வந்திருத்தலின், அப் புத்தகத்திற்குக் "கடா" என்னும் பெயர் பொருத்த முடைத் தன்றாம். பின்னர், எப்பெயர் கொடுக்கின் பொருத்த முடையதாம் எனின், "வேதாந்தம் சித்தாந்தம்" என்னும் இரண்டுங் கெட்ட, பெயர் மாத்திரையாற் சைவ சித்தாந்தத்தைக் கைக் கொண்ட, "தூத்துக் குடி, பொ. முத்தைய பிள்ளையின் தூஷணைச் சுவடி" எனக் கொடுக்கின் நலமாம். அப் புத்தகத்தில் "வினு" எனப் பெயர் தந்து இருபது போலி வினுக்கள் வினவுகின்றனர். அவர் எமக்கு எழுதிய கடிதத்தில், "அறியாமை யுடையேன். உண்மை யறிய விரும்புகின்றேன்" என்று எழுதி யிருக்கின்றமையின், அறியாமையின் பாற் பட்ட வினுவாய், பின் கடாவில் அதனைக் கடந்து கடாவுகின்றமையின், அவற்று ளடங்காது, போலி வினு எனப் புதுப் பெயர் தாங்கி நின்றமை யுணர்க.

வினுவாவன:—1. வேதாந்த சாஸ்திரங்கள் முத்தித் தசையில் முப் பொருள் நித்திய மென்று கூறுகின்றன. 2. திரு மந்திரம் வேதாந்தத்தைக் கூறுமிடத்து, மகா வாக்கியத்திற்கு " முத்தியில் முப் பொருள் நித்திய மென்று கூறுகின்றது. அதன் தொடர்பு சில. 3. உபமானம் பொருள் பொருந்த வில்லை. 4. திருஷ்டாந்தம் இரு பொருளைக் கூறுகின்றது. 5. 'பொய், அநித்தியம், இல்லை, மாயை' என்பவற்றிற்கு நிலையாமை யென்பது பொருள். 6. சிவ ஞான சுவாமி யுள்ளிட்டார் வைதீக சைவ சித்தாந்திகள். 7. மாயா வாதிகள் வேதாந்திகட்கு வேறாய் ஒருவ ருளர். 8 ஞான வாசிட்டத்திற்கு முத்தியில் முப் பொருள் நித்திய மென்று கொள்க. 9. சிவ ஞான வள்ளலார் முப் பொருளை நித்திய மெனக் கொண்ட வேதாந்த சித்தாந்த சமரச சைவராவர் முத்தாத்துமாக்கட்கு முத்தித் தசையில் இரு பொரு ளுள. பெத்தாத்துமாக்கட்குப் பெத்த தசையில் முப் பொரு ளுள. 10. வாசிட்டத்தில், பாசம் நித்திய மென்று வேதாந்திகள் கொள்கின்றனர். 11. கருட பாவனையின் வாக்கியம் பொருத்த மன்று. 12. திரு மந்திரத்தைத் தேவி கோட்டை ஜெமீந்தார் கைக் கொண்டதற்காகக் கொண்டது. 13. திரு மூல நாயனுரை உண்மையாகக் குரு வென் றங்கீகரிக்கின்றோம். 14. சைவ சித்தாந்திக ளறிவிலிக ளலர். 15. உமாபதி சிவாசாரியர் சமஸ்கிருதத்தில் ஒரு நூலுஞ் செய்ய வில்லை. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் துவைத சித்தாந்தியே. 16. சிவ ஞான சுவாமிகள் "மோக்ஷத்தில் ஜீவத்வம் கெட்டுச் சிவ ரூபம் ஜீவன் ஆகின்றுன்" என்கின்றனர். 17. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அபிப்பிராயம் முப் பொருள் நித்தியமாகிய துவைத வாதமே. 18. வேதாந்திக ளனைவரும் படித்தவர்களா? 19. பசு பதி பாசத்திற்கு அந்நியமான நித்தியப் பொருள் யாது? 20 முகவுரையி லுள்ள குறள் திரிவுடையது " என்பனவாம்.

1. "தர்மிகளுக் கயிக்கியமே யன்றித் தருமங்களுக் கயிக்கிய மின்று" மென்று கூறியதனால், இருபொருள் நித்திய மென்று யா மெழுதி யிருப்ப தாகச் சூட்டுக் கோலே, யெம் மிடத்து வந்து, சரணாகதி யடைந்து கேட்கு முறையிற் கேளாக் குறையாலும், முன்னர் வேதாந்தியாயிருந்து பின்னர்ப் பலேச்சையாற் சைவ சித்தாந்தியாகிய காரணத்தாலும், எழுதி யிக் கட்டாரியாற் றுக் குண்டனர். விவகார காலத்தில் உபதேசிக்கும் போதும், வாதம் நடக்கும் போதும், பேதமாக வைத்துத் தான் உபதேசிக்கவும் வாதஞ் செய்யவும் கூடும். இரு தருமிகள் இருக்கின்றன என்று கேட்ட சிஷ்யனுக்கு, இரு தருமிகளை யநுவதித்துச் சாஸ்திரங்களா லுபதேசிக்கப்படுகின்றது. அவ்வாறே, விவகார காலத்தில் வாதம் நடக்கும் போது அநுவதித்துக் கூறியதாம். அதனை யுணராது, இரு பொருள் நித்திய மென் றுணர்ந்து றுமுகின்றார். "சிவனுக் குரிய எண் குணங்கள் சீவனுக்கு வந்து பொருந்து கின்றன" என்பதன் பொருள், மோக்ஷ காலத்திற் சீவத்துவங் கெட்டு, சிவ ரூபமாகுதலால், சிவனுக் குரிய குணங்கள், மறையாது வெளிப் படுகின்றன என்பதாம். அவ்வா றின்றி, ஜீவன் வேறு யிருப்பவன். அவன் மீது, சிவனுக் குரிய குணங்கள் கஞ்சுகம் போன்று வந்து மறைக் கின்றன என்று பொருள் கொள்ளற்க. "சாஸ்திர சித்தாந்த லேச சங் கிரகம்" என்னுங் கிரந்தத்தில் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரவர்கள் இவ்வாறே யெழுதி யிருககின்றார்கள். அக்கிரந்தம் பார்க்க அவர்க் காற்ற லின்மையின் சமஸ்கிருத ஞான முடையார்பாற் சரணாகதி யடைந்து கேட் டுணர்வாராக. உண்மைச் சித்தாந்தத்தைக் கூறுங்கால் ஒரு பொரு ளென்றும், ஏனையர்க் கறிவித்தற்கு இரு பொருள்கள், இரு தருமிகள், சிவனுக் குரிய குணங்கள் ஜீவனுக்கு வந்து பொருந்துகின்றன என்று விவகாரத்தை யநுவதித்துப் பேதமாகவும், எழுதி யிருப்பதனான் முரணின்மை யுணர்க. "ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷித ரவர்கள் கருத்தோடும் மாறுபடின், இவர் மதம் யாவர்க்குத் தான் சம்மதம்" என்று எழுதினர். கருத்தோடும் என்ற வும்மையால், இவர் கருத்தோடும், இவரைச் சார்ந்த சிவ ஞான போத முள்ளிட்ட 14 சாஸ்திரத்தினைக் கைக் கொண்டார் கருத்தோடும், மாறு படுகின்ற தென்று கருதுகின்றனர். 14. சாஸ்திரமும் முத்தியில் முப் பொரு ளுண் டென்று நூலமாகக் கூறுகின்றமையின், அதனோடு மாறுபடுதல் தேற்றமே. ஸ்ரீ அப்பய்ய தீக்ஷித ரவர்க ளியற்றிய 'பரிமளம், வேதாந்த சாஸ்திர சித்தாந்த லேச சங்கிரகம். உபக்கிரம வுபசம்மாரம்." என்பன வாதி நூல்களையும், அவர்கள் ஆசாரியராய நரசிம்ம சுவாமிகள் இயற்றிய "பேத திக்காரம்" என்னும் நூலினையும் படித்து, அதன் பின் "அவர்கள் கருத்தோடும் மாறுபா டாகாதா?" என்று வினவினரா? அவ்வா றின்றித் தம் மநம் போன வாறு ஆரூடம் பார்க்குத லழ கன்றே. அந் நூல்களைச் செவ்வனே யாராய்ந்து, அவ்வாறே மாறுபடா தறைந்தா மென் றறிக.

2. சூட்டுக் கோலிற் காண்பிக்கப் பட்ட "திரு மந்திரச் செய்யுளும் ஏனைச் செய்யுளும், 'ஜீவன் பரன் சிவன்' என்னும் மூன்று பொருளைக்

கூறுகின்றன வென்பது வெளிப்படை" யென்றும், "திருமூல நாயனூர் திரு வாக்கிற்கு மாருக ஒன்ருந் தன்மையினையே தத்துவமசி யுணர்த்துவ தென்றல் எவ்வாறு பொருந்தும்?" என்றும் வரைந்தனர். இதனுல், முத்தியில் 'சீவ சேதநம், பாசேதநம், சிவ சேதநம்' என மூன்று சேதநப் பொருள்களும், பாச மாய சடப் பொருளும், நித்தியமாய் இருந்து, 'நான்கு பொருள் நித்திய' மென்று கூறுகின்றவர் திருமூல நாயனுரென்று கருதுகின்றனர் போலும். ஸ்ரீ மூல நாதர், "வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம்" என்னும் ஷடாந்தங்களையும், சமஸ்கிருதத்தி லுள்ள 'மந்த்ர மாலிகா' என்னும் நூலினும், தமிழி லுள்ள 'திரு மந்திரம்' என்னும் நூலினுங் கூறினவ ராயிற்றே. அவ்வாறு கூறியவர் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களின் பொருளை யுணராது, வேதாந்த சாஸ்திரங்கள் மூப் பொருள், அல்லது நாற் பொருள் நித்திய மென்று கூறுகின்றன என்பரா? "அம்பத மேலைச்சொருப மாவாக்கியம், செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே." என்ற வாக்கியத்தால் ஒரு பொருளே யுள தென்றும், "திரிமலந் தீர்ந்து அவன் சிவனும். நான் என்றும் தான் என்றும் இரண் டில்லை. மல மூன்றுஞ் செற்றவர் சுத்த சிவமாவர். துரியமும் ஈசனெடு ஒன்ருக்கால் பின்னையும் வந்து பிறந்திடும். அறிவு என் வடி வென்று அறிந் திருந்தேன், ஏகமான தவம் உறு தத் துவ மசி. எல்லாம் அறிந்த அறிவினை நான் என்னில் எல்லாம் அறிந்த இறை யெனலாம். தன்னை யறிந்திடும் தத்துவ ஞானிகள். தனை மாற்றி யாற்றத் தகும் ஞாநி. தனையாய்த் திருப்பது தத்துவம்" என்பன வாதி வாக்கியங்களால் ஒரு பொருளே யுள தென்றும், கூறியிருப்பவும், அவற்றை யுணராது மூப் பொருளைக் கூறுதல் வெளிப்படை யென்றும், திரு மூலர் திரு வாக்கிற்கு மாருக வுணர்த்துவ தென்றல் எவ்வாறு பொருந்தும்? என்றும் எழுதி யிடர்ப்பட்டு, அந்நூல் கொண்டும், சூட்டுக் கோல் கூறியது கொண்டும் யாவரு முணர்ந்த பொருளை யுணராமையின் "அஞ்ஞாநம்" என்னுந் தோல்வித் தாநத்தை யடைந்தனர்.

இன்னும் 2393. "சிவமாதல் வேதாந்தம்". 2401. 'அநாதி ஜீவன் ஐம் மலமு மற்று அப்பாலாய் அநாதி யடக்கித் தனைக் கண்டு அரனைத் தன் ஆதி மலம் கெடத் தத்துவாதீதம் விஞவு நீர் பாலாதல் வேதாந்தத்து உண்மையே.' என்பன வாதி பல செய்யுட்களிலும், ஒரு பொருள் உண்டென்பதைக் கூறியிருக்கின்ருர். நீர் கெட்டு எங்ஙனம் பாலாகின்றதோ, அங்ஙனமே ஜீவத்துவங் கெட்டு, சிவ ரூபமாகிய பிரஹ்ம மாதல் வேதாந்தத்தின் சித்தாந்தமாம் என்பது கருத்தாம். பாசம் அநித்திய மென்பதற்கும், பசுத்துவம் நீங்கிச் சேதந மொன்றே முத்தியி லுள தென்பதற்கும் பிரமாணமாக எண் ணிறந்த செய்யுட்கள் திரு மந்திரத்தி லுள தென் றுணர்க.

'அக் குழையன் இவனே' என்பது போன்று பொருடரும் விட்டு விடாத விலக்கணைக்கு, 'முன்னர்ப் பாசத்தோடு கூடிப் பசுவாயிருந்தவனே

இப் பொழுது பிரமத்தோடு கூடிப் பிரமமா யிருக்கின்ரு னென்பது பொரு ளா ?' என்று வரைந்தார். அஃதோ டமையாது, திருமந்திரம். 2634-வது செய்யுளும், சிவ ஞான போதம் 11-ம். சூத்திரமும், 'ஜீவன், முத்தியில் வேருய் உள்பொரு ளொன்றே கூறுகின்றன' என்று மிகைபடக் கூறிச் சித்தாந்தப் படுத்தி, 'அஞ்ஞாநம். அதிகம்' என்னுந் தோல்வித் தானங்களை யடைந்தனர். சிவ ஞான சுவாமிகள் என்னுந் தம்பிரான் என்பார், 'சோயந் தேவதத்தன்' என்னுந் திருட்டாந்தத்தோடு திரு மந்திரத்திற் கூறிய விட்டு விடாத விலக்கணையை, தமக் குடன்பா டன் றென்று கண்டித்துத் திரு மந்திரத்தை யொரு புடை யொதுக்கி யிருப்ப, அதனை யுணராது, சாதக மாகக் கருதி வினவுகின்ருர். திருஷ்டாந்தத்தில் 'அவன் இவன்' 'அக் குழையன் இவன்' என, ஒரு பொருளே யுள்ளது. இவர் கூறும் தாஷ்டாந்தத்தில் 'பதி பசு பாசம்' என முப் பொருள்க ளுள்ளன. திருஷ்டாந்தத்தி லுள்ள பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத் தன்மைகளையும், குண்டல மாகிய விசேடணத்தையும், நீக்கி விடின், விவகார காலத்திற் பொரு ளொன்றே யாம். இவ்வாறு, தாஷ்டாந்தம் இன்மையின் பதிப் பொரு ளோடு பசுப் பொருளையும் பாசப் பொருளையும், ஒன்று சேர்க்கின் பெத்த தசையினும் முத்தித் தசையில் விசேட மின்ருய். பாசம் நாசமாயவழி. பசுத் தன்மை, பதித் தன்மையாய விசேடம் நீங்கின் சேதந மொன்றே யெஞ்சும். அதனைப் பிறர்க் குணர்த்துவான், சிவம் என்றும் பிரஹ்மம் என் றும் சாஸ்திரங்களில் வழங்கப் பெறு மெனக் கொள்க. இவ்வாறு, கொள் ளாக்கால் திருட்டாந்தத்தில், குழையோடு கூடி யிருந்த புருடன், குழை யில்லாக்கால், குழை யின்மை யென்னும் அபாவமாய விசேடணத்தோடு கூடி யிருப்பனோ ? தேவ தத்தன் பாசமாகிய அக் காலம் என்னும் விசே டணத்தை விட்டு, இக் காலமாய விசேடணத்தோடு கூடி யிருப்பனோ ? அவ்வாறு, துஷ்யது துர்ஜந நியாயத்தாற் கொள்ளினும், பாசமாய அக் கால, இக் கால, குண்டலங்களும், தேவ தத்தன் புருடனுடைய பொருள்களு மாய் இரண்டே யுள்ளன. பெத்த தசையிற் பாசத்தோடு கூட்டுற வுற்ற பசு, முத்தி தசையில் பாசத்தை விட்டால் சிவத்தோடு கூட்டுற வுறும். பாசம் நித்திய மாகலின், பாசத்தை விட்டுச் சிவத்தோடு கூட்டுற வுறல் பொருந்தாதாம். இவர், பிறண்டு பாசம் அநித்திய மெனக் கூறியவாறே பாசம் அநித்திய மெனக் கொள்ளின், பாசம் நீங்கிய வழி, பசு, பசு என் னும் பெயரைப் பெறுதாம். பாசத்தாற் கட்டுறலால் பசுவாய சேதநம் பசு என்னும் பெயரைப் பெற்றதே யன்றி, இயற்கையிற் கட்டுறற்கு முன் பசு என்னும் பெயரைப் பெற் றிலது. ஆகலின், பாசம் நீங்கிய விடத்தும், பசு சுத்த சேதந மாக விருக்கின்றமையின், சுத்த சேதநமாய சிவத்திற் கும், அதற்கும் பேத மின்மையின், அபேத மாகவே யிருக்கு மென் றுணர்க. தத்துவ மசி மகா வாக்கியம் சேதநங்கட்கு ஐக்கியத்தினைக் கூறிச், சடப் பொருட்கு அநித்தியத்தினை யறை கின்றதே யன்றிச், சடமாய பாசத்திற் கும், பசு, பதி, என்னுஞ் சேதநங்களோடு ஐக்கியத்தினைக் கூறுவதின்ருய்.

தத்துவ மசி மகா வாக்கியத் திருட்டாந்தத்தில், முப் பொரு ளின்றாகலின், சட சேதநமாய முப் பொருள் நித்தியத்துவத்தைக் கூறுவதற்கு, அவ்வாக்கியமும், அத் திருட்டாந்தமும் முழு விரோதமாம். முன்னர்ப் பாசத்தோடு கூடிப் பசுவா யிருந்தவன், வேதாந்த சாஸ்திரம், பிரஹ்ம ஞாநாசாரியாது உபதேசங்களால், பாசத்தை நசிப்பித்துத், தனது முன்னிலைமையாய பிரஹ்மமாயினன் என்றும், உண்மையில், அஃதாவது பரமார்த்தத்தில் பசு என் றொரு பொரு ளில்லை யென்று முணர்க. திரு மந்திரம், சிவ ஞாந போதம் கூறியது பேத நிலைக்கண் என்று பித் தின்றிக் கொள்க.

“ஒரு சேதநஞ் சுத்தமா யிருந்து அந்தக்காண உபாதியைக் கூடிற்றா? அசுத்தமா யிருந்து அந்தக்காண உபாதியைக் கூடிற்றா? சுத்தமா யிருந்து கூடிற் றெனின் எதற்காகக் கூடிற்று? எப்பொழுது கூடிற்று? உயிர் ஆணவ மலத்தை யநாதியே கூடியவாறு போல எனின், அது சுத்தப் பிரமமாகுமா? அநாதியே கூடிய உபாதியைத் தானே நீக்குதல் எவ்வாறு கூடும்? கூடுமாயின், முன்னரே நீக்கி யிருக்கலாமே? உபாதியைக் கூடுதலும் பிரிதலும் இயல் பெனின், பிரிந்த பின்னருங் கூடு மென்றாகி, பிரிவதற்காகச் செய்யுஞ் செயல்க ளெல்லாம் வீண் செயல்களா யன்றோ முடியும்? சைவ சித்தாந்தத்தில் ஆன்மா அநாதியே மலத்தைச் சார்ந்து பெத்தனாய் நின்று, பின்னர் குரு கிருபையால் மலத்தினின்றும் நீங்கிச் சிவத்தைச் சார்ந்து முத்தனாகு மென்று கூறுதலால், மலத்தைச் சார்ந்து நின்ற வுயிர், அதினின்றும் நீங்கிய வாறு போல, சிவத்தைச் சார்ந்து நின்ற உயிரும் அதனின்றும் நீங்காதா? நீங்குமாயின் சார்தற்காகச் செய்யுஞ் செயல்க ளெல்லாம் வீண் செயல் தானே யென்பீரேல் நன்று வினவினீர்; மல சத்திக்குக் கே டுண்டு, சிவ சத்திக்குக் கே டின்று. மல சத்தியின் கேட்டினால் மலத்தினின்றும் நீங்கிய வுயிர் சிவத்தைச் சாரும். சிவ சத்திக்குக் கே டின்மையால் சிவத்தைச் சார்ந்த வுயிர் மலத்தில் மீளுத லில்லை இது எதுபோலு மெனின், ஏரிக் கரைக்குக் கே டுண்டு. கடற் கரைக்குக் கே டின்று. ஏரியின் கரை யுடைந்தால் அங்குள்ள நீர் கடலைச் சாரும். கடற் கரைக்குக் கே டின்மையின் அதனைச் சார்ந்த நீர் ஏரிக்கு மீளுத லில்லாதது போலும் என்க. ஆதலின், இது கொண்டு நமது செயல் வீண் செய லில்லை யென்று தப்பித்துக் கொள்ள முடியுமா? எல்லாம் பொய்யா யிருக்கப் பொய்யில் இத்துணைத் தர்க்கம் எதற் கெனின், இங்ஙனம் கூறுவது சூனிய வாதமாகிய நிரீச்சுர வாதமாகு மன்றி ஆஸ்திக வாத மாகுமா?” என்றார்.

வேதாந்த சாஸ்திரத்தினைத் தக்க பெரியாரிடத்துச் சரணாகதி யடைந்து, கேட்கு முறையாற் கேட்டுச் சங்கிக்காது, தம் மநம் போனவாறு “சுத்தப் பிரமமா யிருந்து உபாதியைக் கூடிற்றா? அசுத்தப் பிரமமா யிருந்து உபாதியைக் கூடிற்றா?” என்று சங்கிக்கின்றார். இவர் மதத்திற் கூறும் விஞ்ஞாந கலர் முன்னர் சுத்தமாய பதியா யிருந்து, பின்னர் ஆணவ மலத்தை யடைந்தனரா? அன்றா? சந்திரன் சுத்தனா யிருந்து

"இந்நுவினை யநாதியடைந் ததை மூழுது மறையாம விந்நு தன்ருல், அந்நிறனை யொளிர்வித்துக் கொள்களங்க மென" என்று களங்கத்தினைப் பொருந்தினளு ? இன்ரு ? பொருந்தின ரொனின் மல நீக்கமும், களங்க நீக்கமும், உண்டாய விடத்து, மலமுங் களங்கமும் அத்தியந்தம் நாசமாயினமையால், மீண்டும் அவர்களை வந்தடைதற்கு மலமுங் களங்கமு மின்மையா லின்ரும். அவ்வாறே, அநாதியாகிய அஞ்ஞாநத்தாற் பந்தப் பட்ட ஆத்மா, குருபதேசாதிகளால் அஞ்ஞாந நாசஞ் செய்துழி, மீண்டும் பந்தப் படுத்தற்கு அஞ்ஞாநமாகிய திரவிய மின்மையின், மீண்டும் பந்த முருது சுத்தமா யிருக்கு மென் றுணர்க.

"எதற்காகக் கூடிற்று ? எப்பொழுது கூடிற்று ?" என்று வினவுதல் சாஸ்திரங் கற் றறியாத் தன்மை யாலாம். கற்பித அநாதியாக அஞ்ஞாந முண் டென் றுணர்ந் திருப்பின், அதற்குப் பிரதி யோகியா யுள்ள, 'ஆதி' யென்னும் சொல்லின் பரியாயமாய 'எப்பொழுது' என்னுஞ் சொல்லைக் கூருர். அநாதியே அஞ்ஞாந முண் டென் றெமக்கும் எம்மவருக்கும், அநாதியே மல முண் டென்பது இவர்க்கும் ஒப்ப முடிந்ததாம். 'எதற்காக' என்பது பயனை யுணர்த்துவதாம். கயிற்றிற் பாம்பையும், இளிஞ்சலில் வெள்ளியையும், கானலிற் சலத்தையும், காண்பது பிராந்தியால், கடித்தலா லுண்டாம் பய நிவிர்த்தி, திரவியத்தாற் சுகமாய்ச் சீவித்தல், தாக விடாய் நிவிர்த்தித்தல், முதலிய பிரயோஜநத்தைக் கருதி யாம். அவ்வாறே, சேதநம் அநாதியாய அஞ்ஞாநத்தைப் பொருந்திய வுடன், துக்க ரூபமான சம்சாரமான பிரயோஜந முண்டாயிற் றென்றும், அத்துக்க ரூப சம்சாரத்தை நிவிர்த்திப்பான் குருவை யடைந்து, காரியத்துட னஞ்ஞாநத்தினை யறவே யொழித்து, தனது யதார்த்தப் பிரஹ்ம ரூபமா மென் றறிக. அவ்வா றன்ருயின், முன்னரே சிவ திரு வடிமி லிருந்த 'விஞ்ஞாந கலர், பிரளயா கலர், சகலர்' என்னும் ஆன்மாக்களும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும், முறையே ஆணவ மலத்தையும், ஆணவ கார்மிக மலங்களையும், ஆணவ கார்மிக மாயிய மலங்களையும் அடைய வேண்டிய தின்ரும். விஞ்ஞாந கலர்க்குக் குரவ னின்றித் தாமே யறியுந் தன்மையும் பொருந்தாதாம்.

"சிவ சத்திக்குக் கே டின்று. உயிர் சிவத்தைச் சாரும். சிவ சத்திக்குக் கே டின்மையால் சிவத்தைச் சார்ந்த வுயிர் மலத்தில் மீளுத லில்லை." என்று கூறுகின் றமையின், சிவத்தைப் பசு அடைகின்ற தென்றும், பதியினிடத்துச் சத்தி யொன் றிருத்தலின், அதற்கு நாச மின்மையின், பதியை யடைந்த பசு மீளா தென்றும், பதியிடத் துள்ள சத்தி நாச மாயின் பசு மீளு மென்றும், பதி யிடத்துப் பசு அடைதற்குப், பசுவிடத் துள்ள மூல மலமாகிய அஞ்ஞாநப் பொரு ளெனச் சிவ ஞாந சாமியார் கூறும் மல சத்தியின் நாசமே காரண மென்றும், பதி தன்னிடத்து வந்த பசுவை, யமனைக் காலா லுதைத்துத் தள்ளி யாங்குத் தள்ளா திருத்தற்கும், பசு, பசுபதியின் காலை விட்டு நீங்கே னெனக் கெட்டியாய்ப் பிடித் திறுகப் பற்றிக் கொள்ளற்கும், பதியிடத்துள்ள சத்தியே காரண மென்றும், அச்சத்தி

நாச மாகா திருத்தற்குக் காரண மென்னை யெனின், நாச மில்லா அநாதி பசுவை யாசரித்த பாச சத்தி நாச முறுதல் போல், நாச மில்லா அநாதி பதியை ஆசரித்த, பதி சத்தி நாச முறா தென்பதே போதிய காரண மென்றும் விளங்குகின்றது. அநாதி பசுவை யாசரித்த பாச சத்தி, நாச மடைவது போல் அநாதி பதியை யாசரித்த பதி சத்தியும் என் நாச முறுது? திருட்டாந்தங் கூறிய ஏரிக் கரையும், கடற் கரையும், மிகப் பொருத்தமேயாம். ஏரிக் கரையாய மண், நீரால் அழிவுறுங்கால், சமுத் திரத்துள் அடைவது போன்று, குருவால் பசுவிடத் துள்ள பாச மழியுங் கால், சமுத்திர ஸ்தாநமாய சிவனைப் பசுவிடத் துள்ள பாச மடையும். அடையவே " பதி யணுகில் பசு பாசம் நில்லா", " பதியினைச் சென்றணு காப் பசு பாசம்" என்னுந் திரு மந்திரச் செய்யுட்கு முரணும். சமுத்திரத் திற்குக் கரை யுண் டென்று, ஆமைப் பால், ஆமை ரோமம், மலடி மகன், முயற் கோடு, கந்தருவப் பட்டணம், முதலியன போல் கல்லாரை யேமாற்ற வல்ல இவர், கைக் கொண்டனர் போலும்.

பாரவாரே(அ)ப்ரணீதி — பாராவாரஃ கரை யில்லா தது.

பாதாலம் ஸிந்து பாஷீ பார்ஹரபாரஸீரம் ஸமெளஷிரஃ பாராவார ஸமுத்ராக்ஷ ஸ்ரீரஸ்யாஸா நலாக்ஷா தஷா ।
ஆயிஸ்யாயிஜராவாரா ஹாத யதி ஷேஷம் நிஜம் வாணுவி ஸ்ரீ க்ருஷ்ணத்ரவஸாயநம் ரவஸ ரேர ஸஞ்சிதெந்யஃ கிஞெத்ய தைத்யெஃ ॥

பாரவாரவெஸ்தி — பாராவாரஃ — கரை யற்றது.

ஸதரோஸ்ஸ தரோஷதபர பாராவாரஸ்ய யஸ்ய ஊரிவோ ஊவ ஜதி ஸரிவ்யவொமியெ வஸஹூஷ யகேஷு

ஸமுத்ரோழப்திரகூபாரஃ கவிஷ்யேநா கஃ — வ்யூஷ்ய பாரெ கவெஸ்தி — அகூபாரஃ — கரை யற்றது. (அமரகோசம்)

ந வித்யதெ பாரஃ அவெஸ்தி — அபாரஃ கரை யற்றது.

ஸ்த்ராவொ த்ராஸிஸிஷீவாநாம் ஸ்ரத்தா மணஸ்த்ர வர்ஷீவாநாம் । அபாரபாரஸ்ய நிம்யஸ்ய பஸ்ராஷவாஜ்மொ வக்தோவாஜ்மொ ஸஙீதஃ ॥

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர், விள்ளா வறிஞரது வேண் டாரே—தள்ளாக், கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக், கரைகாப் புளதோ கடல். (நன்னெறி) என்பன வாதிப் பிரமாணங்களாலும் கடற்குக் கரை யின்றென் றுணர்க.

தமது குல குரு வென்று வேதாந்தத்திற்குஞ் சைவ சித்தாந்தத்திற்கும், சமரசப் படுத்துபவராக இவர் கொண்டாடும் தாயுமான சுவாமிகள் " ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ ?" "உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி யொலிக்கின்ற கடலேயிவ் வுலகஞ் சூழக், கரையுமின்றி யுன்னை வைத்தா ரியாரே யென்பேன்", என்று கூறிய செய்யுட்களையேனு முணர்ந்து திட்டக் கல மெடுத்தனரா? குரவரினுங் கூரிய புத்தியுடையவ ராகலின், குரவர் கூற்றுக்கு மாறுய்க் கடற்குக் கரை யுண்டென்று கரைந்தார். குரவருக்கு மாறுய்க் கூறுவதில், பிரயோஜநங் கருதாது கூறுவரோ ? உள்ளக் கிடக்கையாய், சூக்குமப் பிரயோஜந மொன்றுடைத்தா யுள தென வுணர்ந்தே யித் திருட்டாந்தங் கூறின ரென்று, திருட்டாந்தமே விளக்குகின்றது. அஃதென் னெனின், தாயுமான சுவாமிகள் கூறிய கூற்றுப்படி, கடற்குக் கரை யின்மை போல், பதிக்குச் சத்தி யின்மையேயாம். சத்தி யில்லா தொழியவே, பதி சுத்த னென்றுகி, பசு, பாசத்தை யறவே யழித் தொழிந்து, சுத்த னென்னும் பெயர் பெற்று, 'பதி பசு' என்னும் இரு சுத்த சேதநமும் தம்மில் வேற்றுமையின்றி, நீர் நீரேயாய், பொன் பொன்னேயாய், பால் பாலேயாய், "மதாரந்தருஞ் சாத்தன் வன்கோயில் முன்னே, சதுரங்கமா வலமாத்தங்கும் குதிரை கரி தேர் ஆள் எனும் பெயரும், செப்பிய பேர் கொள் உருவும் நேராது பொய் யென்று நீக்கியே, தேருமிடத்து உற்றிடும் முக்காலத்தும் உள்ள மண்ணே, மற்று எல்லாம் வெற்ற வெறும் பொய்யாய் விடும்," என்பது போல் நானா வுருவங்களாய மண், மண்ணேயாய் இருக்குமாறு போல, இருக்கு மென் றுணர்க.

இவர் கருத்துப்படி கொள்ளினும், கடல் பொங்கிய காலத்து, ஏரியை வந்து அடையுமாறு போல, பதியைச் சார்ந்த பசுவும், பதி சத்தி கடந்து, மீண்டும் பாசத்தாற் கட் டுண்டு, 'அநாதி பெத்தன்' என்னும் முன்னைப் பெயரையே பெறு மென் றுணர்க. 'ஆதலின் இது கொண்டு' என்னும் சுட்டுக்குப் பொருள் யாது ?

"எல்லாம் பொய்யா யிருக்க பொய்யி லித்துணைத் தர்க்கம் எதற் கெனின்," என்கின்றார். பொய்யின்கண்ணே தர்க்கஞ் செய்வதே யன்றி, உண்மையினிடத்துத் தர்க்கஞ் செய்வ தின்றும். உண்மைப் பொருளை யுபதேசிக்குங்கால், தக்ஷிண மூர்த்தி சிந் முத்திரையுட னறிவித் தாங்கு, மௌநமா யிருந் தறிவிப்ப தன்றித் தர்க்கங்க ளொன்று மின்றும். இவர் போன்ற பேதவாதிகளது பேதை மதியைப் பிளத்தற்குத் தர்க்கம் பொய்ப் பொருளில் செய்ய வேண்டுவ தாவசிகமாம்.

" இங்ஙனங் கூறுவது சூனிய வாதமாகிய நிரீச்சுர வாத மாகு மன்றி, ஆஸ்திக வாத மாகுமா? " என்கின்றார். சூநிய மென்பது இல்லை யென்றும். எதனை இல்லை யென்று சொல்பவர் நிரீச்சுர வாதி யாவர் ? ஜகத்தை யில்லை யென்று சொல்பவர்கள் நிரீச்சுர வாதி யாகார். ஈச்வரனை யங்கீக

ரிக்காத சாங்கிய மதத்தர் நிரீச்சுர வாதியாய் நாஸ்திக ராகா திருக்குங்கால், ஏனையர் நாஸ்திக ராவ தெவ்வாறும் ? ஜகத்தைப் பொய் யென்பவர் சூநிய வாதியும், நிரீச்சுர வாதியும், நாஸ்திகரும் ஆவர் என்பரேல், இவரும் மல சத்திக்குக் கே டுண் டென்று பறை சாற்றுகின்றமையின், சூநிய வாதியும், ருத்திரர் முதலியோர்க்கு மல முண் டென்று கூறி அவரை ஈஸ்வரனுகக் கொள்ளாமையின், நிரீச்சுர வாதியும், வேதத்தை யிவரு மிவரினத்தவரும் பழிக்கின்றமையின், நாஸ்திகரும், ஆகி, முத் தோடங்களை யுடையவராவர்.

" அசுத்தமா யிருந்து கூடிற் றெனின் அப்பொழுதும் நமது பிரமம் சுத்தப் பிரம மாகாதே. 'ஊனுய் உயிரானுய். உணர்வு மவனே யுயிரு மவனே, சிவன்ருன் பல பல சீவனுமாகி.' என்பன வாதி திரு வாக்குகளால், சிவனே யுயிரா யிற்று, உலக மாயிற்று என்ன லாகாதோ வெனின், ஆகாது. என்னை ? எல்லாப் பொருள்களோடுங் கலந்து நிற்குங் கலப்புத் தன்மையால், அதுவ துவாய் நிற்கும் நிலையும், பொருட்டன்மையால் அவற்றின் வேருய் நிற்கும் நிலையும் என, இரு நிலைகள் சிவபெருமானுக் குண்டு. அவற்றுள் அதுவதுவாய் நிற்கும் நிலைபற்றி அவ்வா றருளிச் செய்தன ராசிரிய ரென்க. " என்ருர்.

சேதநம் உபாதியோடு கூடியபின் அசுத்த முற்றிருக்க, அதனுல் சீவனென்னும் பெயர்வந்து பொருந்துகின்றது. மீண்டும் முன் கூடிய அஞ்ஞாநமாய வுபாதியைப் பிஷ்ட பேஷண நியாயம் போன்று, கூடுவ தெற்றுக்கு? சிவம் சீவனுயும், ஜெகத்தாயும் ஆனதற்குச் சில செய்யுட்களைக் காட்டினர். அச் சிவன், அசுத்த சிவனு யிருந்து, பின் சீவனுஞ் செகத்துமாகி ஈரசுத்த முற்றன னென்று கருது கின்றனர் போலும் "ஈஸ்வரனுக்குக் கலப்புத்தன்மை யென்றும், பொருட் டன்மை யென்றும், இரு தன்மைக ளுள" என்கின்ருர். ஈஸ்வரன் திரவியமா? குணமா ? தொழிலா ? அல்லது ஈஸ்வரனிடத்து கலப்பாகிய தொழிலும், பொருளும் இருக்கின்றனவா ? ஈஸ்வரன் திரவியமாயின், அவனிடத்து வேறு ஒரு திரவியம் இருக்க வேண்டுவ தின்ருரம். திரவியமாகிய தாமே தம்மிடத் திருக்கின்ற தெனின், ஆன்மாசிரய தோஷமாம் ஈஸ்வரன் 'இச்சை ஞாநம்' யத்தநம், என்னும் மூன்றையே யுடைய னென்றும், நிஷ்கிரிய னென்றும், கூறுகின்றமையின், 'கலப்பு' என்னும் தொழிலு மின்ருரம். ஈஸ்வரன் குணரூபமும், கர்மரூபமும் அன்ருவன் குணமும், கருமமும் சொரூபமாயின், குடத்தை யாசரித்துக் குணமுந் தொழிலு மிருப்பன போன்று, ஈஸ்வரன் பரதந்திரனுய், ஜீவான்மாவை யாசரித்து இருப்ப னென் றுணர்க. ஆயின், அச் செய்யுட்கள் சுத்த சிவனே அஞ்ஞாந வுபாதியால், ஜீவனுகவும், விவர்த்தோபாதாநத்தால் ஜகத்தாகவும் ஆயின னென்று கூறுகின்றன. அதுவதுவாய் நிற்கு நிலைபற்றி யாசிரிய ரருளின ரென்று இவர்க்கு யாவர் கூறினர்? ஆருடத் தா லறிந்தனரா ? உபக்கிரம உபசம்மாராதி லிங்க மின்றி யொரு நூலின் கருத்து விளங்குங் கொல்லோ ?

"இனியேனும், இவரும் இவர் சார்பினரும் திருமந்திரம் முதலிய திருவாக்குக்களுக்குச் சைவ சித்தாந்தப் பெரியாரிடம் பொருள் கேட்டுண்மை யுணர்வார்களா?" என்கின்றார். ஆறந்தங் கூறிய திருமந்திரத்திற்கு, ஒரு மதமு மோராப் புறமதத்தராய இவரும் இவர் சார்பினரும் எங்ஙனமுரியராவர்? அதிற் கூறியுள்ள வேதாந்தத்திற்கும், யோகாந்தத்திற்கும் இவர்கள் எக்குரவரை யடைந்து பொருளுணர்ந்தனர்? வேதாந்தத்தைக் கூறும் பாகத்தி லுள்ள செய்யுட்கட்குப் பொருளை இவரை, யாமும் எம்மவரும் கேட்ப தெற்றிற்கு? இனியேனும், இவரும் இவர் மதத்தினரும் திருமந்திரத்தைத் தமது நூலென்று மறந்துங் கையாடாது, ஷடந்த வேத்தாக்களிடத்துச் சமித் பாணியாகச் சரணுகதி யடைந்து, அதன் பொருளைக்கேட்கு மாற்றாற் கேட்டு, அவர்கள் விளக்கு மாற்றால் விளக்கிய வாறே யுணர்ந்து, அவ்வழி யொழுகுவாராக.

முத்தித் தசையில் ஒரு பொருளே யுண்மைப் பொருளென்று, கூறியிருப்பவும், "முத்தி தசையி லிரு பொருளுண்டென்று கூறியதனோடு முரணுகாதா?" என்று கூறுகின்றார். இது வேதாந்த சித்தாந்த முணராது கூறியதாம். "மாணுக்கர்கட் கறிவுறுத்தும் பொருளுண்மையா?" என்கின்றார். மாணுக்கர்களது சொரூபமாயுள்ள பொருள் உண்மையேயன்றி, அறிவுறுத்தல் உண்மை யன்றாம். இதனை "பிணஞ்சுடு தடியென்ன வென்னைக் கொண்டே பெரும்பற்றை யெல்லா மறச்சாடி, அணைந்த வென்னையு மப்படி யீறில்போ தத்தில்விட் டநுபவத் திருந்தாண்டி" என்னுஞ் செய்யுளானும், தேற்றாங் கொட்டை முதலிய திருட்டாந்தங்களானு முணர்க.

"பொய்யை யுபதேசித்தற்கு ஆசிரியரும் வேண்டுமோ?" என்கின்றார். பொய்யை யுபதேசித்தற்கு ஆசிரியர் வேண்டுவ தின்றென்பது யாவருக்கு முடன்பாடேயாம். மெய்ப் பொருளை யுபதேசித்தற்கு நல்லாசிரியர் வேண்டுமாகலின், மாணுக்கரது சொரூப மெய்யே யன்றி, கருடபாவனை, சொப்பந ஸ்திரீயின் சேர்க்கை, தாரு தாம்பிராதிகளில் ஈப்பவா பாவனை போன்று, உபதேசம் உண்மை யன்றாம். இவை யெல்லாம் வேதாந்த சாஸ்திரத்தை நல்லாசிரிய ரிடத்துப் பாடங் கேளாது, மேலெழுந்த வாரியாய்ப் படித்த நூல வறிவுடையோ ராசங்கைகளாம்.

முத்தியி லொரு பொருளே யிருக்குங்கால், அநுபவித்த லென்னும் விவகார மின்மையின், கரும கருத்துரு தோஷமும், ஆர்மாசிரய தோஷமு மிலவாம். தான் மாத்திரமா யிருக்குங்கால், பொரு ளின்மை யாகிய சூநியமு மன்றாம். முத்தியில் மூப் பொருளுள்ளார்க்கே, அநுபவித்தல் பொருந்துமே யன்றிக் "கைவல்யம்" என்னும் தனிமையாக வொரு பொரு ளிருத்தற்கண் அநுபவ மின்றாம். மண்ணை வாரிப் போட்டுக் கொண்ட கதை, ஒருவனு யிருத்தற்கண், செய்வித்தல் இல தென்பதற்கு மாத்திர முவமமாகக் கூறியதே யன்றி, சுவகத பேதமாகக் கூறிய தன்றாம்.

"நுணுகிய ஆராய்ச்சி யின்மையாற் கூறினர்" என்றார், இன்னதற்குத் திருட்டாந்தங் கூறிய தென்று, உணரு முரனிலா விவர்தாமா, பிறர் மீது நுணுகியவாராய்ச்சி யின் றென்று கூறுபவர்? ஆரிய மொழி யின் வாசனை யற்பமேனு மில்லார்க்கு, உவமானத்தி னிலக்கண மெங்ஙனம் விள்ளும்?

"சாமியார் அறியாமைக்குக் காரணம் யாதோ?" என்கின்றார். தலை, மநம், கை என்னும் மூன்றுஞ் சடமாயிற்றே. சடப் பொருள் செய்தலை யுஞ் செய்வித்தலையு மெங்ஙனஞ் செய்யும்? சடமாய வூசியைச் சடமாய காந்தம் சேட்டிக்கு மாறு, சடமாய மநம் சடமாய கையைச் சேட்டிக்கச் செய்ததோ? சேதநப் பொருளாய பசுவும், பதியுஞ் செய்தற்குஞ் செய் வித்தற்கும் வேண்டாவோ? அங்ஙனமாயின், பந்த மோக்ஷங்களைக் கை யே யுறு மன்றி, பாசமாய மநமும், சேதநமாய பசுவு முறுவாம். உறு தொழியவே, பதியும் பசுவும், என் றென்றைக்கும் ஐக்கியமாய் உள தெனக் கூறும் வேதாந்தமே, நிலவுறு மென் றுணர்க. இவ்வாருய தோடங்கள் வரு மென் றுணராது தூல வறிவாற் றிருட்டாந்தத்தை விளக்கப் புகுந்த இவர் சூக்ஷ்ம அறிவுடைய பிறர் மீது அறியாமை கூறி, தமது அறியா மையை வெளிப்படுத்திக் கொண்டனர்.

3. வேதாந்த சாஸ்திரங்களில் ஆநந்தத்திற்கு ஆநந்தத்தை யுவமை கூறியதை யுணராது, ஆநந்தமாய பொருட்குச் லைசயோக குணமாய கலப்பை யுவமையாக வுரைத்திருக்கின்ற தென்று மருண் டெழுதிய படலக்கா ரர்க்கு, "வேதாந்த சாஸ்திரத்தைத் திரித் துணர்ந்தாங்கே, நுமது நூலிற் கூறிய குலால திருட்டாந்தத்தையுந் திரித் துணர்ந்து கொள்ளுதிர்" என்று விடை யிறுத்ததாம். குலால திருட்டாந்தம், பதி நிமித்த காரண மாவதற் கென்பதனை யாவரு முணர்வர். சூட்டுக் கோலிற் காட்டிய விஷயங்க ளைப் பார்க்கும் படிப் பிலாதவர்தாமா, "மனம் போனவாறு கூறுதல் முறை யாகுமா" என் றெழுதுபவர். "இவ்வாறு கொள்ளுகின்றன ரென்பதை யெவ்வாறு தெரிந்தனர்?" என்கின்றார். படலக்காரர், வேதாந்த நூலிற் கூறிய திருட்டாந்தத்தை மாறுகொளக் கூறினமையின், அது கொண்டு தெரிந்தா மென் றுணர்க. 'குயவன்' திருட்டாந்தத்தில் கூறியன, தமக்கு விரோத மெனக் கருதி, "ஒரே சேதநத்திற்கு உவமை காட்டிய வொரே ஸ்திரீயும், வியாபகமாயும், பேரறிவுடையவளாயும், அசரீரியாயு முள்ளா ளென்று கொள்வாரா? அல்லது, இவர் பிரமமாகிய வொரே சேதநம் பரிச் சின்னமாயும், கிஞ்சிக்ஞத்துவமாயும், சரீரியாயும், உள தென்று ஒப்புக் கொள்வாரா?" என்று எதிர் வினவை மாறு கொள வினவியவர், வேதாந்த சாஸ்திரத்தும், சூட்டுக்கோ லிடத்தும் உள்ள திருட்டாந்தங்களை, வேண்டு மளவு திருட்டாந்தமாகப் பொருத்தாது, தம் மநம் போனவா றெழுதி அக் கூற்றும் கற்றார் பார்த்துக் காமுறும்படி யன்றி, கல்லாருங் கண்டு பொருண் முரணெனக் கூறும்படி, யிடருறுவ தெற்றுக்கு? "ஊழிற் பெரு

வலி யாவுள யாதொன்று, சூழினுந் தான்முந் துறும்" என்னும் பெரியார் வாக்கின்படி போகூழ்வலி யிவரைப் பிடர்பிடித் துந்திய தென் றுணர்க.

"இப் பொருள் கூறுதல் இவர் மதத்தினர்க்குப் பழம் பாடமே. ஜீவன், ஈஶ்வரன் என்னுஞ் சொற்களுக்கு, இவர் கூறிய பொருளே பொருளென மாயா வாதச் சார் பில்லாத வடமொழி வல்லார் முன் சாதிப்பார்?" என்கின்றார். பழம் பாடத்தைக் கூறுதல் தவ றென்றும், முற் பாடங்களை மாற்றி, யெண்ணிலாக் கற்பனைக ணிறைந்த புதுப் பாடங்களைக் கூறுதல் சால்புடைத் தென்றுங் கருதுகின்றனர் போலும். வேதத்தின்கண் எவ்வாறெழுத்துக்க ளுள்ளனவோ, அவ்வாறே சிருட்டியின் ஆரம்பத்தில், ஈஶ்வரன் பழம் பாடமாகவே யொப்பிக்கின்றனனே யன்றி, யிவர் போன்று புதுப் பாடங்களை யொப்பிவிக்க வில்லை. அப் பழம் பாடங்களை, பிரஃமமா முதல் யாவருங் கேட்டு, அவ்வாறே தமது மாணுக்கர்கட்கும் பழம் பாடங்களையே கூறுகின்றனர். இதனாற் றான் வேதத்திற்கு அநாதி யத்தியயந பரம்பரையா லறையுந் தன்மை யென்னும் பழம்பாடத் தன்மை வந்து பொருந்தியது. இவ்வாறே, ஈஶ்வரன் குருவாகவும், ரிஷி முனிவராகவும் அவதரித்து, ஜீவர்கள் மோக்ஷத்தை யடையும் பொருட்டுக் கருணையாற் கழறிய பல சாஸ்திரங்களாய அத்யாத்ம வித்தைகளை, அவர்பாற் கேட்டு, கேட்டவாறே தம் தம் மாணுக்கர்கட்குப் பழம் பாடமாகக் கூறி வருகின்றார்கள். இதனாற் றான் வேத மொழித் தொழிந்த சாஸ்திரங்கட்கு ஆதி யத்தியயந பரம்பரையா லறையுந் தன்மை யென்னும் பழம் பாடத்தன்மை வந்து பொருந்தியது. இதனால், ஈஶ்வரனும், எம்மவரும், யாமும் வேதம் முதலிய நூற்களி லுள்ள சொற்களையும், அவற்றின் பொருள்களையும், உள்ளவாறே மாணுக்கர்கட்கு மேலையர்க்கும் கூறி வருகின்றமையின், பழம் பாடங் கூறுவோ ராகின்றோம். அவ்வா றின்றி, ஈஶ்வரன் கூறிய நூல்களையும் அவற்றின் வழி நூல்களையும், உள்ளபடி பிறர்க்கும் மாணுக்கர்கட்கும் இவரும் இவர் மதத்தினருங் கூறாது, பொருள் பொருத்த மின் றென்று, அவத் தவ விசேடத்தால், தோற்று மிடங்களில் பதி வாக் கென்றும் பெரியார் வாக் கென்றும் கருதாது, அஞ்சா நெஞ்சினராய், நூற்களையுஞ் செய்யுட்களையுஞ் சொற்களையுந் திரித்து, புதுப் பாடமும் புதுப் பொருளுங் கற்பித்துக் கூறுதலின், இவரும இவர் சார்பினரும் புதுப் பாடங் கூறுபவரே யன்றி, பழம் பாடங் கூறுபவ ராகார். ஆகார். புதுப் பாடங் கூறுபவ ராயினமையா னன்றே, வீர சைவர்களுக் குரிய திரு வாசக திரு மந்திரத்தையும், வேதாந்திகளாய எம்மவர்க் குரிய தேவாரத்தையும், ஏனையர்க் குரிய பாரதம், இராமாயணம், பிரபுலிங்க லீலை, திரு விளையாடல், பெரிய புராணம், திருக் குறள் என்பனவாதி நூல்களி லுள்ள செய்யுட்களையுங் கோறல் செய்தும், புன் மொழிப் புதுப்பாக்களைப் புகுத்தியும், முன் மொழி மாற்றித் தம் மொழி புகுத்தியும், முன் னசை யொழித்துத் தம் மசை புகுத்தியும், முன் னடை யொழித்துத் தம் மடை புகுத்தியும், முன் னடை யொழித்துத் தந் நடை புகுத்தியும், இவ்வாறு பல மாறுபாடு செய்தனர். இஃது உலகறிந்த வுண்மையே.

வடமொழிக்கு, "மாயா வாதச் சார்பில்லாத" என்று விசேடங் கொடுத்தனரே, இதனால் வடமொழி மாயா வாதச் சார்புடைய தொன் றென்றும், மாயா வாதச் சார் பில்லாத வடமொழி யொன் றென்றும்,அவ் வாறே, மாயா வாதச் சார்புடைய தென்மொழி யென்றும், மாயா வாதச் சார் பில்லாத தென்மொழி யென்றும், இரு மொழியுண் டென்று விளங்கு கின்றது. மொழித் தன்மையான் வரைந்த மொழி யொன்றே யன்றி, மாயா வாத வடமொழி, அஃதின்றிய வடமொழி யென்றும், மாயா வாதத் தென்மொழி, அஃதின்றிய தென்மொழி யென்றும், மொழியின் கண்ணேனும், அதற் குறுப்பாகிய எழுத்தின்கண்ணேனும் பேத கற்பனை யின்றாம். மாயா வாதச் சார்புடைய சாங்கிய மதக்கொள்கை யுடைய வட மொழி வல்லார் முன்னே, யாங்கூறிய பொருளே ஜீவேஸ்வரர்களுக்குப் பொருளெனச் சாதிக்குங்கால், எனையரிடத்துச் சாதித்தற் கியா தைய முளது? எமது மத சித்தாந்தப்படி ஜீவேஸ்வரர்களுக் கிதுவே பொரு ளென, எந்த வடமொழி வல்லா ரீண்டுவரினுஞ் சாதித்தற்குத் தயாரா யிருக்கின்றோம் என் றுணர்க. வடமொழி வல்லார் முன் சாதிப்பார் என் றமையானே, தமக்கு 'ஜீவேஸ்வரன்' என்னுஞ் சொற்குப் பொருள் விளங்க வில்லை யென்றும், வேதாந்திக ளுபதேசிக்கினும், கவர்ந்து கொள்ளற் குள் ளத்து வன்மை யின் றென்றும், அநதிகாரியாய தம்மை யொழித்து, அதி கார புருடராய வடமொழி வல்லாரிடத்துச் சாதிப்பீர்க ளென்றும், அவ் விஷயத்தைக் கடாவுதற்கு அதிகாரம் பெறாமையின், தாம் அகடா வென் றும் விளக்கினர். இவ்வாறு, உணரு மாணிலா விவர் கடாவுதற் கெங் ஙன முரியவராவர்? 'சார்ந்த வண்ணஞ் சார்தல்' என்னும் 'தொழில் ரூப மே, பசுவின் சொரூபம்' என்றும், சேதனம் பசுவின் சொரூப மன் றென்றும், இவரு மிவ ரினத்தவரும் எம்மவர் முன் வந்து எனைய சாஸ் திரங்கட்கு மா றுறுதி கூறுதற் காற்ற லுடையரா?

4. தூல திருஷ்டாந்தமாக, பிரமசாரி முதலியோர், ஒருவரா யிருப்ப தே யானந்த மடைதற்குக் காரண மென்று கூறி யிருக்க, அவ்வளவில் திரு ஷ்டாந்தத்தைக் கொள்ளாது, தியாதாவும், தியேயனும் உளராதலின், இரு பொருள் சித்திக்கின்ற தென்கின்றார். இவ்வாறு சூக்ஷ்மமாகப் பேத கற்பனை செய்தவர், தியாதா சரீரமும் இடமு மின்றித் தியானிப்ப தின் றாகலின், தூல சூக்ஷ்ம சரீரங்களும், பூமியாகிய இடமு மிருத்தலின், ஐந்து பொருளுண் டென்றாவது, அல்லது,மூன்றையும் பாசமாகக் கொண் டு முப் பொருளுண் டென்றாவது என் கூறவில்லை? அவ்வாறே படலக் காரர் கூறிய திருட்டாந்தத்தில், ஸ்திரீ, புருஷர், ஈஸ்வரன், தூல சூக்ஷ்ம சரீரங்கள், இடம், கலப்பாகிய தொழில், அதனாலுண்டா மானந்தம், என எட்டுப் பதார்த்தங்கள் உள வென்று என் அவர்மீ திவர் கடாவ வில் லை? அவ்வாறே, தாஷ்டாந்தத்தில், ஜீவன், ஈஸ்வரன், திருவடி, அயுத சித்த சம்யோகமாகிய அத்துவித சம்பந்தம், ஜீவனது மூல ஆணவ மலம், மனம், கைலாயமாய விடம், சிவ சத்தி ஆக எட்டுப் பொருளு முன்

பொரு ளென்று படலக்காரர்க்கும், ஏனைச் சைவ சித்தாந்திகட்கும் விளக்கமா யுபதேசித்து, அவர்கட் குள்ள, முப் பொருள் நித்திய மென்னு மயலைப் போக்காத தேனோ? திருட்டாந்த தாட்டாந்தப்படியே முத்தியில் எண் பொருள் சித்திக்க, இதனைக் கொண்டு 'பதி பசு' என்னும் இரண்டே நித்தியம், பாசம் முத்தாத்மாக்கட்கு அநித்திய மென்று, தாங் கொண்டிருக்கு மயலை நீக்கிக் கொள்ளாத தேனோ? இவ்வாறாய தோடங்க ளியாவும், தம்மீது வரு மென்று கருதியிருப்பாராயின், திருட்டாந்தத்தைக் கூறிய அளவிற் கொண்டிருப்பர். அளவு கடந்து சென்றமையின் 'அதிகம்' என்னுந் தோல்வித் தானத்தை யடைந்தனர். கருத் தறியாது இவர் விகற்பித்துக் கூறினமையின் 'பிரதிக்ஞா சந்நியாசம்' என்னுந் தோல்வித்தானத்தை யா மடையாது, இவர் 'அஞ்ஞாநம்' என்னுந் தோல்வித்தானத்தை யடைந்தனர்.

5. கந்த ரநுபூதி, சிவானந்த மாலை, திரு வாசகம், தேவாரம், திரு மந்திரம்,பட்டினத்துப் பிள்ளையார் பாடல், சிவ ஞான வள்ளலார்,திரு விளையாடற் புராணம், முதலியவற்றி லுள்ள, 'இல்லை, பொய், அநித்தியம், நாசம்,' என்னுஞ் சொற்களுக்கு 'நிலையாமை பொருளே யன்றி, இன்மை, பொரு ளன்று' என்றும், அந் நிலையாமையாய பொருளும் பெத்த தசைக் கண்ணே யொன்றும், 'இல்லே யெனு மாயை' என்ற கந்த ரநுபூதிச் செய்யுட்கு, சுவாநுபவ காலத்திற் பாசம் நாசமானமையின், நிலையாமைப் பொருள் முத்தி தசைக்கண்ணே யொன்றும் என, பாசம் நாசமென்பதற்கு இரு நிலையாமைப் பொருள் கூறுகின்றனர். அதனால், பெத்த தசைக்கண்ணும், முத்தி தசைக்கண்ணும், பாசமாய மூலாஞ்ஞாநம் நித்திய மென்று கருதுகின்றனர். பிறுண்டு, 'சித்தாந்த சைவத்தின்படி முத்தியில் உயி ருண்டு. மல மில்லை. முத்தியில் மல மில்லா தொழியினும் ஏனைப் பெத்தரிடத் திருத்தலால், மலம் அநாதி நித்தியம் என்றற் கிழுக் கில்லை' என்று கூறி, ஈண்டுக் கூறிய கூற்றிற்கு மாறு கொளக் கூறுதலின், 'மாறு கோளக் கூறல்' என்னுந் தோல்வித் தானத்தையும், 'சுவ வசந வியாகாதம்' என்னும் தோஷத்தினையு மடைந்தனர்.

'நிலையாமை' என்னுஞ் சொற் பொருளை யாராய்வாம். நிலை பகுதியும், மை விகுதியும், ஆகார வெதிர் மறை விகுதியும் பெற்று முடிந்த வொரு பகு பதமாம். இடையி லுள்ள ஆகாரம், பகுதியின் விரோதப் பொருளாய நிலைத்தற்கு மறுதலைப் பொருளை யுணர்த்தும். மறுதலைப் பொருள், பிராகபாவம் (முன் னின்மை), பிரத் தொம்சாபாவம் (அழிவுபாட் டின்மை), அந்நியோந்நியாபாவம் (ஒன் றொன் றன்மை), அத்தியந்தாபாவம் (முழுது மின்மை), சாமயிகாபாவம் (கால விசேடத்தாற் றோன்றுமின்மை), என ஐவகைத்தாம். நிலைத்தல் உண்மையாம். உண்மையின் மறுதலை, ஐவகைப்படு மென்றாகி அஞ்ஞாநம் பிரவஞ்சம் என்னும் சத்தின் பிராகபாவம், பிரத் தொம்சாபாவம், அந்நியோந்நியாபாவம், அத்தியந்தா

பாவம், சாமயிகாபாவ மெனப் பொருடங்து நிற்கும். 'பூதலத்திற் குட மில்லை' என்னுந் தொடர் மொழி, பூதலத்தில் குடத்தின் பிராகபாவத்தையும், பிரத்தொம்சாபாவத்தையும், அத்தியந்தாபாவத்தையும், சாமயிகாபாவத்தையும், "குடம் பட மன்று" என்னும் தொடர் மொழி அந்நியோந்நியாபாவத்தையும் விளக்குவ போன்று, ஓர் அதிகரணத்தில், அஞ்ஞானம் பிரவஞ்ச மென்பவற்றின் பிராகபாவ முதலியவற்றை விளக்க வேண்டும். சிவம், அல்லது பிரஹ்மம் பூதலம் போன்று, பிரவஞ்ச, அஞ்ஞானங்கட்கதிகரணமாம். அவ் வதிகரணத்தில், அஞ்ஞான, பிரவஞ்சங்களின் பிராகபாவங் கூறுவோமாயின், அஞ்ஞான, பிரவஞ்சங்கள் 'உண்டாம்' என எதிர் காலத் தோற்ற முண்டாக வேண்டும். அவ்வா றின்றி நிகழ் காலத்தில், அஞ்ஞான, பாசங்கள் காணப்படுகின்றமையின் சிவ மெனும் பிரஹ்மமாய அதிகரணத்தின்கண் அஞ்ஞான, பாசங்களின் பிராகபாவங் கூறுத லடாதாம். பிரத் தொம்சாபாவங் கூறுவோமாயின், 'குடம் அழிந்தது' என்பது போன்று, பிரவஞ்சம் அழிந்தது என்னுந் தோற்ற முண்டாதல் வேண்டும். அவ்வா றின்றி, நிகழ் காலத்தில், உள் பொருள் போலத் தோன்றுகின்றமையின், பிரஹ்மத்தின்கண் பிரவஞ்சத்தின் பிரத் தொம்சாபாவமுங் கூறுத லடாது. சாமயிகாபாவங் கூறுவோமாயின், ஒரு காலத்தில் நீங்கிப் பின் னொரு காலத்தில் மீண்டும் வருதலின் முத்தர்கட்கு நீங்கி மீண்டும் அம் முத்தர்கட்கே, சுத்தர மூர்த்திகட்கு ஆணவ முனைப்பான் மீண்டும் பிறப் புற்றாங்கு, அஞ்ஞானம் பிரவஞ்சம் பிறப்பு என்பன வரும். ஆகலின், அது எம் மதச் சாஸ்திரங்கட்கும் சம்மத மன்றாகலின், அஃது முடன்பா டன்றாம். பிரஹ்மத்தின்கண் பிரவஞ்ச வஞ்ஞானங்களின் அந்யோந்யாபாவ முள தெனக் கூறின், பிரவஞ்சத்தின்கண் பிரஹ்மமும், பிரஹ்மத்தின்கண் பிரவஞ்சமும் இன்றிக், 'குடம் பட மன்று' என்பது போன்று, சிவம் பிரவஞ்ச மென்னு மிரண்டும் பரிச்சின்னமாய், 'சிவன் உலக மாயினன்' என்பன வாதி சைவ சாஸ்திர முதலியவற்றிற்கு முரண்படு மாகலின், அஃதும் பொருத்த முடைத் தன்றாம். ஆகவே, பாரிசேட நியாயத்தால், பிரஹ்மம் சிவம் என்னும் அதிகரணத்தின்கண், முக்காலத்தினு முடைய நிஷேதமாய பிரவஞ்சத்தைப் பிரதியோகியாக வுடைய, அத்தியந்தாபாவமே கொள்ளற்பாற்றாம். எதிர் காலத்து மிறந்த காலத்தும், பிரவஞ்சத்தின் அத்தியந்தாபாவம் உளதாமாயின், நிகழ் காலத்திற் பிரவஞ்சந் தோற்றுதலின் முக் கால முடைய நிஷேத மென்னும் விசேடணம், பிரவஞ்சத்திற்குப் பொருந்தாமையின், நிகழ் கால வத்தியந்தாபாவம் பொருந்தாதாலோ வெனின், நன்று நவின்றாய். எதிர் காலத்து மிறந்த காலத்து முளதாய பிரவஞ்சத்தி னத்தியந்தாபாவம், சாக்ஷா துண்டாம். நிகழ் காலத்தி னத்தியந்தாபாவ மருத்தாபத்திப் பிரமாணத்தினா லுண்டாம். அஃதெங்ஙன மெனிற் கூறுதும்:— நிகழ் காலத்தில் பிரவஞ்சமாய காரியந் தோற்றுதற்குப் பிரஹ்மத்தின்கண் காரணமான அவயவ மின்மையினானும், வேறு அதிகரணத்தின்கண் ணானும்

அவயவ மின்மையினும், இளிஞ்சலிற் றோற்றும் வெள்ளியின்மைக்கு, விவகார பாரமார்த்த வெள்ளியின் எதிர்கால இறந்த கால நிஷேத முளதா மாயினும், நிகழ் காலத்திற் றோற்றும் பிராதிபாஸிக வெள்ளியின் றோற்றத்திற்குத் இளிஞ்சலின்கண், காரணமான அவயவ மின்மையினும், வேறு அதிகரணத்தின்கண்ணு மவயவ மின்மையினும், அர்த்தாபத்திப் பிரமாணத்தினால் நிகழ் கால நிஷேதமும், இளிஞ்சலினிடத்துப் பொருந்துவதுபோல் நிகழ் கால நிஷேதம் பொருந்து மென் றுணர்க. அங்ஙனம், முக் காலத்து மில்லதாய பிரபஞ்சம் பிரஹ்மத்தின்கண் டோற்றலாமோ வெனின், மாலைக் காலமாய வுபாதி யிருக்கும் வரை, ரச்சுவிடத்துச் சர்ப்பப் பிராந்தியு மதன் காரியமுந் தோற்றுவ போலவும், ஜல வுபாதி யிருக்கும் வரைப் புருடனுக் கதோ முகந் தோற்றுவது போலவும், பிரஹ்மத்தின்கண் அஞ்ஞான வுபாதி யிருக்கும் வரைப் பிரவஞ்சந் தோற்று மென் றுணர்க. ஞானத்தா லனாதியாய அஞ்ஞான வுபாதி யொழிந்துழிப் பிரவஞ்ச மின் றென் றுணர்க. வேதாந்தத்தின்கண், அஜாத வாதம், ஏகஜீவ வாதம், நாநா ஜீவ வாதம், பாரமார்த்திக சத்தா வாதம், பாரமார்த்திக சத்தை பிராதிபாஸிக சத்தை யென்னும் இரண்டு சத்தா வாதம், பாரமார்த்திகம் வியாவகாரிகம் பிராதிபாஸிகம் என்னும் மூன்று சத்தா வாதம், திருஷ்டி ஸிருஷ்டி வாதம், ஸிருஷ்டி திருஷ்டி வாதம், ஆபாச வாதம், அவச்சேத வாதம், பாத சாமாநாதிகரண்ய வாதம், முக்கிய சாமாநாதிகரண்ய வாதம், பிம்பப் பிரதிபிம்ப வாதம் என்பன வாதியாக, ஜடப் பிரவஞ்சத்தின்கண்ணும், சேதநத்தின்கண்ணும் பல வேறு அவாந்தர பேத முற்றுப் பல மதங்க ளுள வென் றுணர்க. எவ்வெம் மதக் கோட்பாடு கொண் டாக்ஷேபிக்கப்படுகின்றதோ, அவ்வம் மதக் கோட்பாடு கொண்டே சமாதானங் கூறப்படு மென் றுணர்க. இவை யாவுஞ் சாஸ்திரார்த்த மாகலின், வேதாந்த சாஸ்திர வல்லுநர்பால் ஸமித்பாணி யாகச் சரணாகதி யடைந்து கேட்கு முறையாற் கேட்டு, அவர்கள் விளக்கு மாற்றால் விளக்க வுணர்க. அவ்வா றின்றி மனம் போனவாறு தவறாய்ப் பொருள் கொள்ளற்க.

எவ்வாறு நிலையாமை யென்று பிரவஞ்சத்திற்குப் பெயரோ, அவ்வாறே, தமம், மோகம், அவித்தை, மித்தியா சொரூபி (பொய்ம்மை யுருவி) என்பனவும் நாமங்களாம். அசத்து, ஜடம், துக்கம், அநித்தம், கண்டம், என்பனவும், பிந்நம் அபிந்நம் பிந்நாபிந்நம், சத்து அசத்து சதசத்து, சாவயவம் நிரவயவம் சாவயவ நிரவயவ மென்னும் ஒன்பது விருத்தம் நிர்ணயிக்கக் கூடாத அநிர்வாச்சிய மும் லக்ஷணம் எனவுங் கொள்க. விரிப்பில் பெருகு மாகலின் அமைக. இன்னேதல், அத்வைத சித்தி, [illegible] பிரமாநந்தீயம், தத்வப் பிரதீபிகை, பேத திக்காரம், பாமதி, சாரீரக பாஷ்யம், கண்டந கண்ட காத்யம் முதலிய ஸம்ஸ்கிருத நூல்களைத் தக்காரிடத்துச் சரணாகதி யடைந்து கேட்டுச் சாந்தி பெறுவாராக. அந் நூல்களி லுள்ள விஷயங்களை ஈண்டுத் தென்மொழியி னெழுதின் அவை விளக்க முறுவாகலின், சம்ஸ்கிருதத்தி னெழுதின் தென்மொழி கற்றார்க்

குப் பயன்படாமையானும், ஸ்ரீ யோகாநந்தேந்த்ர சரஸ்வதீ ஸ்வாமிக ளவர்களால் 'ஆதி சைவ நாயக கேவலேய ஏக பங்க ஏக்காரம்' என்னும் நூலின்கண்ணும், 'நாந்திரிக நுண்ட கண்டநம்' என்னும் நூலின் கண்ணும், ஒரு சிறிது சம்ஸ்கிருதத்தில் காண்பிக்கப்பட் டிருக்கின்றமை யினானும், ஈண்டுக் கூறாது விடுத்தா மென் றுணர்க.

'இட்டனை' என்னுஞ் சொல் நிலையாமையை நிலை நிறுத்து மென்றார். 'மாயையி லிட்டனை' யென்பது பொருளே யன்றி, வேறு பொரு ளின்றாம். அம் மாயை யெவ்வாறாய தெனின், அத்தியந்தாபாவ முடைய தென்னும் பொருடோன்ற இல்லை யென்னும் பதங் கொடுக்கப்பட் டிருக்கின்றது. அதனை யுணராது கூறினமையின் 'மதாநுஞ்ஞை' என்னும் தோல்வித் தானத்தை யடைந்தனர்.

"திரு வள்ளுவ நாயனாரும்' முதலில் நிலையாமை கூறி, பின் துறவு கூறியதனால், அவர் கருத்தும் பிரவஞ்சஞ் சத்திய மென்பதேயாம்'' என்றும், பொய் யென்னுஞ் சொல்லை "பொய்படு மொன்றோ; பொய்ம்மை முயக்கம்; என்ற குறட்களில் விளக்கி யிருக்கின்றார்'' என்றும், "அவ் விரண்டிடத்து மின்மை தான் பொருளென்று சாதிக்க முடியுமா'' என்றுங் கூறுகின்றார்.

34 வது நிலையாமை யதிகாரத்தின் அவதாரிகையில், "நிலையாமை யாவது தோற்ற முடையன யாவும் நிலையுத லிலவாந் தன்மை'' என மாயையின் அத்தியந்தாபாவ விலக்கணமே கூறப்பட்டிருக்கின்றது. மற்றும், கானற் சலம் போற் றோன்றி, கயிற் றரவுபோ லழியு மென்பார்க் கும், க்ஷணிக மென்பார்க்கும், சதசத் தென்பார்க்கும் பொதுவாய், நிலை யாமை யென்று கூறப்பட்ட தென்றும், 'தோற்ற முடையவற்றைக் கேடி ல வென்று கருதும் புல்லறிவால்' என்றுள்ள வாக்கியத்தில், தோற்ற முடையவற்றை யென்னுந் தொடரால், நிலையாமைக்கு 'தோற்ற முடை யது' என்றும், 'கேடில' என்னுந் தொடரால், 'நிலையின' என்னுஞ் சொற்கு, 'நாச மின்மை' என்றும், விளக்குவதனால், உற்பத்தி யுடையவற்றை 'நாசமில' என்று கருதும் இழிந்த ஞானமா மென்று கூறப்பட்டிருக்கின்றது.

35-வது துற வதிகாரத்தில், 'பற்றினை யவற்றது நிலையாமை நோக்கி விடுதல்' என்றமையான், பற்றை யநித்திய மென் றுணர்ந்து விடுத லன்றி வேறு வகைத்தா யின்றாம். நித்தியமான பற்றை விரும்பின் நித் திய துக்கமும், அநித்தியமான பற்றை விரும்பின் அநித்திய துக்கமு முண்டாம். "பொய் படும்'' என்பதற்கு 'புலை படும்' என்று பொருட ாலின், மாயையின்பாற் பட்டு இலக்கணையா லநித்தியத்தையே யுணர்த் தும். "பொய்ம்மை முயக்கம்'' மித்தையான முயக்க மெனப் பொரு டந்து அநித்திய மென்னும் பொருள் கொள்ளக் கிடத்தலி னென் றுணர்க.

400-வது "கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை" என்னுங் குறட்கு, "ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வம்" என்று பரிமேலழகர் கூறுதலின், 'நிலையான' வென்று பொருள் கொள்ள லேலுமா? ஈண்டு அநித்திய மென்பதே தோற்றமாம். இவ்வாறு, குறள் முதலியவற்றி லநேகஞ் சொற்க ளுள. அவை யாவு மீண் டெடுத் தாளின் விரியு மாகலி னமைக.

"பொய்யாகு மென்பதற் கில்லையாகு மென்று பொருள் கொண் டெழுதினரா?" என்கின்றார். இவர் வாக்கியம் பொய்க்கும், அதாவது இவர் வாக்கியம் மித்தையாம். அத்தியந்தாபாவமாம் என்னும் பொருள் கொண்டே யெழுதினே மென் றுணர்க.

திரு மந்திரம், 115, 2213, 2236, 2405, என்பன வாதி செய்யுட்களால், "பதி பசு பாசம் மூன்றும் அநாதி நித்தியம் என நன்கு விளங்கவும்" என்றார். அச் செய்யுட்கள் "பதி பசு பாசம்" என்னும் மூன்றையும் அநாதி யென்று கூறுகின்றனவே யன்றி நித்திய மென்று கூற வில்லை. அநாதி யென்று கூறுமிடங்களில், ஹநுமத் புச்சம் போன்று நித்தியம் என்னுஞ் சொல், சுவ கபோல கற்பனையாக வந்து நுழைவ தென்னை வறியாமை? யாண்டுப் புகை யுண்டோ ஆண்டுத் தீ யுண் டென்பது போன்று, யாண்டு அநாதி யுண்டு ஆண்டு நித்திய முண் டென்னு நியம வியாப்தி யின்றே. ஏது சாமாநாதிகரண்ய அத்தியந்தாபாவ அப்பிரதியோகி சாத்தியசாமாநாதிகரண்யம் என்பது முடிவான வியாப்தியாம். மூல மலமாய அஞ்ஞாந திரவியத்தின் சத்தியாய, ஆணவ காமிய மாயீக மென்னும் மும் மலங்கட்கும் நிவர்த்தியினை சிவ ஞாந சுவாமி கூறுதலின், அநாதித் தன்மை யிருந்தும் ஆண்டு நித்தியத் தன்மை யின்றாம். பிராக பாவத்தின்கண்ணும் வட திசைக்கண்ணும் அநாதித் தன்மை யிருந்தும் நித்தியத் தன்மை யின்றாம். ஆதலின், அநாதித் தன்மைக்கும் நித்தியத் தன் மைக்கும் நியம வியாப்தி யின்றாகலின், அநாதி யென்னுஞ் சொல் வரு மிடந்தோறும் நித்திய மென்னுஞ் சொல்லைப் புகுத்து மறியாமையை யறவே யொழித்து, யா மறைந்த அறையின்படியே யடங்கி வாழ்தலே சாலச் சிறந்ததா மென் றுணர்க. அவ்வாறு கொள்ளா தொழிவரேல், இவர் நூல் களிற் 'பசு' என்று வருமிடங்க டோறும், சொற் சாதிரிஸ மயக்கத்தால், வால் கோடு முதலியன வுடையது ஜீவாத்மா என்று, ஜீவனையும், சதுஷ் பாத் மிருகத்தோடு சமாநமாக்கி, மிருகமாகிய ஜீவாத்மாவுக்கு ஞாந சாஸ் திர மின் றென்று, இவரைச் சார்ந்தார் யாவருக்கும் நல் லுபதேசஞ் செய் வாராக.

பசுத் தன்மை, பதித் தன்மை, பாசத் தன்மைகள், அநாதியாயினும், பாசம் நீங்கிய வழி, பசுவிற்குப் பசுத்தன்மை யின்றாகலின், பசு வில்லா விடத்து, பதிக்குப் 'பசு பதி' யென்னும் பதித் தன்மையு மின்றாம். ஆகவே, சுத்த சேதந மிரண்டு மொன்றா மென்று திரு மந்திர முதலிய வற்றிற்குப் பொருள் கொள்க. பாசம் அறுதல் அறுதல் என்று பல

விடத்துப் பன்முறை திரு மந்திர முதலியவற்றிற் கூறுதலின், அதற்கு அத்யந்தபாவப் பொருளொன்றே பொருந்து மன்றி, யேனைப் பொருள் பொருந்தாதாம்.

"இனி, பொய் யென்பதற்கு இல்லாமை யென்ற பொருளை யாவது இவர் உண்மையிற் கொண்டிருக்கின்றாரா? கொண்டிருப்பின், செட்டியா ரவர்க ளெழுதியதும் பொய்யாதலின், அதற்கிவ்வளவு சிரமப்பட வேண்டாமே. இதனானே, பொய்யை மெய் யென்று வீணாச் சிரமங் கொள்ளும் புண்ணிய முடையார் சுவாமியாரும் இவர் மாபினரும் என்பது விளங்க வில்லையா ?" என்கின்றார். உண்மையில், பொய் யென்பதற் கில்லை யென்னும் பொருளைக் கொண்டமையா னன்றோ, விவகாரத்துப் பொய் கூறிய படலக்காரச் செட்டியாரைக் கண்டித்தற்குக் கூட்டுக் கோற் போட்டதாம். பொய்யை மெய் யென்று ஸ்தாபிக்கும் முசலாக்கிர புத்தி யுடையார் இவரும் இவர் மதத்தினரும் என்பதை யுணராது, பிறரை நிந்தித்தனர். 'வீணாச்சிரமங் கொள்ளும் புண்ணிய முடையார் சுவாமியார்' என் றெழுதி யிருக்கின்றமையின், நான்காவதாய துறவாச்சிரமத்திற் றுவேஷ முடைய ரென்று விளங்குகின்றது. இதனால், தம் மதத்தி லுள்ள தம்பிரான்களை யும், தம் மதத் தேனைத் தேசத் துறவிகளையும், வீண் ஆச்சிரமம் பூண்டவ ரென்று நிந்தித்தவ ராகின்றார்.

" நிறந்தருந் தெய்வப் புலமைவள் ளுவனார் நீத்தவர் பெருமைதான் முகப்பாற், சிறந்திட வமைத்தாங் கதுகொடில் வாழ்க்கைச் சிறுமைதாற் றினரது தெரியார்க், கறந்தவா றியற்றி னவனினுங் கோடி யதிகமா மெனமந மருது, துறந்துளோ ரையும்பட் டணத்தெம தடிக டொகுத்த கட் டுரைஇகழ்த் திடுமே".

"ஞானியே யெவரும் வணங்குதற் குரியோ னவிலுமா சௌசமில் பெரியோன், மாநிலத் தவன்றா னுடல்விடிற் குகைப்பால் வைக்கவென் மறைப்படி புரிந, றானும்வே தாந்தப் பொருடுணிந் திடினுஞ் சாற்றினில் வாழுமந் தணர்க்கின், றனதாற் றுறவு பெற்றநற் றவரே யமலவீ டடையு ஞானிகளே".

"அறந்தா னியற்று மவனினுங் கோடி யதிகமில்லந், துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன், மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற், றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம் பனே."

என்று துறவாச்சிரமத்தினைப் புகழ்ந்து கூறியிருப்பவும், தாம் கொண் டாடும், பட்டணத்துச் சுவாமிகள் வாக்கையும் பொருட்படுத்தாது, சந்நியாசி களை வீணாச்சிரமங் கொண்டவர்க ளென்று தூஷிக்கின்றமையின், "கூற் றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க், காற்றா ரின்னா செயல். எரி யாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார், பெரியார்ப் பிழைத்தொழுகு வார். பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற், போரா விடும்பை தரும்." என்னும் பெரியார் வாக்கிற்கு இலக்காகாது தப்புதல் யாங்ஙனமேலும்?

6. "திருமந்திரம்:—68, 84, 1477, 1512, 2394, 2397 என்னும் ஆறு செய்யுட்களையு மறிவித்து, சிவாகமம் சிவனு லருளிச் செய்யப்பட்டதென்றும், வேதாந்தத்தைத் தழுவியது சித்தாந்த மென்றும், வேதாந்தம் சித்தாந்த மென்னும் இரண்டும் அபேதமான கருத்துடையன வென்றும் விளங்க வில்லையா? என்றும்" கூறுகின்றார். வாமாகமம், கௌலேயாகமம் முதல் சர்வாகமமும், சிவனு லியற்றப்பட் டிருக்குங்கால், சிவாகமும் சிவனு லியற்றப்பட்டதேயாம். அதிகாரிகளின் பேதத்தாற் பலநூல்களைக் கருணையா லீர்வரன் செய்திருக்க, அவை யாவும் சோபாந முறையா லொரு கருத்துடையனவாமே யன்றி, சாக்ஷாத்தாக வொரு கருத்துடையன வாகா. சிவன் செய்தமையால், ஆகமம் வைதிக மாமேல், ஆகமங்கள் யாவும் வைதிக மாதல் வேண்டும். அங்ஙனமே, சிவ சிருஷ்டியாகலின் பிரபஞ்சம் யாவும் சேதநமாதல் வேண்டும். அவ்வா றின்மையின், கருத்தரதீந வைதீகத் தன்மை யவற்றிற்குப் பொருந்தாதாம். மூலமாய வேதத்திற்கு விரோத மின்றிய ஆகமங்கள் வைதீகங்களாம். மூலமாய வேதத்திற்கு விருத்தமாகக் கூறும் ஆகமங்க ளவைதிகங்களாம். வேதாந்தங்கள் ஒரே பிரஹ்மப் பொருளைக் கூறுகின்றன. அவற்றிற்குச் சாதநமாகச் சைவ முதற் பல சாஸ்திரங்களும் மநத் தொழிலாய வுபாசனையைக் கூறுகின்றன என் றுணர்க. இதனை யுணராது பிறர் மீது 'விளங்கவில்லையா' என்ற அறியாமையைக் கூறித் தா மறியாமை யுடையவராயினர்.

"இனி, வேதாந்த மென்பது நூற்பெயரா? சமயப் பெயரா? சமயப் பெயராயின், சைவம் சிவ சம்பந்தம், வைஷ்ணவம் விஷ்ணு சம்பந்தம், என்பன போல வேதாந்தம் இன்ன தெய்வத்தின் சம்பந்த மென, அச்சொல்லில் வைத்துக் காட்டக் கூடுமா? நூற் பெயராயின் அந்நூலுக்குரிய சமயம் யாது?" என்கின்றார். இவரே முன் 5-வது சங்கை முதலியவற்றில் வேதாந்தம் 'ஒரு மதம்' என்றும், அதன் முடிவும், ஆகமத்தின் முடிவு மொன் றென்றும் தம்பட்ட மடித்து, மேலு மிவ்வாறே புகன்று, வேதாந்தம் ஒரு பொருளா என்றும், அம் மதத்திற் கொரு தெய்வமுண்டா என்றும் பலவாறு, துவைத மலத் தடிப்பால் பறை யறைகின்றார். வேதத்தின் அந்தம் வேதாந்தமாம். அஃதாவது வேதத்தின் முடிவாம். ஆண்டுப் பிரதிபாதிக்கப்படும் பிரஹ்மப் பொருளும் வேதாந்த மென்னும் பெயரைத் தத்திதப் பிரயோக மின்றிச் சினையாகு பெயரென்னு மிலக்ஷணையாற் பெறு மென் றுணர்க. சில விடத்துத் தத்திதப் பிரயோகம் பெற்றுப் பரார்த்தத்திலும் ஸ்வார்த்தத்திலும், சில விடத்துத் தத்திதப் பிரயோகம் பெறாது சுவார்த்தத்திலும் பரார்த்தத்திலும் வரு மென் றுணர்க. ஆகலின், வேதாந்த மென்பது பிரஹ்மப் பொருட்கும் அதனைப் பிரதிபாதிக்கும் உபநிஷத்கட்கும், அவற்றினை விசாரிக்கு முத்தர மீமாம்ஸா சூத்திரங்கட்கும், அவற்றின் வழி நூலாய, அத்வைத சித்தி, தத்துவப் பிரகாசிகை, கண்டந கண்ட காத்தியம், பேத திக்காரம், பஞ்ச தசி, வாசிஷ்டம், பகவற் கீதை, கைவல்ய நவநீதம், வேதாந்த சூடாமணி, இலக்ஷணவிருத்தி

யென்பனவாதி நால்களுக்கும், சத்தியினாலும், லக்ஷணையினாலும் பெயரா மென் றுணர்க.

7. "திரு மந்திரம் 2179-வது ஆகின்ற என்னும் செய்யுளால் சைவத் தினும் வேதாந்தத்தினும் வேறாக மாயா வாத மொன் றுண் டென்று பெறப் படுகின்ற தன்றோ" என்கின்றார். இதனை யிவ ருண்மைக் கருத்தோடெழு தி யிருப்பின், 'வேதாந்திகளை மாயா வாதிக ளெனக் கூறுதிர்க' ளென இவ ரினத்தவரைத் தடிகொண்டு தடுத்திருப்பா ரன்றோ? வேதாந்தமுஞ் சைவமு மொன்றா யிருக்குமாயின், வேதாந்தத்தினுஞ் சைவத்தினு மென் றும் மை கொடுத்து வேறு பிரிப்பானேன்? இருபத் தெட்டும், முப்பத் தாறும் எனத் தத்துவங்களைத் திரு மூல நாயனார் விதந் தோதுவானேன்? இவர், பிறண்டு மாயா வாதச் சார்பில்லா எனக் குறிப்பால் வேதாந்திகளை மாயா வாதிக ளென்று கூறுவானேன்? இதனா லிவர் உண்மைக் கருத்துடன் பறை யறைய வில்லை யென்று பகர லாயிற்று.

"சிவ ஞான போதம், சிவாகமத்தைப் பரமப் பிரமாணமாகக் கொண் டொழுகும், சைவ பரம்பரையிலேயே, உபதேசிக்கப் பெற்று வருகின்ற தென்பதும், யாவரும் அறிந்தனவாகும் ஆகவே, ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் சைவ சித்தாந்தி யென்பது வெளிப்படை" என்கின்றார். சிவ ஞான போதம் ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகட் குபதேசிக்கப்பட்டது திருப் பெருந் துறையிலாம். அக் கோயில் வீர சைவர்களாய அம்பலத்தாடி ஸ்வாமி களைச் சார்ந்ததாம். ஸ்ரீ மாணிக்க வாசக ஸ்வாமிகளும் 'ஐக்கிய வாத சைவர்' 'சிவாத்துவித சைவர்' என்று சிவ ஞான சுவாமியாற் கூறப்படும் வீர சைவ மதத்தைச் சார்ந்தவர்களே. அவர்க ளியற்றி, பரமேஸ்வரன் திருக் கரத்தா லெழுதப்பட்ட திரு வாசகமும், அம்பலத்தாடி ஸ்வாமிக ளிடத்தே யிருக்கின்றது. அதனா லன்றோ, அவர்கட்கு நடராஜா போன்று கருதிப் பாத பூஜை முதலியன நடத்தி வருகின்றார்கள். அவர்களும், பாதத்தைப் பூமியில் வையாது வேறோ ராதநத்தின்மீ திவர்ந்து செல்லுகின்றனர். அச் சமஸ்கிருத சிவ ஞான போதத்திற்கு அநேக வீர சைவர்கள் அநேக வியாக்கி யானங்க ளியற்றி யிருக்கின்றார்கள். அத் திருப் பெருந்துறை யாதீனம் சின்னாண் முன்னர் திரு வாவடுதுறையிலுள்ள சில தம்பிரான்களாற் கவர்ந் து கொள்ளப்பட்டது. இன்றும், திருப் பெருந்துறை யாதீனத் தர்ம கர்த் தா வீர சைவ அம்பலத்தாடி ஸ்வாமிக ளென்றே கைச்சாத்திடுதலே சான் றாம். திரு வாசகத்தைப் பேழையுள் வைத்துச் சிதம்பரம் சிவ கங்கையில் விடுஞான்று, அம்பலத்தாடி ஸ்வாமிகளைச் சார்ந்ததுஞ் சான்றாம். மாணிக்க வாசக ஸ்வாமிகள் வீர சைவர்க ளென்பதற்குப் பெரிய புராணத்தில் அவர் கள் சரித்திரத்தினைக் கூட்டாததுமொரு சான்றாம். சமஸ்கிருதத்திலுள்ள மாணிக்க வாசக ஸ்வாமிகள் சரித்திரமும், ஏனைய வீர சைவ வடமொழி, தென்மொழி சாஸ்திரங்களும் வீர சைவர்க ளென்றே கூறுகின்றன. இவ் வாறிருக்க, யாவரும் அறிந்தனவாகு மென்றும், வெளிப்படை யென்றும்,

கூறிய தெத்துணைப் பொருத்தமாம். திரு வாவடுதுறை யாதீனத்து மடாலய இடமும் ஸ்ரீ மூல நாதர் சமாதியும், வீர சைவ மடாலயாதிபதிக ளிடத்திருந்து கிடைக்கப் பெற்றிருக்குமாயின், வேறு மிசைபடக் கூறுவ தெதற்கு? ஆகலின், சிவ ஞான போதம் சிவ ஞான சுவாமிகளை யுள்ளிட்டார்க்கே யுரிய தென்னுங் கூற்று கூற்றிற்கே யிரையாம். சிவ ஞான போதத்திற்கு வேதாந்த பரமாக நான்கு வேதங்களின் பாஷ்ய கருத்தாவாகிய ஸ்ரீ வித்தியாரண்ய முனீந்திர ரவர்கள் பெரிய வொரு பாஷ்யமும், தமிழில் ஸ்ரீ குப்புஸ்வாமி ராஜு அவர்கள் தத்துவப் பிரகாசிகை யென்னும் உரையும், ஸ்ரீ சிவாநந்த ஸ்வாமிக ளவர்கள் சிவாநந்த பாஷ்யமும், ஸ்ரீவடிவேலு செட்டியா ரவர்கள் சிவ ஞான போதச் சிற்றுரையும், இன்னும் பல தமிழ் சமஸ்கிருத வுரைகளும் உளவாகலின், சைவ பாரம்பரையிலேயே யுபதேசிக்கப்பட்டு வருகின்றது' என்னுங் கோள் கோளாய வாறு காண்க.

" சைவர்களை மாயா வாதி யென்று வாளா கூறியதற்குப் பிரமாணம் யாது? " என்கின்றார். மாயையைச் சகத்திற் குபாதாந காரணமாகவும், ஈஸ்ரவனை நிமித்த காரணனாகவுங் கொண்டு, உபாதாந காரண அம்சத்தில் ஈஸ்வரனுக்குப் பாதந்திரத் தன்மை கூறிப் பரிசிந்நனாகச் செய்து, மாயைக்குச் சுதந்திரத்தன்மை கூறி அபரிச்சிந்நத் தன்மை கொள்கின்றமையின், இவரும் இவரினத்தவரும் இக்காரணத்தானே மாயாவாதியாவர்.

"மாயா வாத மொன் றுண் டென்று கூறுஞ் சைவர்கள், வேதாந்த மில்லை யென்று கூறுவ தில்லை. திரு மந்திரக் கருத்தின்படி வேதாந்தி களு முண்டென்றே சைவர்கள் கொள்ளுகின்றனர்" என்கின்றார். 'மாயா வாத மொன் றுண் டென்று கொள்ளுகின்றன' ரென்றமையால், மாயா வாத மில்லை யென்போர் வேதாந்த மில்லை யென்பா ராயிற்று. 'புகை யிருப்பின் நெருப் பிருப்பது போல், மாயா வாத மிருப்பின் வேதாந்த மிருக்குமாம். வேதாந்த மின்றாயின் மாயா வாத மின்றாம்.' என்னும் வியாப்தி கூறுகின்றார். நெருப்பினுள் காரியமாய புகை யடங்கி யிருப்பது போன்று, காரணமாய வேதாந்தத்தினுள் காரியமாய மாயா வாத மடங்கி யிருக்கு மென்று கருதுகின்றார். ஆகலின், சிறப்பு வகையால் இரண்டும் வே றென்றும், பொது வகையா லிரண்டு மொன் றென்றும், பொருள் கொள்ளக்கிடக்கின்றது. இவ்வாறாயின், மாயா வாதமும், வேதாந்தமு மொன் றென்று கூறும், " திரு மந்திரம் ஐந்தாந் தந்திரம். 2-வது அசுத்த சைவம். 1423:—'இணையார் திருவடி யேத்துஞ்சீ ரங்கத், திணையா ரிணைக்குழை யீரணை முத்திரை, குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்றா, துணைவாருஞ் சரியை கிரியையி னோர்க்கே.' 1424:—'காதுபொ னார்ந்த கடுக்க னிரண்டுஞ்சேர்த், தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன், சோதனை செய்து வுபதேச மார்க்கரா, யோதி யிருப்பா ரொருசைவ ராகுமே.' என்ற சைவர்களினும், இவர் வேறாவரா? இருவரு மொருவரா யிருக்க 'மாயா வாதமும் வேதாந்தமும் வேறு' என்று கூறுஞ் சைவர் தா மென்றும், எனையர் இரண்டும்

ஒன் றென்று கூறுஞ் சைவ ரென்றும் எவ்வாறு வேறு பிரித்தனர். பொருள் வகையாலுஞ் சொல் வகையாலு மிருவரு மொருவரா யிருக்க, வேறு பிரித்தது ஒரு வகையாலு மொவ்வாததேயாம்.

"சுவாமியாரையும் இவர் மரபினரையும், மாயா வாதிக ளென்று எந்தச் சைவர்கள் கூறினும், நாங்கள் மாயா வாதிக ளல்லர், வேதாந்திக ளென்று மட்டுஞ் சொல்லிக் கொள்ளக் கடமைப்படுகிறார்களே யன்றி, சைவர்களாகிய நீங்கள் தாம் மாயா வாதிக ளென்று கூறுதல் பொருந்துமா?" என்கின்றார். சைவரா யிருக்கு மிவர் தம் மதத்த ரிருக்கு மிடங்க டோறுஞ் சென்று, அவர்க ளிடத்து 'வேதாந்திகளை மாயா வாதிக ளென்று இனிக் கூறாதீர்கள். கூறுவீர்களாயின் அவர்கள் நம்மை மாயா வாதி யென்றும், நாஸ்திக ரென்றும், சூநிய வாதி யென்றும், ஆஸ்திக நாஸ்திக ரென்றும், நாற் சொற் புணர்த்து நவில்கின்றனர். அஃதெமக்கு மிக்க தோர் மானக் கேடாக விருக்கின்றது.' என்று இரந்து சாம பேத தான தண்ட மென்னும் நால் வகை யுபாயத்து ளோ ருபாயத்தா லவர்களை யடக்காது, எமக்குச் 'சைவர்களை மாயா வாதிக ளென்று சொல்லத் தகா தென்றும், தாங்கள் வேதாந்திக ளென்று கூறிக் கொள்ளலே தகுதியா' மென்றும் ஆஞ்ஞை செய்ய எவ் வதிகாரம் பெற்றிருக்கின்றார்? திரு வாவடுதுறை யாதீனத்திற் சம்பளம் பெறுதலாகிய அதிகாரம் பெற்றிருக்கின்றமையின், அவ் வதிகாரத்தாற் கூறினே மென்பரேல், திரு வாவடுதுறை யாதீனம், நாலாம் வருணத்தாராய சூத்திரர்க்குக் குருத் தானமே யன்றி, யேனை வருணத்தாருக்கும், ஏனை மதத்தினராய நான்கு வருணத்தினர்க்கும் குருத் தான மாகாமையின், அவ் வதிகாரத்தை அம் மதத்திற்கும் அவ் வாதீனத்திற்கும் கீழ்ப்படியும், சூத்திரத் தம்பிரான்களிடத்தும், அவ்வாறுள்ள கிரகத்தரிடத்தும் பிரயோகிப்பாராக.

"எந்தச் சைவர்கள் கூறினும்" என்றமையால், சிவ ஞான சுவாமி சிவ ஞான பாஷ்யத்தில் 'வேதாந்த மென்பது யோகப் பெயரான் வேதத்தின் முடிவாகிய வுபநிடதங்களைக் கூறும். உருடப் பெயரால் அவற்றை யெடுத்துச் செய்த ஏகான்ம வாத நூலைக் கூறும்.' என்றும், பிறாண்டு, 'ஏகான்ம வாதமாவது மாயா வாதம். இந்த மாயைக்கு வேறாகிய பிரஹ்ம ரூபமே யா னென வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தி யென்பதாம்." என்றும், 'ஏகான்ம வாத நூல் செய்தவன் வியாத முனிவன்' என்றும், 'இதனுட் கூறும் அ த் தி யா ச வா த ம் மாயா வாதத்திற்கு உபகாரமாம்' என்றும், இன்னும் பலவாறும் வேதாந்திகளை மாயா வாதிக ளென் றெழுதி யிருக்கின்றமையின், அவர் ஈண் டின்றிக் கைலாயத் திருப்பவ ராகலின் ஆண்டுச் சென்று "தாங்கள் வேதாந்திகளை மாயா வாதிக ளென்று திரு மந்திரத்தோடு முர ணுறுமாறு வரைந்தமையின், அவர்கள் நம்மை நியாய வாயிலாக மாயா வாதிக ளென்று ஸ்தாபிக்கின்றனர். தாங்கள் மொழி பெயர்த்த தருக்க சங்கிரக மூலம் உரை முதலியவற்றை

யாராய்ந்து, அவற் றுள்ள மயக் குற்ற மொழி பெயர்ப்புக் குழூஉக்களை யெடுத்துக்காட்டித் தங்கள் வெள் ளறிவை வெளியாக்கிவிடுவார்கள் போலு மிருக்கின்றது. ஆகலின், வேதாந்திகளை மாயா வாதிக ளெனத் தூஷித் தது தவறு மென ஒரு மன்னிப்புப் பத்திரம் அச்சிட்டு வெளியிடுவீர்க ளாக" வென்று அவரிடத் திரந்து மன்னிப்புப் பத்திரத்தைப் பெற்று ஈண்டு யாவருக்கும் விளக்கமாம்படி வெளியிடுவாராக. இவ்வாறு, செய் திருப்பரேல் 'எந்தச் சைவர்' என்னுஞ் சொல் வீணர் சொல்லாய் முடியு மென் றுணர்வாராக.

"இனி, இவரும் இவர் சார்பினரும் வேதாந்திகளாயின் இருபத் தெட்டுத் தத்துவங் கொள்கின்றனரா?" என்கின்றார். இதனால், யாங்கள் வேதாந்திக ளல்ல ரென்று கருதுகின்றார். இக் கருத்துடை யிவர் 'வேதாந் திக ளென்று மட்டுஞ் சொல்லிக் கொள்ளக் கடமைப் படுகின்றார்கள்' என்று எவ்வாறு கூறினர்? முன் பின் முரா ணுறக் கூறலால், அறிவிலி யென்பது விளக்க மாயிற்றே. தக்கார்வாய்ச் சரணாகதி யடைந்து கேட்கு முறையாற் கேளாக் குறையாற் கூறினரா? மயக்க வுணர்வாற் கூறினரா? துவேஷத்தாற் கூறினரா? தமோகுணத் தடிப்பாற் கூறினரா? சத்துவ குண மின்மையாற் சாற்றினரா? ஏகாக்கிரத் தன்மை யடையுந் துறவா சிரமமாய விறை யாசிரம மின்றியதா லிசைத்தனரா? எக் காரணத்தாற் கூறின ரென்ப தறிஞ ரறிவாராக.

"இருபத் தெட்டுத் தத்துவங் கொள்கின்றனரா? கொள்கின்றே மென்பரேல் அத் தத்துவங்க ளிவை யென்றும், அவற்றைப் பற்றிக் கூறும் நூல் இது வென்றுங் காட்டக் கூடுமோ?" என்கின்றார். வேதாந்திக ளாகிய யாங்கள் இருபத் தெட்டுத் தத்துவங் கொள்ள வில்லை யென்று எவ்வா றுணர்ந்தனர்? தம்மைச் சர்வஞ்ஞ ராகவும், சர்வ வேதாந்த சாஸ்தி ரங்களையுந் தென்மொழி வடமொழி யிருமொழியினு முணர்ந்தவராகவும், மதித்து, "கொள்கின்றனரா? நூல் இது வென்று காட்டக் கூடுமோ?" என்கின்றார். வேதாந்த சூடாமணியில் "எங்குமா மிருபத்து நான்காவ தாகு மிருபத்தைந் தாவதுதான் மூலவகங் காரம், ஆங்கதனை யடைத லுறும் சிதாபாச சீவன் அறையுமிரு பத்தாறு மவன்மாயை மருவும், ஓங் கொளியா மீசனிரு பத்தேழா மவனவ் வுயிர்முதலாந் தூரியனிரு பத்தெட் டா மவன்" என்றும், ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிக ளியற்றிய தத்துவ போதம் என்னும் நூலில், தூல சரீர தத்துவம்-6; ஞானேந்திரியம் 5; கருமேந்திரியம்-5; பிராணாதி வாயு-5; மனம் 1; புத்தி 1; ஆக சூக்ஷ்ம சரீர தத்துவங்கள்-17; காரண சரீர தத்துவம்-மாயை-1; அவித்தை-1; ஜீவன், ஈப்வரன், கூடஸ்தன்-3; ஆகத் தத்துவங்க ளிருபத் தெட்டு என்றும் கூறியிருத்தலை யுணராது, வினவுகின்றார். இதனால், அந் நூல்களை யிவர் படித் தறியாக் குறையால் இக் கடாத் தோற்றிற் றென் றுணர்க. அறியாமை வயப்பட்ட விவர் பிறண்டு கடாக் கடந்து கடாவுகின்ற மையின், இவர் கடா கடாவாகாது ஊரோ றன்ன மதர்ப்புற்ற கடாவாம்.

8. ஞான வாசிட்டம் திதிப் பிரகரணத்தில் உள்ள தாசூரன் கதையில் 'தண்டுலத் தோலும்' என்னும் முதலை யுடைய 107-வது செய்யுளில் இரண் டடியைப் பெற்று "இதனால் ஞான வாசிட்ட ஆசிரியரும் சைவர்க ளோடு சேர்ந்தவ ரென்றாகி, இவரும் இவரினத்தவரும் ஞான வாசிட்டக் கருத்துக்கு மாறுபட்டவ ரென்பதை மறுக்க முடியுமா? இதனானும், வேதாந்த மென்பது ஏகான்ம வாதமாகிய மாயா வாதத்தின் வேறென்பது விளங்க வில்லையா? ஞான வாசிட்டத்தில் ஏகான்ம வாதஞ் சாதிக்குஞ் செய்யுட்கள் பல வுள என்று காட்டுவாராயின், மேலே காட்டிய செய்யு ளோடு முரணாத வண்ணம் அச் செய்யுளுக்குப் பொருள் கொள்ளுதலே முறையாகு மன்றி மாறுபடக் கொள்ளுதல் முறையாகுமா?" என்கின் றார்.

"தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சகசமாய்த் தொழில் விசே டத்தால், விண்டுபோ மதுபோற் புருடனு மலத்தை மேவியே போக் குத லியல்பாங், கொண்டசந் தேக மொழித்துநீ முயல்வாய் குருவின்வல் லபவிளக் கத்தாற், கண்டன மெனல்நீ ஞானுந் தானுங் கண்டன பரம் பொருட் பொலிவே." என் றுள்ள செய்யுளைக் கூறினமையின், ஞான வாசிட்ட மொழிப்பெயர்ப் பாசிரியராகிய ஆளவந்தான் முனிவர் சைவராயின ரென்கின்றார். அச் செய்யுளில் பதி பசு பாச மென்னு மூன்றும் நித் திய மென்று கூறப்பட்டிருக்கின்றனவா? இன்றே. "அரிசியில் உமி யும், செம்பிற் களிம்பும் அநாதியா யிருந்து, குற்றல், புளியாற் றேய்த்தல் முதலிய தொழில்களால் நீங்குவன போல், ஜீவனும் அஞ்ஞானத்தை யநா தியே பொருந்தி, குருவின் அநுக்கிரகத்தால் நீக்கிக் கொள்ளுவன். நீ சந் தேகத்தை நிவர்த்தித்து முயற்சிப்பாயாக. குருவின் சாமர்த்திய விளக்கத் தா லறிந்தே னெனல் வியர்த்தமாம். நானும் நீயும் கண்டன அதாவது பார்க்கப்படும் பொருள் யாவும், சித்து ரூபமாய ஆத்ம தத்துவமேயாம்." என்பது அச் செய்யுளுக்குப் பொருளாம். இவ்வாறே, காஸ்மீர தேசத்து தர்க்க வாகீஸ்வர சாஹித்யாசாரிய கௌட மண்டல வலங்காரராய் விளங் கிய ஸ்ரீமந்-அபிநந்தன பண்டித ரவர்கள் முப்பத் தீராயிர வாசிட்ட சுலோ கங்களை ஆறாயிரமாகச் சுருக்கிய லகு யோக வாசிட்ட மென்னும் கிரந்தத் துள் நான்காவது-திதிப் பிரகரணத்தில் தாசூரன் கதையைக் கூறும் 17-வது சர்க்கத்தில்-52, 53, 54-வது சுலோகங்களில் கூறப்பட்டிருக்கின் றமையின், அவற்றின் பொருளை சமஸ்கிருத வல்லார்வாய்க் கேட்டுச் சாந்தி பெறுவாராக.

'புருடன் மலம்' என்னுஞ் சொல்லைக் கண்டு, தமது சைவ நூலென மயங்கினரோ? சொல் ஒருவருக்குஞ் சொந்த மன்றாம். சைவ சாஸ்திரம் பதினாலிலும், பிரஹ்மம், ஈஸ்வரன், ஜீவன், சகத்து, அஞ்ஞானம், ஞானம், வேதாந்தம், உபநிடதம், என்பன வாதி சொற்கள் மிகுதியாக வழங்கப்படு தலின், அது கொண்டு அப் பதினான்கு சாஸ்திரமும் வேதாந்த நூலெனக்

ஒருவரு மயங்குவா ரிலர். இலர். வாசிட்டம் ஒரே பிரஹ்மத்தினை யறை யாது, மூப் பொருளை முறை யிடுகின்ற தென்று கருதுகின்றதோ டமை யாது, ஏகான்ம வாதமும், மாயா வாதமும் ஒரு நூ லென்றும், அதனின் வேறு வேதாந்த மென்றும், பறை யறைகின்றார். பின், அந் நூலில், ஏகான்ம வாதங் கூறப்படுகின்ற தென்றுங் கூறுகின்றார். இந்நிலைப் புகுந்தவர் ஒரு வழி நில்லாது, ரஜோ குண மூலைப்பாகிய ஆணவ மூலைப் பின் வயப்பட்டு மாறு கொளக் கூறி, " மாறு கொளக் கூறல் " என்னுந் தோல்வித் தானத்தை யடைந்தனர்.

ஸ்ரீஜகதீஸ்வர அவதாரமாய் மர்நுஷ அநுக்கிரக லீலா விக்கிரகமாகிய ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளும், அவர்கள் மாணக்கர் பரம்பரையில் வந்த யாவரும் இருபத் தெட்டுத் தத்துவங்களைக் கைக் கொண் டநுட்டித்து வரு கின்றமையின், யாங்களே வேதாந்திக ளாவோம். ஏனையோர் எவ்வாற் றானும் வேதாந்தி யாகார். ஆகார். வாசிட்ட ஆரம்பத்தில் " உயர் மநத்தி னுக்குத் திறப்படக் காணப் பட்ட தில்லெனச் சித்தி ருமேல், உறப்பெறு மெய்போ தப்போ துயர்பா சுகம தாமே." (10) "வழிபடு மிதனை விட்டு மற்றுள நூல்க ளென்னும், குழிகளிற் புரண்டழுந் ஞாநக் குணத்திறைற் பிறப்போர்க் கெல்லாம், ஒழிவற வொருவர் செய்தற் குரித்தன்றாய்த் தானே யுண்டாங், கழிதலிற் பிரம வின்பங் கற்பங்க ளாலும் கூடா". என்னுஞ் செய்யுட்களில், பிரஹ்ம ஞாந நூலாகிய வாசிட்ட மொழிந்த வேனை நூற்களை, அஞ்ஞாநமாகிய சேற்றுக் குழி யென்றும், அக் குழியில் வீழ்ந்து அஞ்ஞாநத்தாற் பிறக்கின்றார்க ளென்றும், கூறி யிருக்கின்றவற் றை யுணர்ந்திருப்பாராயின் சைவ நூ லென்று கூறார். தாருகன் கதையி னாரம்பத்தில் "ஒளியாத துயர்மாயை யெனுமா பத்தை யொழிக்கமந நாச மோருபாய மாகும், இழியாத மெய்ஞ்ஞாநப் பொருளை யெல்லா மியம் பக்கேட் டயராம லிதயங் கொள்வாய், பழியான போகத்தி னிச்சை தானே பந்தமா மதுவிடலே பரம மாகும், வழியான பன்னூலாற் பயன் கொ லென்ன வருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும்." (1) " இன்ப மிதா மின்பமிதா மென்ற வெல்லா மெரியெனநஞ் செனமினைக வேற்றத் தாழ்வாய்த், துன்புறுபோ கம்பலவாற் றேய்ந்து நெஞ்சிற் றேயாம லெளி தருந்திற் சுகமே யாகும், வன்புபயின் மநத்தோற்ற நாச மாகு மநத்தி னது நாசமே மகத்தாந் தோற்ற, நன்பரம ஞாநிகணெஞ் சிறந்து போகு நடைவிலங்கா மறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம்." (2) " ஆநந்த மிரவந்த மிரண்டு மில்லை யசைவுமசை வின்மையுமா மனையு மில்லை, ஈனந்தீர் சத்த சத்தன் றிவற்றுக் கெல்லா மிடையல்லா ஞாநமாம் மென்ற மேலாம், தானந்த மிலாவறிவா யுலகின் மேலாந் தத்துவத்தி லுலகிருக்குந் தன்மை தன்னை, ஞாநந்தான் வளர்பொருட்டா யுரைப்பா யென்று நாதனியம் பிடவசிட்ட னவில்வ தானுன்." (3) என்று, மந நாச வுபாயத்தைக் கூறி, "எழுந்தசங் கற்ப பாவனை விட்டா லிறந்துபோ மிதனையீங் கிகழ்ந்து, லழுந் துற மாய்த்து மநத்தினன் மநத்தை யறுத்துநின் னறிவினி னிற்பாய்,

டழுந்துருள் பொழுதின் முடியுமி தரிதோ வுலகமும் வானமு மொக்கு, முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பத்தான் முளைத்தவை யன்றிமுன் னிலதால்.'' (106) என்று, பின் அதனையே யுபசம்மாரத்தில் முடித்தலால் மனோநாசத்தி னுபாயத்தைக் கூறுதற்குத் தாருயன் கதையாய இக் கதையும் இவை போன்ற பற்பல கதைகளும் கூறப்பட்டிருக்கின் றனவே யன்றி, இவர் மத சித்தாந்தமாய முப் பொரு ணித்தியத்தைக் கூறுதற் கின்றாம். இராமபிரான் அடைந்த பிரஹ்ம ஞானத்தைக் கூறும் வாயிலாகப் பல விதிகாசங்கள் வாசிட்டத்திற் கூறப்பட்டிருக்கின்றன. இதனு லன்றோ, வாசிட்டமும் இன்னு ரன்ன பகவற் கீதை, கை வல்ய நவநீதம், விசார சாகரம், விருத்திப் பிரபாகரம், பஞ்ச தசி, வேதா ந்த சூடாமணி, விவேக சூடாமணீ, முதலிய பல நூல்களையும், வேதாந்தக் கொள்கை யுடையார் பல்லோ ராலுங் கொள்ளப்பட்டுக் கோவிலூர் மடா லயம் முதலிய வேதாந்த பாரம்பரையி னுபதேசிக்கப்பட்டு வருகின்றன. இதனையு முணராது சூரியனை யுள்ளங் கையின் மறைக்க நினைத்தது போன்று, வாசிட்டத்திற்குச் சைவ சாஸ்திர சம்பிரதாயப்படி முப் பொ ருள் நித்திய மென்று கொள்ளுமாறு கட்டளையிடுகின்றார். இவர்கட்டு அளையா மன்றிக் கட்டளை யாகாதாம். இவர் திருட்டாந்த தாட் டாந்தங்களைச் சமன் செய்பவ ராகலின், திருட்டாந்தத்தில், தண்டுலத்திற் றோலையுந் தாம்பிரத்திற் களிம்பையும் தொழிலா னீக்குவது போன்று, புரு டனும் மலத்தைக் கருமத்தா னீக்குவ னென்று, சமன் செய்து கொள்ளு வர். கொள்ளின், கருமத்தான் மோக்ஷ மென்றாகி, 'ஞானத்தால் மிருத்தியு வைக் கடக்கின்றான். மோக்ஷத்திற்கு வேறு வழி யில்லை' என்னும் ருக் வேத சுருதிக்கு விரோதமாம். ஆகலின், சாஸ்திரங்கட்குப் பொருளையுந், திருட்டாந்தங்களையும், ஆணவ வயப்பட்டு மனம் போனவாறு துவேஷத் தாற் கொள்ளாது, சாஸ்திர முறையாற் கொள்க.

9. "சைவ சித்தாந்திகள் முத்தியிலும் பாச முண் டென்று கொள்ளு கின்றார்களென இவர் கருதுகின்றார். அம் மட்டோ, சிவ ஞான வள்ள லார் தமது மதத்தின ரென்றுங் கருதுகின்றார்? என்றும், "வள்ளலார் சாஸ்திரம்-சிவ ஞானப் பிரகாச வெண்பா - 72, 73, 74, 75, 76, என்னும் ஐந்து செய்யுட்களை யறிவித்துச் சிவ ஞான வள்ளலார் சைவ சித்தாந்தி" யென்றும், 93, 94, 95 - வது - செய்யுட்களை யறிவித்து, அத்வைதம் சைவத்திற்கே யுரிய தென்றும், ஷெ நூல்-கர்ணாமிர்தம்-63-வது செய்யுளை யறிவித்து, "வேதாந்தத்தைத் தழுவியது சைவ சித்தாந்த மென்றும், சித் தாந்த சைவத்தின்படி, முத்தியி லுயி ருண்டு மல மில்லை. முத்தியில் மல மில்லா தொழியினும் வினைப் பெத்தர்க ளிடத்தி லிருத்தலால்,மலம் அநாதி நித்தியம் என்றற் கிழுக் கில்லை. பதி, பசுவுட னென்றும் பிரி வின்றி நிற்குமாறு போலப் பாசம் நில்லாமை பற்றியே, பாச மநித்திய மெனப் படும். இவ்வாறே, சிவ ஞான போத முதலிய சித்தாந்த சாஸ்திரங்கள் போதிக்கின்றன என்றும்'' கூறுகின்றார்.

முத்தியில் முப் பொருளுண் டென்றும், இரு பொருளுண் டென்றுங் கூறுகின்றவர்களையே சிவ ஞான வள்ளலார் பேய்ச் சைவ ரென்றும், பித்த ரெனுஞ் சைவ ரென்றுங் கூறியிருக்கின்றார். இவர் சிவ ஞான பாஷ்யத்தை யொரு புடை யொப்பியும் ஒரு புடை யொப்பாதும், கூறுகின்றவ ராதலின் இவ ரன்ன படலக்கார் முதலியோரையும் இலக்கியப்படுத்தாது, தென்மொழிச் சிவஞான பாஷ்யத்தையும் ஏனைப் பதினென்கு சாஸ்திரங்களையுங் கைக் கொள்ளுஞ் சைவரை நோக்கிக் கூறுவாம். சிவ ஞான பாஷ்யத்தின் 6-ம் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்தில் "அவரெல்லாருங் அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருள் ஒன் றென்பதேயா மெனக் கொண்டு, தத்தம் மதங்களோடு முரணாமைப் பொருட்டு, கேவல மென்றும், விசிட்ட மென்றும், மறுதலை யென்றும், அடை கூட்டி, யிடர்ப்பட்டுப் பொருள் கொள்வர். அவருள் மாயா வாதி கூறுங் கேவலமும், பேத வாதிகள் கூறும் மறுதலையும், சுருதிகளோடு முரணுதலின் ஈண்டைக் கேலாவாம். ஏனையோர் கூறும் விசிட்ட மென்பது பொருந்துமாயினும், அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொரு ளொன் றெனக் கோடல் பொருந்தாது. என்னை? ஒன் றென்பது பொருளாயின் ஒன் றெனவே விளங்கக் கூற வமையும். அவ்வா றின்றி அத்துவித மென வுய்த்துணர வைத்து ஓதவேண்டாமையானும், ஒன் றெனப் பொருள் கொள்ளின் மஹா வாக்கியப் பொருள் பயப்ப தோர் விசேட மின்மையின், அத்துவித மென்பதுபற்றி ஆண் டொரு பயன்படாமையானு மென்க. மற் றென்னையோ அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருளெனில், தத்துவமசி (அது நீ ஆகின்றாய்), அகம் பிரஹ்மாஸ்மி (அது நானாகின்றேன்) அயம் ஆத்மா பிரஹ்மம் (அது இது ஆகின்றது) என மூவிடம் பற்றி நிகழும் தத்துவ மசி முதலிய மகா வாக்கியங்களைக் கேட்ட வழி, அது என்பது ஒரு பொருள், நீ யென்பது ஒரு பொருள், ஆகலின் ஒரு பொருள் மற்றொரு பொருளா மாறு யாங்ஙனம் என்னும் ஐயம் நீக்குதற் கெழுந்ததாகலின், அது இது ஆதற் கேதுவாய், அவ் விரண்டற்கு முளதாய சம்பந்த விசேட முணர்த்துதலே, அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருளென் றுணர்ந்து கொள்க." என்றும், "இரு பொருளே அது அதுவா யொற்றுமைப்பட்டு ஒன்றாய் நிற்றற் கேதுவாகிய தாதான்மியம் அத்துவித மென்றும் வழங்கப் படும்." என்றும், சிவ ஞான சுவாமி கூறுகின்றமையின், சைவர்கள் முத்தியில் 'பதி பசு' என்னு மிரு பொருளும், இரண்டுள்ளு மடங்காத அத்துவித சம்பந்த மென்னும் பாசப் பொருளுமாய், முப் பொருள் நித்தியங் கூறுகின்றனர். கடாவிய நம் பிள்ளையாரோ, முத்தியில் உயி ருண்டு மல மில்லை யென்கின்றமையின், மலத்தின்பாற் பட்ட அத்துவித சம்பந்தமாய மலத்தினை நீக்கி முத்தியில், பதியும், பசுவும் என இரு பொரு ளுண் டென்று கூறுகின்றனர். இவ் விருவரையுமே சிவ ஞான வள்ளலார் பேய்ச் சைவ ரென்று கூறியதாம். சைவ சாஸ்திரங்கள் முத்தியிற் பசு, பதி, பாசம் என்னும் முப் பொருளும் நித்தியமாகக் கூறு

கின்றனவென்று யாண்டும் பிரசித்தமாயிருக்க, அதனை மறைத்து முத்தாத்மாக்களுக்கு மூல மலமாகிய அஞ்ஞானமும், அவற்றின் சத்திகளாகிய ஆணவ கார்மிக மாயிகமும் நாசமாகின்றன வென்றும், சைவ சாஸ்திரங்கள் முப்பொருள் கூறியதற் கபிப்பிராயம், பெத்த தசையின்கண், பெத்தாத்மாக்களுக்கு முப்பொருளுண் டென்றும், அதனால் சைவ சாஸ்திரங்கள் முப்பொருள் நித்தியங் கூறுகின்றதற்குத் தோஷ மில்லை யென்றும், ஒரு வித சமாதானங் கூறுகின்றார். இச் சமாதானத்தைச் சிவ ஞான வள்ளலாரைச் சந்தித்து அக்கால் கூறியிருப்பாராயின், 'பேச விரண்டுண்டோ பேய்ச் சைவா' என்று கூறியிருப்பர். சித்தாந்த சாஸ்திரங்கள் முத்தியில் முப்பொருளுண் டெனக் கூறுகின்றதென்று கூறுமிவர், சிவ ஞான வள்ளலார் செய்யுளைக் கண்டவுடன், முத்தியில் முப் பொருளுமிரு பொருளுங் கூறுவோ ரலர், ஒரு பொருளே கூறுகின்றோம், என்கின்றார். அவ்வாறு தென்மொழிச் சைவ சாஸ்திரக்கார ருடன்பாடாயின், முன்ன ரறிவித்த சிவ ஞான பாஷ்ய வாக்கியத்தில் முத்தியி லொரு பொருளைக் கொள்ளும் வேதாந்திகளைக் கண்டித்து முப் பொருளைச் சிவ ஞான சுவாமி நிலை நாட்டுவரா? சிவ ஞான வள்ளலார் வேதாந்தத்தினைச் சாத்திய மாகவும், சைவ சித்தாந்தத்தினைச் சாதன மாகவுங் கொண்டு விளங்கினார். விளங்கினா ராயினும், வேதாந்த சாஸ்திரங்கள் பந்த காலமாய வியவகார காலத்தில், ஜீவன், ஈசுவரன், அஞ்ஞானம் என மூன்று பொருளிருப்பது போன்றே, சைவ சாஸ்திரத்திலும், பெத்த தசையில், பதி பசு பாசம் என மூன்று பொருளைக் கூறுகின்றதென்றும், முத்தித் தசைக்கண், தனது சொரூபம் பிரஹ்ம ரூப மென்று கூறுவது போல், பசு, பதி ரூபமே யென்றும், பாசம் இன்றென்றும், கூறுகின்றதென்றும், கைக் கொண்டு வாழ்ந்தா ரென் றுணர்க. இவற்றினை யுணராது, 'அத்வைத மென்பது சைவத்திற்கே யுரியது' என்று வீணுரை வரைந்தார். அத்வைதம் என்பது சைவத்திற்கே யுரியதா மாயின், சுத்த விசிட்டாத்வைதம், விசிட்டாத்வைதம், அத்வைதம், என்னுஞ் சொற்களைக் கொள்ளு மதத்தர்கட்கு, அத்வைத மென்பது யாது? அத்வைதம் என்னுஞ் சொற்குப் பொருள் யாமிவ்வாறு கூறுகின்றோ மென்று கூறாது, சைவத்திற்கே யுரியது என்று கூறியது வழுவாம். "மும் முதலும் சோராமல் நிற்குமோ சொல்" என்று இவ் ரறிவித்த செய்யுள் கூறுவதனையு முணர்வாராக. "சைவ சித்தாந்த சாஸ்திரங்களே சிவ ஞான வள்ளலார் பயின்ற நூல்" என்கின்றார்.

## சிவ ஞான வள்ளலார் (சத்திய ஞான போதம்).

கொடிவிழி யன்ன கொள்கைய னாகி, யாசா பாசத் தார்ப்புண் டன்றே, தன்னைமுன் னீட்டித் தான்பின் னாகி, மறந்து நினைந்து மதிகத னாகி, யாகம் பேணி யறிவை மறந்தாங், கிச்சைப் புலிவா யிடர்ப்படு மூயிரே.

செயற்கை யியற்கை தெரிக்குங் காலை, செயற்கை யுயிர்க்குத் திரிமல மென்னில், வெண்மடிக் கழுக்கு விரவுந் தன்மை, போல நீங்கிப் புகுவன வதுவே.

சடத்திர ணீப்பத் தனித்திடு மான்மாச், சோகம் பாவனை தொக்கிய பின்றைக், கருடனை நினைப்பான் கடுக்கழன் றன்ன, வுபாதி நீங்கி யுணர் வா யினவே.

சிவனீ யானு யென்னுந் திகழ்வுஞ், சிவனு னேனெ னென்னுந் திறமுஞ், சிவனே யாவினு முளனெனுந் திருவுஞ், சிவனே காட்டித் தெளித் தன னெனக்கே.

அறிவா கானு னெனவறிந் துணர்தல், செறிபரப் பிரமம் யானெ னத்தேறல், அறைசிவ னருளி லடங்கா தடங்க, லுருவ தெரிசனஞ் சுத் தியு முயிர்க்கே.

கன்னன் கௌந்தி புத்திர கதைபோற், சீவன் சிவத்தாற் சீவ நீங்கி, மாசறு திங்கண் மண்டிலம் போன்றுங், கவாவிறந் தொளிரு மதிசயம் பெறுமே.

ஆலம் பன்னிவ னவனிரா லம்பன், சுதந்தர மிலியிவ னவன்சுதந் தரனே, சரீரி யிவனசரீரி யவனெனு, மலநீக் கந்தி லிவ்வழுக் கின்றே.

பூரண போதப் பொருடா னுகலி, னாரண மாகம மவர்க்கென் செய வே.

சூனிய பாச மாண்டழிச் சோதி, நானது வென்னு ஞானமு மின்றே.

ஐவகை ஞானத் தந்தர வான்மா, வாங்கவை பிறப்பி னதுபர மான்மா.

உன்னலு முரைத்தலு முறுதொழி லுருத்தலு, மாவிக் கிலையொழி யறிவொடு மாய்தலி, னைக்கை மாட்டென் றறைந்தனர் புலவர்.

சிதம்பர மாதலிற் சேர்விட மில்லை, யவனிவ னாதலி னணுகலு மில்லை, யறிவுரு வாதலி னிங்கையு மின்றே.

ஒன்றே யாதலி னுணர்பவ னின்று, நானது வாதலின் ஞானமு மின்றே.

கோறல் வெகுளல் குறைகோன் குணந்தன், றிருவரு ளில்லோன் செகுழக னையன், வழிபா டில்லோன் மந்த னிவர்க்கிங், கிந்நா லறையி னேழைக் குருவே.

மனாதிக ளொடுக்கி மறைமுடி வுணர்ந்து, வழிபடன் மந்திர கலையென மதியே.

அதிதிதன் மைந்த னலமரு காலைப், பிரம கீதையைப் பேசினனவனே, சிதாகா யத்திற் றிருவுருத் தாங்கி, மறலியை முனிந்த வாதனவனே, வான்முறை யுலகம் வயின்வயி னுதிக்க, நான்முகத் திருந்து நான்மறை யுரைத்தன், றுயநிட தத்தி லொளித்தவ னவனே, அவனே பிரம மென்றறி மன்னே.

மூலமென் றழைத்த மூனைக்கொம் பியானை, வருத்தந் தீர்ப்பான் வந்தவ னெவனோ, தூணிலு மிருப்பன் றுரும்பிலு மிருப்ப, னெனுமழ சொல்லுக் கெதிர்ந்தவ னெவனோ, துகிலுரி காலைத் துருவதன் மகட்கு, மாளாத் துகிலை வருத்தின னெவனோ, வருச்சுநற் காக வமரிடை யிருந் தாங், குணர்மெய்ஞ் ஞான முரைத்தவ னெவனோ,வவனே பிரம மென்றறி மன்னே.

கல்லா லின்கீழ்க் கடவு ளாகிப், பொல்லா ஞானம் புரிந்தவ னெவனோ, மால்வரை வில்லாய் வலியவர் புரங்க, ளீரெழ வொருக்கி நின்ற மூவ ரைச், சேவடி நீழலிற் சேர்த்தவ னெவனோ, காலனை மாட்டிக் கவின்சிறு பாலன், மாணந் தவிர்ப்பான் வந்தவ னெவனோ, அவனே பிரம மென்றறி மன்னே.

ஒருமல வழக்கு மிருவினைத் தொடரு, மும்மலச் செருக்கு நால்வகை வாக்கு, மைவகைப் பொறியு மறுவகைக் குற்றமு, மற்று லன்றி யறிவா காயே.

## பசு பதி பாச விளக்கம்.

பாச மைந்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி, நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப், பேசு மேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித், தூசு நீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம்.

துக்க சாகரத் துக்கொரு தோணியாய்ப், பக்கு வச்சுக னைப்பெறு பாக்கிய, தக்க வாந்ம தயாப ரானிய, மிக்க வேத வியாதனைப் போற்று வாம்.

பாவ மகலப் பரிகார விதத்தைப் பகருஞ் சிலநூல்க, ளாவ லோடு மறம்வளர வறங்கள் பகருஞ் சிலநூல்க, ளேவ மில்லா முத்தியினு மிரண் டே யென்னுஞ் சிலநூல்கள், சீவ பிரம வயிக்கியத்தைச் செய்யு மிந் நூற் சித்தாந்தம்.

புன்னூலாம் பரசமயப் பொய்நூலின் மயங்குவரோ, செந்நூலா மருமறையின் சிரத்தோளிரு முபநிடத, நன்னூலி னெறிநின்ற நயமுண ர்ந்த நாதாக்க, ளெந்நூலுங் கைவிட்டே யிந்நூலைப் பற்றுவார்.

மண்ணோடு மண்ணர் போனர் வளியொடு வளியார் போனர், தண் ணொடு தண்ணர் போனர் தழலொடு தழலார் போனர், விண்ணொடு விண் ணர் போனர் விளங்கரி வுருவாய் நின்ற, நுண்ணிய னானே யெங்கு நுழைந்திடா திருக்கின் றேனே.

செம்புயி ராகு மந்தச் செம்பினிற் களிம்பு பாசஞ், செம்பினிற் களி ம்பு போனற் செம்பொனு மாறு போல, நம்பனர் ஞானத் தாலே நானெ னும் மலம்போம் போனு, னம்பனு ராவ னென்று நான்மறை சொல்லு மன்றே.

மன்னையு மறந்து மிக்க வசுசா வடிவ மாகித், தன்னையு மறந்தி ருந்த தனயனைப் போன்று நீயு, மென்னையு மறந்தைம் போத வெயினர்தம் வடிவ மாகி, யுன்னையு மறந்தாய் நீயென் றுருவெலா வுணர்ந்து கொள்ளே.

மாசறப் படித்தா னேனு மயலறத் தெளிந்தா னேனு, மாசறத் துறந் தா னேனு மஞ்செழுத் துணர்ந்தா னேனு, மீசன்வே றியான்வே றென்னு மிருமையுங் கழலா னாகிற், பாசமுங் கழல்வ தின்றாம் பதிந்துவந் தானு மின்றே.

பாசத்தாற் பசுவெனப் பகரப் பட்டன, பாசந்தா னிரிந்தாற் பதியெ னப்படுங், காசத்தாற் குருடெனக் கழறப் பட்டன, காசந்தா னிரிந்தாக் கண்ணெ னப்படும்.

சிவனு மிந்த வான்மா வியற்கையைத் தெரிக்குங் காலைக், கேவலன் சுத்தன் சாந்தன் சூக்குமன் கிளர்சு நாதன், பாவமில் சர்வா னந்தன் பர ரருந் சர்வ சாக்கி, மேவுசிந் மாத்தி ரத்தன் மிகுசுக சொரூப னுமால்.

யாதா மொருவ னிவ்வண்ண மிலகு மாத்ம சொரூபத்தைப், பேத மாக வறியுமவன் பேசி னந்ம வபகாரி, யோது சோர னெலங்கப் பாவ முனுற்றப் படவில்லை, வேத மெல்லா முறையிடினுந் தெளியா னைய மே விட்டோர்.

புண்ணிய பூமியிற் பிறந்தும் பூசுரப், பண்ணவ னாகியு மூங்கை பாறி யுங், கண்ணிய குடும்பமாங் கடலை நீந்திடான், றிண்ணிய பிரமப காரி தேறிடே.

ஆகையா னுறு முயற்சியி னாலு மவிழ்ந்தபே ராதர வாலுங், கோகன கத்தா டருகுர வன்பாற் குறைவறு பத்தியி னாலும், மோகமே விளைக்கும் பிரகிரு தியின்றன் பாவனை முழுதையுந் தணந்திட், டேகமாஞ் சிவனே நானெனச் சிந்தித் திடவொழிந் திருந்திடத் தகுமால்.

யாவ னொருவன் றன்னிடத்தி லிருக்குஞ் சிவனை விட்டயலே, மேலி யிருக்குஞ் சிவனைநனி பூசிப் பவன்றன் வியன்கையிற், பாலி யிருக்கும் பாயசத்தை விட்டுக் கூன்கை பாந்தோடித், தூவுந் தாளியை நாறணியாற் றுய்க்கு மவனே சொல்லுங்கால்.

வானவர் தமக்கு நீங்கா மயறரு பேத வேறு, வானவஞ் ஞான ஞான வலியினாற் சிதைந்த பின்னர், தீனமார் சீவ னென்றுஞ் சிவனென்று மில் பேதத்தை, யீனமார் புந்தி யாலே யெவன்பண்ணப் படுவான் கொல்லோ.

ஆன்மா சுத்தன் சதாநித்த னழியா வின்பச் சுகசொருப, னான்மா செஞ்சொற் பிரகாச னஞ்ஞா னத்தா லசுத்தனைப்போ, லான்மா தோன்றப் படுகின்றா னருவ மாகி நிரவயமா, மாந்மா ஞானந் தானிகந்த னாகி விளங் கப் படுகின்றான்.

ஆன்மா நித்தன் சருவபரி பூரண னரிய கூடத்த, னான்மா தோட மிலியோக னாகி யிருந்தும் பிராந்தியினு, லான்மா பிந்நம் போற்றோன்றப்

படுவ னரிய ஞானத்தா, லான்மா பிந்நம் போற்றேன்றப் படானென் றறைந்தா னழலாடி.

எப்போ துதன்சொ ரூபமெ தார்த்தமா, யொப்ப நோக்கி யுலகங்க ளியாவையுங், கப்பு மாயா மயமெனக் காண்பனே, லப்போ தேயச் சுக வடி வாயினான்.

எப்போ துந்தனி லிடந்திற் சுருவமுந், தப்ப லின்றியே தான்சரு வத்தினு, நுட்ப ஞானநோக் காணேக் குவானெனி, லப்போ தேயப் பிரம மடைவனால்.

எப்போ தியாதாமொ ருவனுக் கிப்பவ, வெய்ப்பு லாம்பிணிக் கேக மூ லிக்கையாம், பெட்பின் மேலாம் பிரமஞா நம்பெறி, லப்பொழு திவ னே சிவ னாயினான்.

வேத மெய்ம்மொழி கண்டு விமலரா, யாதி யாந்ம நிலையறி ஞாநி யை, நோத கச்சொலித் தூடிக்கு நொய்யவ, ரேத மாநா குக்கிரை யாவரே.

நெல்லினுக் குமியுஞ் செம்பி னீடுகா ளிதமும் போலத், தொல்லை தொட் டின்று காறு முயிரிடைத் தொக்கி நிற்கும், வல்லியோர் பங்க னீசான் வடிவெடுத் தருளுங் காலம், புல்லுறு பனிபோற் பொன்றும் போதவா தவனெ ழுங்கால்.

இம்மல மூன்று லாவி யிருளடைந் தறிவு மாழ்கி, மும்மைகொள் புவ னந்தோறு முறைமுறை போகி மீளுஞ், செம்மலங் கருணை வள்ளற் றிரு வருட் டிரோதை மாறி, மம்மர்கொள் பாம்பு மிழ்ந்த மதியென விளங்கு மன்றே.

ஆக்கைக்குஞ் சாக்கி னுமே யனைத்திற்குஞ் சாக்கி னுமே, போக்கொடு வரவு மில்லை புண்ணிய பாவ மில்லை, வாக்கொடு மநமு மில்லை மந்திரந் தியாந மில்லை, சாக்கிமாத் திரமே யென்று தெளிந்தவன் சந்நியாசி.

நிறைந்த மாகடற் போலுயர் நெடுமறை முடியிற், சிறந்த போதமா வாக்கியச் சிரவணந் தாலே, யிறந்த சிந்தையி னுற்றனை யீச்சுர னாக, வறிந்த வன்சொலு மதிவர்ணாச் சிரமியா வானால்.

வருணமாச் சிரம மாகி மலிநதே கத்தின் கண்ணே, கருமலி மாயை தன்னாற் கற்பிக்கப் பட்ட வெல்லாம், பொருவரு போத னுமேற் கெப் போது மில்லை யென்றே, யருமறை யாலு ணர்ந்தோ னதிவர்ணாச் சிரமி யாவான்.

சொன்னத்திற் கடக மாதி சூழணி தோன்று மாபோ, லென்னிடத் தகில மெல்லாங் கற்பிக்கப் பட்ட தென்றே, பன்னுமா மறையந் தத் தாற் பகுத்தறிந் தநுப வித்திங், கந்நிய மிலாமை கண்டோ னதிவர்ணாச் சிரமி யாவான்.

ஆதித்தன் சந்நி தாநத் தகிலஞ்சேட் டிக்கு மாபோற், போதந்தேன் சந்நி தாநத்திற் புவநஞ்சேட் டிக்கு மென்றே, வேதத்தி னந்தத் தாலே

மெய்ப்பட வறிந்து ணர்ந்தோ, ருநித்த னிவனே யென்ன வறிவங்காச் சிரமி யாவான்.

இப்பியிற் பிராந்தி யாலே யிரசிதந் தோன்று மாபோல், மெய்ப்படு மேன்னி லிந்த வியன்சகு மூதித்ந தென்றே, யிப்படி யாவனேனு மெ ழின்மறை முடிவி னூலே, யற்புத வறிவு ணர்ந்தோ னறிவங்காச் சிரமி யாவான்.

இந்தஞா னத்தி னூற்றன் னஞ்ஞான மிறக்கு மத்தாற், றொங்குமாங் ஙவித வத்து தொலைந்திடுந் தொலைந்த வத்தாற், புந்திநா னசிக்கு மத்தாற் புகழிகழ் நசிக்கு மத்தா, னந்திடுங் குடும்ப மத்தா னுமேனுஞ் சொருபந் தோன்றும்.

பாம்பிதென் றுணர்ந்த போது பழுதையே யில்லை வெய்ய, பாம்பிதன் றெனவு ணர்ந்தாற் பழுதையே யானுற் போலச், சோம்புறு குடும்பி யென் னிற் றுகளுறு சீவ னுகுஞ், சோம்புறுக் குடும்பி யென்னிற் றுகளறு பிரம மாவான்.

கன்னனுன் புளிஞ னென்றே கவலையுற் றழுங்குங் காலைக், கன்னநீ கிராத னன்று கௌந்திபுத் திரனென் றூற்போ, லந்நிய வுடனு னென்றே யயர்ந்துள மழியேன் மைந்த, வந்நிய மென்று கண்ட வறிவுநீ யுணர் ந்து கொள்ளே.

கல்லெலா மெறிந்து மீதிக் கையினை யெறிவா ருண்டோ, சொல்லிய கருவி யெல்லாந் தொலைத்தவன் மீதி யன்றோ, வல்லநீ ரவனே சோதி யாகிய பிரம மாவா, னெல்லையின் மறைக ளெல்லா மிவ்வண முரைக்கு மன்றே.

ஒருவனொரு தேயத்திற் பிரமசாரி யாயுற்றான், மருவிமற்றோர் நாட் டகத்தின் மகிழ்கிரகி யாயினுன், பாவிபின்னோர் மண்டலத்திற் பகர்துறவி யாய் நடித்தான், விரவியகோ லம்போக்கின் வேறில்லை யவனிவனே.

பொன்னை யன்றிப் பூணில்லை பூணை யன்றிப் பொன்னில்லை, யென்னை யன்றிச் சிவனில்லை சிவனை யன்றி யானில்லை, யின்ன வண்ண மறிந்தோனே யீசன் றனையு மறிந்தோனு, மின்ன வண்ண மறியாதா னீ சன் றனையு மறியானே.

நிறையற்றி வாயி நுந்து நின்மலன் றன்னைத் தேடி, மறைமுத னூலா ராய்ந்தும் பின்னரு மயங்குந் நன்மை, யிறைவனே யெனக்கு நாக்குண் டில்லையோ வென்று கேட்க, வறைவது நாக்கே யென்ன வகந்தெளி யானைப் போலும்.

என்று மிருந்த படியிருக்கு மியல்பே யென்னு மொருவேத, மொன் றே யொழிய விரண்டாம்வந் தில்லை யென்னு மொருவேதம், வென்றிப் பரமு நீயும்வே றில்லை யென்னு மொருவேதந், நன்று மதுவே நீயானு யென்றே சொல்லு மொருவேதம்.

கேவலச் சகலன் மூன்றுட் கேள்பகை யிரண்டு மின்றி, மேவிய சுத்த மென்னு மெல்லணை மீதி ருந்து, சாவுயர் பிறப்பு மில்லாத் தத்துவச் செங்கோ லோச்சிப், பாவனை யிலாத கானம் படர்ந்துரு மாறி னனே.

அறுவகைச் சமயத் தோர்க்கு மதிதமா யகள மாகி, மறுவறு பொரு ளா யொன்றாய் மன்பதை தொறுநி றைந்து, குறைவறு பிரம நாமே யென்றுகோ சங்க னீங்கி, யறிவுரு வாகி நிற்ற லழகிய யோக மாமே.

உடலெரு முயிரு மாகி யுயிர்தொறு முணர்வு மாகிச், சடமச டங்க டோறுஞ் சாக்கியு மாகி நின்ற, வடல்புனை சிவனூர் நம்மை யன்றிவே றில்லை யென்றே, யுடைகுட விசும்பு போலொன் றாதலே யோக மாமே.

இந்திய மாத்மா வென்ப ரிறைவநின் திருநோக் கில்லார், முந்திய பிராணன் றன்னை யுயிரென மொழியா நிற்பர், சிந்தையை மாவ கத்தைப் புந்தியைச் சீவ னென்பர், சந்துறு மிவைகட் கெல்லாஞ் சாக்கிநா னென்று கண்டேன்.

பிண்டமா முடலு னல்லேன் பிராணவா யுவுநா னல்லேன், கண்ட வைம் பொறியு மல்லேன் காரணமோர் நான்கு மல்லேன், பண்டைய வறிவ ருனென் றுன்னருள் கொண்டு பார்க்கி, லெண்டிசை கீழ்மே லெங்கு மேகனு யிருக்கின் றேனே.

காயனை யகாய னுக்கிக் கண்டனை யகண்ட னுக்கிப், பேயனைப் பிரம மாக்கிப் பிறப்பிறப் பிலாமை யாக்கித், தாயினு மினிய னுகி வந்தெனைத் தகைந்தாட் கொண்ட, தூயசற் குரவ நின்னைத் தொழுந்தொறுங் களிது ளங்கும்.

பாசத்தாற் பாசி யாகிப் பலபல பிறப்பிற் சென்று, பாசத்தாற் பிறந்தி றந்து பலபல போகந் துய்த்த, பாசத்தைத் தாளாற் போக்கிப் பதித்துவம் பதித்த நாதன், பாசத்தை நினையுந் தோறும் பசுத்துவங் கழலு மன்றே.

எல்லாருங் களிதுளங்க விருப்பையிரும் பொன்னுக்கி, நல்லார்க டொழுந்தேவாய் நாட்டுகின்ற ஞாயம்போற், கல்லாத புலையேனைக் கருணை யினுற் கடைக்கணித்துப், பொல்லாத பரப்பிரம மாக்கினையென் போல் வந்தே.

## சித்தாந்த தரிசனம்.

திருமூலர் மாலையெனுந் தெப்பத்தைப் பற்றிக், கருவேலை யைக்கடப் போங் காண்.

திருநோக்கான் மூலமலந் தீயும் பரிசத்தா, லிருண்மாயைக் கூட்ட மிரியும்.

திருமொழியாம் கன்மமலஞ் சிந்துந்தி யாநத்தாற், பெருமாயை போ யொழியும் பின்.

சைதந் நியவுருநா னென்று நமநீங்கல், சைதந் நியனுருவந் தான்.

எனைவிட வேறில்லை யியானே பரப்பிரம, மௌனவுணர்த றற்றெரிச நம்.

அந்தச் சிவநம்மை யன்றியிலை யென்றோர்ந், துந்தஞ் சிவயோக மோர்.

ஆமயத்தை நீங்கி நிராமயத்தை யாதரிக்கி, குமயம்போ நீயேய வன்.

புத்திக்குச் சாக்கியாம் போதமய வாந்மா, புத்திசட மாதலினுற் பொய்.

சீவனத்தாற் சீவனெனல் சீவமிறந் தாலிந்தச், சீவனே யந்தச் சிவம்.

ஊனை யொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர், நானே பிரம மௌன நாடு.

சொப்பனமுஞ் சாக்கிரமுநீ தொலையொத்த காலத்துச், சுப்பிரம மென்றுநீ சொல்.

## உபதேச மாலை.

சீவபர மிரண்டுந் தேருமிடத் தேகமென்று, மேவியசின் முத்திரை கொள் மென்கரத்தா-லோவில், வழக்கறுத்தான் பல்சமய வாதிகளை கான மின், மழுக்காத்தி லேந்தியவெம் மான்.

பாசத்தை விட்டாற் பசுவோ பதியோமா, ஞேசற் றவர்வணங்கு மைய னே - யோசித்துச், சொல்வா யருட்குருவே சுத்தபரி பூரணனே, யெல்லா மாய் நின்றவனே யின்று.

பாசத்தி னுலுனக்குப் பாசியெனும் பேர்வந்த, நாசற்ற மாறு வனை யக்கே - ணேசித், தருமறையி னுலு மநுபவத்தி னுலும், பிரமமென்று மீசனென்றும் பேர்.

தீக்கையினு லுன்னைச் சிவமாக்கி னேமதன்றி, யாக்கைசீ சிவமடிமை மாக்கினே - நோக்கியே, நானேநீ யென்று நவின்றமுப தேசித்தோர், மேமேனு மயக்கமெ ழும்.

என்று பிறந்தேனு னென்று வளர்ந்தேனு, னென்று தாயருற் றிறந் தேனு - னென்று, மழியாத சிந்துருநா னென்பே மகிழ்தல், கழுவாத நின்றரிச நம்.

நானே சிவன்சிவனே நானென்று நாடிவெறுங், தானுகி நின்றநிலை தானன்றோ - வானுப், பவசலதி நீந்திவரும் பண்புடைய மானு, சிவ யோக மென்றே தெளி.

உன்னை யொருவ னுயர்சாமி யென்றுரைத்தா, லென்ன மகிழ்ச்சி யங்கே யெய்திநுய் - பின்னொருவன், பாவி பசுவென்றாற் பதைபதைப் பா யாகையினுற், சீவனல்ல நீயோ சிவம்.

விழலாம் விலாமிச்சி வேட்டுவனுக் கீட, மழலா மயப்பா மாலி - தொ ழிலா, லவமா முவகி லவதரித்த மானு, சிவமாதற் கையமென்ன செப்பு.

ஈசனுனக் கெஞ்ஞான்று மிதசத் துருவென்னும், வாசகத்தைச் சொல் லக்கேண் மாணவக - வீசன்முன், தத்துவத்தி லாக்கித் தவத்தில் வளர்த் துன்னைத், முத்தியினிற் சங்கரிப்பான் முன்.

சிவமல்ல நாமென்றுஞ் சீவனு மென்றும், விவகாரம் வந்தவிட மெல் லாம் - துவமகலச், சாம மறையுநலுஞ் சத்தியமா வாக்கியத்தைத், தோமற வுட் கொண்டு துணி.

ஆதிமறை யாகமங்க ளெல்லா மளவிட்டே, யோதி யுணர்ந்தெல்லா முரைத்தாலும் - வேதை, யெழுநான்கு கோடி யிழிநிரைய மெல்லாம், விழுவர் சிவனுகா விடின்.

மாதாபி தாநாத்தி மற்றொக்க லுநாத்தி, யாதார வைப்பு மாண்மனையுந் - நீதான, நாத்தியிவை மெய்யென்று நம்பாதே யென்றறைந்த, மாத்திரத் தே வீடுற்றான் மன்.

தாயரையுந் தந்தையையுந் தற்சார்ந்த கேளிரையு, மாயு மயல்காட்டு மனைவியையுஞ் - சீயென்று, சோற்பநம் போற் கண்டெட்டாத் தூரப் போ யோகநிலை, நிற்பவனே ஞானியென நேர்.

எண்ணுஞ் சிவயோக மான்மியத்தை யென்சொல்கேன், மண்ணுல கும் விண்ணுலகும் வந்திறைஞ்சி - யண்ணுவென், றேலமிடு நீசிவமா யோரிமைப்பு நிற்பையெனிற், காலனுங்கை கூப்பிநிற்பன் காண்.

ஓவா பவக்கடலுக் கோரம்பி யாகலான், மாவாக்கி யம்புகல்வேன் மைந்தாகேள் - மூவாத, தற்பதநான் றொம்பதநீ சாற்றசியா னென்னு, முப்பொருளுங் கண்டு முடி.

அறிவுநா மென்றறிய மாட்டாதா ரன்றே, வெறிகாற் புனலருந்தி யென்றும் - தறிபோலு, நிட்டையுடன் மட்டாய் நெடுங்கால நின்றார்க, ணட்டமலா லுண்டோ நயம்.

சுகன்வாம தேவன் றுருவாசன் காதி, மகன்விதுரன் வெண்காடன் மாறன் — சகமாண்ட, பத்ரகிரி வான்மீகி பற்றற்றே முத்தியினை, யுற்றாரு ரார்க்கிவரொப் பார்.

அன்னா றுவரைக் கரச னலகிறந்த, வண்ணமுலைப் போக மகிழ்ந் துண்டு - மெண்ணெனின், மூகிக்குழுவின் முன்னே முழுப்பிரமங் காட்டி, மநக்கவலை தீரவகுத் தான்.

பாசங் கடந்து பதியான பண்ணவர்க, ளாசங் கடத்தி லலைந்தாலு - மீசன், றலையோட்டி லேயிரந்துந் தன்மைகுறைந் தானோ, மலைகோட்டி முப்புரமட் டான்.

## சிவ ஞாநப் பிரகாச வெண்பா.

பாலொடு சேர்ந்தநீர் பாலாகு மாங்கதுபோல், வாலறிவ னைச்சேர்ந்த மன்னுயிர்கள் - வாலறிவன், றானாகி நிற்பதல்லாற் றண்டாத வைம்பாச, வானாகி நில்லாது வந்து.

ஆயிழையைக் காமுற்றே யாலிங்க னஞ்செய்தே, ஞாயிழையே தானனை வாதாரம்போன் - மாயையையவிட், டையனொடு சேர்ந்தபினு மாங்கிரண்டெண் டேயென்று, துய்யநெறி யில்லையுவர் து.

அரசன் மகனரச னாகின்றாற் போலப், பரமசிவ னற்றோன்றும் பல்லுயிரும் - பரம, சிவனாகி நிற்பதலாற் சீவனாய் நில்லா, சிவனுணை யுள்ளே தெளி.

ஆசானை நீநானென் றங்கைத் தலைவைத்தான், பாசா திகளொந்தும் பாறித்தே - யாசானை, யுள்ளபடி நோக்கி யுறுபூசை செய்வதல்லாற், கள்ளனிடத் துண்டோகைம் மாறு.

நீயேநா னென்று நிலையளித்த தேசிகனைத், தூய மலமொடுத்துத் தூவாதார் - போய்வாழுங், காட்டிற் களிதுய்க்குங் கருங்குரங்காய்ச் சென்னுயாய், வேட்டுவனுய்ச் சென்மிப்பார் மேல்.

ஆக்கையு நீயல்ல வைம்பொறியு நீயல்ல, தாக்கு கரணங்க டானல்ல - வுருக்க, வுடலல்ல நீனல்ல வுண்மைநீ யென்றார்க், குடலுருகி நிற்பேனு வந்து.

கறுத்த விரும்பைக் கனகமய மாக்குதல்போற், சிறுத்தாமைப் பேருருவாய்ச் செய்தாரை-வறுத்த, வித்தைபோல் வரும்பிறப்பை வேரறுத்த வேதியரைப், புதைமரத்து ளெப்போதும் போல்.

அறிந்தவிடத் தில்லை யறியாமை யத்தைப், பிறிந்தபினும் பேசல் பிழையன்றோ - செறிந்த, சுடர்கொண் டிருட்டேடித் துயருறுவா ருண்டோ, மடமகமன்ற மானுக்கனே.

பாவனா தீதப் பதியேறிப் பின்னுநாந், சீவனென்றுஞ் சிந்திப்பா நுண்டோசொல்—சிவ,மகன்றபுழுப் பின்புழுநா னென்றறைநு துண்டோ, சுகமறிந்த துண்டோ சுகம்.

ஊனுறங்கி யானுத வுள்ள முறங்கியொரு, நானுறங்கி ஞால முறங்கியுமே—தானுறங்காச், சிவனை யறிந்தவனைச் சீவனென லாமோ, சிவகுருநா தாவிதனைச் செப்பு.

## ஞாந விளக்கம்.

ஆகாயந் தேடி யலைவோருக் காகாய, மாகாயத் துட்காட்டன் மானுமே-யேகபரி, பூரணத்தைத் தேடிப் புலம்புவோ னுக்காசான், பூரணனீ யென்று புகறல்.

ஆறாறு தத்துவத்துக் கப்பா லதீதத்தே, வேறாகத் தம்மை விசாரித்துங்-கூறாக, வாநந்தநீ நாமென் றறியா வறிவிலிக, ளாநந்தந் தேடியலையும்.

தத்துவத்துக் கப்பாலே தன்னைத் தரிசித்து, நித்தபரி பூரணத்தி னில்லாமல்-சுத்த, பணிமாயை யாற்செய் பதுமையினைத் தேடு, மணிமா னிடமிருக நாடு.

ஊழா லுடம்புண் டெம்பால் வினையுண்டு, தாழும் வினையாற் சக முண்டு-காழ்கொண்ட, வித்துமுளை யும்போல வியா தொருகாலு, முத்தி யிலே வீயுமு னை.

நினைப்பு மறப்புமிந்த நீடுலகு மித்தை, யனைத்தும்போ லீச னவே ர்-உணற்கரிய, கன்னனுக்கு வேடு கழித்தகதை போலுனக்கு, மந்நியமே வேடென் றறி.

நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி, நல்லறிவு பெற்று டைய நன்மாணு-நல்ல, சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தை கலங்காதே, சிவமென்ற நீயேசி வம்.

நானே பரமசிவ னானே பரப்பிரமம், நானே யுலகுயிர்த்த நாதன்-நானேயோ, கண்டதுவுங் காணாது யென்றிவணங் கண்ணாரக், கண்டவனே சீவன்முத்தன் காண்.

மலமில்லை மாசில்லை மானாபி மானங், குலமில்லை யென்னறிவின் கூற்றிற்-கலக, மலமுண்டு மாசுண்டு மானாபி மானங், குலமுண்டு திரிசியங் கூற்றில்.

## அத்துவிதக் கலி வெண்பா.

அறுவகையாற் போக்கினே மானமையா னீயே, பிறிவில் பிரமமெ னப் பேணி-மறுபிறப்பை.

ஈசன்வே றியான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை, நீசரெனக் கண்டு நினையென்று-னாசையொடும்.

வேத முடிவறிந்த வேதியரைக் கூடென்றான், பேதமில்லை யெல்லாம் பிரியென்றான்.

## அதி ரகசியம்.

வானே முதலாம் பூதங்க ளல்லை கரண வகுப்பல்லை, யானுப் பொறியு மைம்புலனு மல்லை யறியு மறிவல்லை, யூனு ருடம்பின் வயத்தாலே யுள்ளந் தளரே லொன்றாய, நானே நீயென் றருள்செய்த ஞான குருவை வணங்கு வாம்.

ஆல யந்தொழு வறந்தலை நிரப்புநல் லருச்சனை புரியென்றே, யோல மிட்டுநான் மறையெலா முரைப்பது வுலகரைக் குறித்தன்றோ, மூல காரண பரம்பரஞ் சூக்கமாய் முழுதையுங் காணென்றுஞ், சீல முற்றிய வறி ஞரைக் குறித்துரை செய்ததம் மறையன்றே.

தந்தைதா யிவரோ வென்றான் றரகம் பிரம மென்றான், பைந்தொடி யாசை யாலே பாகதி யிழந்தே னென்றான், புந்தியார் போந்த போக்குப் பொறுக்கிலே னென்றா னந்தோ, வெந்துயர்க் கடலில் வீழ்ந்தே னெனை வுளம் வெருவி னானல்.

ஈதுமெய் யீதுபொய்ம்மை யெனும்வந்த விவேக மெய்திப், பூதலத் தாசை மேலைப் புவநத்திலாசை போக்கிச், சாதுநற் சமமே யாகி சற்குண நரனாய் மீளா, மோதுவெங் கலியை மாய்ப்பான் முத்தியில் விருப்ப முற் றான்.

கண்டான் குருவைக் கண்ணுறாக் கதறி வீழ்ந்தான் கமல மிசை, யண்டா வானே நெடுமாலே யயனே யென்று னகமகிழ்ந்தான், றொண்டா வியலும் பணிசெய்யத் துணிந்தான் பணிந்தான் மும்முறையே, பண்டா னிறைந்த பாவாலும் காவா யென்னைப் பாடினான்.

பஞ்ச பூத நீயல்லை பஞ்ச கோச நீயல்லை, விஞ்சு கரண நீயல்லை விகுதி பகுதி நீயல்லை, துஞ்சு சீவ னீயல்லை தோன்று பாரு நீயல்லை, வெஞ் சிற் சிறிது மையுறே னீயே யந்தப் பரமசிவம்.

ஆக மேவடி வாகிய சீடனை, யோகனீயென் றியம்பது மெம்பிரான், மோக வாரியின் மூழ்கிய பாவியே, னேக னாகுவ தெய்வனை மெங்ஙனே.

என்றி யம்பிய வேழையை நோக்கியே, நன்னெற னகைத் தானெங்க ளையகன், றென்று தொட்டுறும் வாதனைச் சோம்பினு, லன்று நீயப் பரம்பொரு ளாகுவாய்.

நாலு வேதமு மோது நலத்தினை, யேல வோதியு மேழைகட் கென்செயப், பாலு நெய்யும் பறையனுக் கென்செயத், தோலு மென்புந் தரிசு மொழியவே.

சமய மேபர மென்னுஞ் சமர்த்தராய்ச், சமய சாத்திரங் காட்டுஞ் சழக்கர்காள், சமய மென்னுஞ் சத்தார்த்த முணர்கிலீர், சமய மென்பது தன்னை யறிதலே.

கற்புடை மகளி ரெல்லாங் கணவனே தெய்வ மென்பர், சிற்பொலி சமய வேடர் சிலையையே தெய்வ மென்பர், நற்கொலி மாந்த ரெல்லாந் தாருவே தெய்வ மென்ப, ரற்புறு பெரியோ ரெல்லா மறிவையே தெய்வ மென்பர்.

நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையுஞ், சத்திய மிந்த வுலகெனல் கருவி தணந்திடா துடலோ னென்னல், சுத்தபோதத் தாவு நானென்ன றுயிருங் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்துநா னேகன் சிவனெனல் சிதடர்பா லறிவே.

காசி வாஞ்சியங் காளத்தி கழுக்குன்றங் காஞ்சி, மாசி லாருறைப் பருப்பதங் கோகன்ன மறைக்கா, டேசி லாதுறை மூர்த்திதந் தெரிசன மெல்லாந், தேசி கன்றிருந் தேவையை நீக்குமோ செப்பில்.

ஆகையா னானே யெல்லாப் பொருள்கட்கு மறிவாய் நின்றே, தேகமா திகளுக் கப்பாற் சிதம்பர வடிவ மாகி, யேகனா யநாதி முத்த னாயெனில் வேறொன் றின்றிப், போகமோ கங்க ளின்றிப் பூரண வறிவா னேனே,

அறிவென்னு முதல்வேத மகமென்னு மிரண்டாமோத், தறிவதுநீ யாளுமென் றலைறயுமன் றும்வேதஞ், செறியிந்த வாக்மாலே சிவமென்னு மதர்வண்ணஞ், செறிநுநால் வாக்கியத்தின் சித்தாந்த மறிந்தேனே.

தானேநீ நானே யசலமையான் ஞானகுரு, வானவனே கைம்மாறும் வழிபாடுந் தோத்திரமு, மீனமிலாப் பூசனையு மியற்றுவான் றனைக்காணே, னூனுமில்லை யுயிருமில்லை யுனையன்றி யொன்றுமில்லை.

எல்லாநா னென்றுணராக் காலத்தி லிடர்ப்பட்டே, னெல்லாநா னென்றுணர்ந்த காலத்தி லின்புற்றே, னெல்லாநா னேயன்றிங் கெனையெடுத்து விழுங்கினு, மெல்லாநீ யென்றுணரு மெண்ணமும்போய் மாண்டதே.

ஒன்றென்று சொல்வதற்கு முறையில்லை நாவில்லை, யன்றிதா மென்பதற்கு மறிவில்லை செயலில்லை, சென்றொடுங்கு மாறில்லை சோதிற் பதுமில்லை, நன்றுமில்லை தீதுமில்லை நானுமில்லை நீயுமில்லை.

திரண்டொழுகும் பேராற்றிற் சிறுவூற்றுக் குழிதேடிப், புரண்டுபுரண் டழுவார்க்குப் புத்தியெவர் போதிப்பா, ரிரண்டிறந்த வானந்த மெழுந்தபின ரறுசமய, முரண்டருசிற் றூற்றுண்டோ முழுஞான மூர்த்தியே.

## சிவாகமக் கச்சி மாலை.

அறிவா யிருந்தறி யாமையை நோக்கி னஃதொழியுஞ், செறியும் பரிபூ ரணவுருத் தானெனிற் றேகமறு, மறிகரு மங்கட்குச் சாக்ஷி யுயிரெனின் மாளுமது, பிறியா நிலையிது வென்றான் பெருங்கச்சி யேகம்பனே.

விருப்பு வெறுப்பற் றுன்வேத மொழிப்படி மெய்யுணர்ந்து, மரிப்பைச் சனிப்பையு மற்றொளி யாகிய மாதவர்பாற், கருப்புச் சிலையனுங் காலனும் வந்தென் செயக்கடவர், நெருப்பைப் புழுப்பற்றுங் கொல்லோ நெடுங் கச்சி யேகம்பனே.

அஞ்ஞான நீக்கத்தி லாருயி ரேசிவ மானமையான், மெய்ஞ்ஞானி யென்பதெவர்க்குஞ் சரியொக்கும் வேறென் றுன்னிப், பொய்ஞ்ஞானம் பேசும் புருடர்க்குன் பாதப் புணைகிடையா, வெஞ்ஞான் றவர்க்கருள் செய்குவை யோகச்சி யேகம்பனே.

வேறென்று பேசுவ தெல்லாம் விவேகமி லாமையன்றே, கூறொன் றிலாமறை கூறுஞ் சிவனுநச் சீவனென்றுந், தேறு முமையுருத் தேகமென் றும்மிதைத் தேறுவரோ, வீறின் மலவயப் பட்டோ ரெழிற்கச்சி யேகம்பனே.

சிருட்டிக்கு முன்னுயி ரெல்லாஞ் சிவமெனச் செப்புமறை, சிருட்டிக் குப் பின்னுயிர் வேறுபட் டான்சிறு சீவனென்றே, சிருட்டியை நீக்கிச் சிவோகமென் பாவனை சேர்தலுஞ், சிருட்டிக்கு முன்சிவ மாகுவர் றிகழ் கச்சி யேகம்பனே.

## கர்நாமிர்தம்.

பாவமு மறமு மொத்துப் பக்குவம் பருவ முற்றிங், காவியைம் புலனைப் பற்று தகமுக மாகி யென்று, மோவியம் போன்றிட் டங்க ணுணருணை ராமையோக்கிற், சீவனுஞ் சிவனும் வேறோ திருப்புலி வனத்து ளானே.

எல்லாவண் டமுமியானே யாவருமேன் சொருபமே, கல்லார்போல் லார்நானே நன்மையொடு தீமையுநா, னுல்லாச பரமுத்தி யொன்றொழிய விரண்டில்லை, கல்லார்க்கிப் பொருடெரியா கண்ணிலர்க்குக் கதிருண்டோ.

ஒலியாகிப் பரிசமா யுருவாகி யிரதமாய்ச், சலியாத கந்தமாய்த் தாரணியாய்ப் புனலனலாய், மலிவாயு வானமாய் மதியிரவி யியமானு, யலியாகி யாணுகிப் பெண்ணுகி யமர்கின்றேன்.

சாவதுவும் பிறப்பதுவுந் தனுவன்றோ வஃதறிகி, சாவதுவும் பிறப்பதுவுந் தாமென்றே யுரைதருவார், போவதுவும் வருவதுவும் புரியட்ட சரீரமே, போவதிலை வருவதிலை போதமயப் பொருணுமே.

தன்னை யறிந்தோர் தபோதனரே தன்னை யறியார் தபோதனரோ, முன்னை வினையின் முடிபறியார் முதன்மைப் பிரமந் தானென்றே, சொன்ன மறையின் பொருளறியார் துறந்துந் துறவார் சுபமுத்தி, பிந்நமென்றே பிதற்றுவா ரென்னே யுலகின் பேதமே.

வான்முத லுலகமெல்லா மந்திடை யாக்க வல்ல, நான்முகப் பிரமன் றன்னை நவில்சுக முநிவ னேக்கி, மோநவத் துவிதச் சொற்கு மொழிபொரு ளிரண்டோ வொன்றே, ஞானசற் குரவ சொல்வா யென்றுள நைந்து கேட்டான்.

ஏகமேவாத் துவிதம்பிர மோகமென் றிசைப்பத், தாகமொடுஞ் சுக முநிவன் சந்தேகத் தடைநீங்கி, யாகமெனுஞ் சிறையுலவா தாஙந்தச் சிறையாகி, யேகமே யத்துவிதம் பிரமநா மெனத்தெளிந்தான்.

அத்துவிதந் துவிதமில்லா தெனவரிய மறை யேக, மத்துவித மிதற்கைய மிலையென்றே யறைந்தாலும், பொய்த்துவித மயக்கொழியார் பூருவவா தனையாலே, யத்துவித மொழிபொருடா னந்நியமாய்த் தெளிவரால்.

ஒன்றாகிப் பரவெளியா யுருவருவ மிலதாகிக், குன்றாத பரப்பிரமந் துகையிருக்கு மதைவிளக்கி, னன்றாரு மிதயதுகை நாமதுவே யையமிலை, கன்றாத நின்மொழியான் மெய்ஞ்ஞானங் கடைப்பிடித்தேன்.

ஊனாடி யுயிர்நாடி யுண்ணாடிப் புறநாடி, வானாடி வளிநாடி மண்ணாடி நீர்நாடித், தீநாடி நாதவிந்து செங்கதிரோன் றனைநாடி, நானாடிப் பார்ப்பளவி னனேயப் பரப்பிரமம்.

பல்கலையா லாகமத்தாற் பகர்கீதை பதினெட்டா, னல்வினையாற் கருமத்தா னுன்மறையான் ஞானத்தாற், சொல்லூகத் தான் மறையாத் துணிவாலிற் றுறந்தோரா, னல்லோரா னுன்பார்க்கி னனேயப் பரப்பிரமம்.

ஒருகாலந் தோன்றினே னொருகாலம் வளர்கின்றே, னொருகாலஞ் சாம்பினே னென்றுரைக்கு முணர்விலிக, ளொருகாலம் பிறந்ததிலை யொருகாலம் வளர்ந்ததிலை, யொருகால மிறிந்ததிலை நானேயவ் வுயர்பிரமம்.

நான்மனித னென்றுநா னவிலுறுதே வனுமன்று, நானிராக் கதனன்று நலியசுர னனன்று, நான்முநிவ னன்றுநாக னன்முகனு நானன்று, நான் றிருமா லன்றானு மன்றரிய பிரமநான்.

முன்னவரு நானல்ல முடிமன்னர் நானல்ல, அன்றுவசி யருமல்ல சூத்திரரு நானல்ல, வன்னியரு நானல்ல வன்னியரு நானல்ல, பிங்கமொடு பிறப்பிறப்பு மில்லாத பிரமநான்.

நான்பிரம மெனுஞான ஞானிகள்பா லுளவாகு, மூன்பிரமை யொழியார நார்க் கொருக்காலுந் தோன்றாவா, மான்வயிற்றி னரிதார மருவுமன்றி வாரகவயிற், றான்பிறக்கக் கண்டாரு முண்டோபோய்க் கலியுகத்தும்.

ஆதலா லகம்பிரம மெனுஞ்சுருதி யகங்தெளிக்கு, மோதிருன் முகப் பிரமன் புண்டரிகத் தாள்வணங்கி, யோதொரு மகிழ்ச்சியொடு முலாவினு னுலகமெலாஞ், சோதியிவன் றனென்னத் தறங்கசுக முழியம்மா.

பக்குவர்க்காய்க் கல்லாலின் பாங்கெழுந்த தெய்வமே, தக்கவிராட் டிருவுருவாய்த் தமியேன்றன் விண்ணப்ப, முக்குறும்புங் கடந்தவிட முழுத் துரிய நிலையென்று, லக்குறும்பைக் கடப்பவன்யா ரவனேயப் பரப்பிர மம்.

காரணகா ரியங்கடந்த கரீப்பிரம நாமென்றே, யாரணநூற் புகன்ற படி யநுபவிப்பா யருந்தவனே, காரியமேழ் காரணமேழ் கழறினுபா திக ளாகுங், காரியமுன் பாலுடைத்துக் காரணமங் கடவுடன்பால்.

தேகமொடு பொறிகரணஞ் செறியுயிரோ டேழன்பா, ராகினுயி ருபாதியிதா லகிலேச னுபாதிசொலிற், சோகமிலாச் சருவசிட்டி முதற்சரு வாங் கிரியாமி, பாகமுறுஞ் சுகமுநிவ கடையேழும் பரிந்தறியே.

இன்னணமா யுயிரானைக் கடந்தேறி யிறையானைப், பன்னுமறை யின்படியே கடந்திடிற்பைங் கிளிப்பெயரோய், சொன்னபரப் பிரமமய நீ யாயே தோன்றுமா, லந்நியமா யொருபொருளுந் தோன்றாவே யநுப வத்தே.

தேகமலேன் பொறியல்லேன் செறிகரண நானல்லேன், மூகபிரா ணனுமல்லேன் முழுப்பிரம நானென்னச், சோகமெனப் பாவிக்கிற் சுகமுநிவ வுயிர்த்தடைபோம், மாகமுறு மதிபோல விளங்குமுன் றன் மதிதானே.

பாவனையெ லாமிறந்தாற் பாழன்றே பரமேட்டி, பாவனையெ லாமிருந் தாற் படுசகமன் றேவிரண்டு, மோவியதே நின்னிலைய முபாதியறு சுகி யமா, யோவியம்போ னிருவிகற்ப வுணர்வாய்நில் சுகமுநிவ.

அறிகின்றே னறிவில்லே னெனுநிலையுங் கடந்தநிலம், பிறிவரிய சுவாநுபவா நிதம்பர மோகமென, மறுவின்மறை கூறுமா வாக்கியத்தைக் கடைப்பிடிக்கி, னறிகின்ற வநுபவமு மநுபவமன் றாமன்றே.

உன்றந்தை யுரைத்ததுவு முயர்முநிவ னுரைத்ததுவு, மன்றல்கமழ் கமலனுரை வாக்கியமு மகதேவ, ரன்றுரைத்த வாக்கியமும் யானுரைத்த வரும்பொருளு, மொன்றேயா மையமிலை யுனையன்றி வேறில்லை.

பெறுபவன்யார் பேறியாது பேசென்றான் சுகமுனிவ, னறிபவன்போ யாநந்தத் தநுகூல மானபினர்ச், செறிபிரம மொன்றேழிய விரண்டில் லாத் திறத்ததேல், பெறுபவன்யார் பேறியாது பேசென்றான் பெருஞ்ஜநகன்.

காண்பவன்யார் காண்பனயார் கழறென்றான் சுகமுனிவன், சேண்பயினு மொளிக்கொளியாய்ச் சித்தாகிப் பரவான்மா, தான்பிரகா சித்தபினர்ந் தானேதா னைமையாற், காண்பவனயார் கான்பனயார் கழறென்றான் கனஜநகன்.

பூசனையார் பூசகன்யார் புகலென்றான் சுகமுனிவ, னைசையெலா நிராசையா யாநந்த முங்கடந்த, வீசனு னீச னிரண்டற்ற வெல்லையிலே, பூசனையார் பூச்கன்யார் புகலென்றான் புகழ்ச்சநகன்.

தோத்திரியார் தோத்திரம்யார் சொல்லென்றான் சுகமுனிவ, னர்த்த மொடு மநவாக்குக் கதீதத்தே யளவிறந்த, சேத்திரத்திற் சிவமாகித் திறம்பாத நிலையத்திற், ரோத்திரியார் தோத்திரம்யார் சொல்லென்றான் றுறைச்சநகன்.

முத்தியுண்டோ பெத்தமுண்டோ மொழியென்றான் சுகமுனிவன், சித்தமல மிறந்தரிய சிற்பரையைங் கடந்துபோ, யெத்திசையு மெப்பொருளும் யாமாகி நின்றிடத்தின், முத்தியுண்டோ பெத்தமுண்டோ மொழியென்றான் முதிர்ச்சநகன்.

முன்பண்ணிய விருவாதனை முதிர்தேசிகன் விழியாலுகும், பின்பண்ணிய விருவாதனைப் பிரமாற்பணத் தாலேகெடு, மன்பொன்றிய நாமச்சுந னென்கின்றமே ராநந்தமேற், றன்பங்களா ரின்பங்களார் சுகயோகியே சுகயோகியே.

ஐயமெனும் புறங்காட்டை யட்டேனின் னருண்மொழியால், வையகத்தி னின்போன்ற மாதவரா ரெனவாழ்த்த, வுய்யுநெறி யுணர்ந்தேனே யுன்வரவெற் கிடைக்குமோ, செய்தவத்தா லுன்பாதத் தெரிசனையான் பெற்றேனே.

வாழ்த்திடவும் வாயில்லை வணங்கிடவுஞ் சிரமில்லை, சூழ்த்திடவு மலரில்லை தொழுதிடவுங் கையில்லை, யேத்திடவும் பாவில்லை யெதிர்ந்திடவோ ரிறையில்லைப், பார்த்தவிடந் தொறுமியானே யெனையானே பணிகின்றேன்.

பண்டைமறை மொழிப்படியே பரமபத மினிதுணர்ந்து, தண்டுதவில் வியாதமுனி மங்குவியத் தானினைப்பக், கண்டையொத்த மங்குவித்துக் கனகவரை மீதடைந்தங், கண்டரெலா மறியாத மத்துவித வீடுற்றான்.

மாறுத வாசையெலா மநமாரத் துறந்துபோ, யேறுத முத்திமலையினிதேறி யிச்சுகந்நைந், நீறுங்கி நினையர்ம னித்தியா நந்தமுற்றான், நேறுவென் யோகியெலார் திருமலையுந் தெரிவையர்க்கே.

காற்றிலா விளக்கொளியோ கண்ணாடி மண்டிலமோ, நீற்றொளியோ சார்க்கால நிறைமதியோ நிறைவானோ, தேற்றுறுபூங் கங்கையோ திரையற்ற பாற்கடலோ, வாற்றரிய தவனோற்ற சுகமுநிவ னகமம்மா.

ஆங்கவனை நினைதொறுமென் னகங்கார மடுக்கழியும், பூங்கமலத் திருத்தாளை யுள்குதொறும் புகலுளவாம், நீங்கறுமன் னவன்காதை செவிபுகவென் றீமையுகும், பாங்குடையோன் றறவெணக்கும் பதியுமோ பாரிடத்தே.

சிந்தனை வெண்பா.

தேறினோர் சித்தத் திருந்தார் சிவனென்றால், வேறு படுத்துவதேன் வீணே – மாறுபட்டுப், பேசாதே யெல்லாம் பிரமமென்னும் வேதாந்த, மாசையற்று நீயே யது.

சிவன் வேறு சீவன்வே றென்றிரண்டாய்ச் செப்பு, மவர்சிவனை யென்றுமறி யாதான் - றவமில்லா, வுள்ளத்தார்க் கெய்துமோ ஆர்க்குருவி யாகாச, மெள்ளப் பறந்தறியு மே.

அதுவேநீ யாமென் றருமறைகள் சொல்லும், எதிர்சிவனே நீயானே யென்னு - முதுசைவம், வேறேவே றன்றேசொல் வேதியனே விண்விசும்பும், வேறேவே றன்றே விளம்பு.

தானே பரமானாற் றத்துவசா லத்திலே, யேனோ பிறந்திறந்தே னித்தனைநாள் - மானேகேள், நீபிறந்த தில்லையுண்மை நெஞ்சுபுல னும்பொறியு, நீபிறந்தாற் போனிச்ச யம்.

நானே சிவமல்லாற் றனிச்சிவம்வே றில்லையென்ற, மோக மொழியொன்றின் முடிபறியா - யோகிதொறுஞ், சென்றுபிறந் தெய்த்தேன் சிவாயசிவ வென்செய்கே, னென்றுகடைத் தேறுவே னியான்.

நிராமய வந்தாதி.

மெய்யைப் பொய்யென்றான் வெளியைநல்ல வீடென்றான், சைவத் துரைகாழிச் சம்பந்தன் - ஐயமற, நின்போதம் போமிடத்தே நீயே சிவமென்றா, னென்போதத் துள்ளே யிருந்து.

இருந்த படியிருந்தா லிறையுருவந் தோன்றும், பொருந்தாமல மிம்மையிலே போனா - லிருந்தபடி, யேதென் றறங் குன்னி யிரண்டாட்டு வார்க்குண்டோ, போதமுண்ட பிள்ளை புகல்.

உற்றுணரி னீயே யுயர்சிவம மென்பதுவு, மற்ற சிவன் றானாய் வருப் பதுவு - முற்று, மிறந்தவிடத் திரண்டு மேகமே யென்றான், சிறந்த சீ காழிவரு தே.

அறு பத்து நாலு சங்கை சமாதானங்கள்.

‘பாச பத்ததே ஜீவ:, பாசமுத்ததே சதாசிவ:’ ‘ஆத்மாவுக்குள்ளே சிவமுஞ், சிவத்திற்குள்ளே ஆத்மாவுஞ், சமவாய சம்பந்தமாயிருக்கு மென்று ஆகமங்கள் சொல்ல’ ‘அறிவுஞ் சிவமு மொன்று, அல்ல வென்கின்றவன்

வாயில் மண்ணு' என்கின்ற உலக வசநமே சாக்ஷி. 'அறிவென் றறியாத வாணவமே ஞாநச், செறிவாய வென்னைநீ தீண்டற்க—வறிவாய, வென்னைச் சிவமாக்கி.'' 'ஒளியை யிருள் மறைக்குமோ' 'சந்திராதித்தர்களை, இராகு கேது மறைக்கிறது போலும், நெருப்பை ஈரம் மறைக்கிறது போலும், ஆகாசத்தை மலை மறைக்கிறது போலும்' ஆனால், இந்த மறைப்புத் தான் வருவானேன், நீ பண்ணின கன்மத்தால். நான் அவயவம் இன்றி நிரவயவமா யிருக்கக் கன்மத்தை எப்படிச் செய்தேன்? நிரவயவன் நா னென்பதை மறந்து, அவயவம் நா னென்னுங் கருத்தாற் கன்மம் வந்தது. அந்தக் கன்மத்தால் மாயை யுண்டாயிற்று. இந்த மாயையால் சர்வ பதார்த்தமும் உண்டாயின. இது போமாறு, சிற் றறிவாகிய நீ, பேரறிவாய் நின்றாற் பசு பாசம் இல்லை.

அறிவுரு வாய வென்னை யாணவ மனாதி கூடிப், பிறிவறி யாதநின்னைப் பிரித்துத்தான் முழுது மாகி, நெறியினை மறைத்துப் பொல்லா நீசருக் கடிமை யாக்கிச், செறியிரு ணின்ற தென்னே திருப்புலி வனத் துளானே.

ஆத்மாஒன் றென்று வேதாந்தஞ் சொல்ல-விஞ்ஞாநகலர், பிரளயாகலர் சகல ரென்று அநேகமாக ஆகமஞ் சொல்வானேன்? வேத வழி சென்றவன் ஆகம வழியிற் செல்லான், வடக்கே போகின்றவனுக்குக் காவேரி தெரியுமோ? அப்படிப் போல், 'முத்தி பலவும் பகர்ந்தோம் பக்குவத்துக் கிடாய்.' 'வேதம் வேதாந்தம் வேத்தியம் வேத மகாவாக்கியம் வேதாந்த மகாவாக்கிய விசாரம், வேத்தியப் பிரஹ்மம். இப்படி வேத பண்டிதர்கள் வெகுமுகமாகச் சொல்ல, ஆகம வாக்கியமே பிரதாந மென்று முற்சொல்லிய வேதத்தை நிந்திப்பானேன்? தத்துவமசி, சிவத்துவமசிக்கும் அது நீயானாய்-சிவம் நீயானாய்-என்று அர்த்தம், ஏகமே, ஆத்துமாவே சிவமென்பது சித்தாந்த மானால் சிவ மென்றும், பிரஹ்ம மென்றும், அரிகரப் பிரமாதி யென்றும் பலவாய் வருவானேன்? உபாசியர்கள் உபாசனையால் வேறு வேறாயின.'

'காவேரி யொன்று கால்வாய் நூற்றெட்டு, மண்ணொன்று பாண்டம் வரும்பல வாகி, விண்ணொன்று ஆகாயம் வேறு வேறாகு, மாவியு மிவ்வண மாய்ந்துகொள் வீரே' என்று வசந மிருக்கிற படியினாலே சங்கை யில்லை, இந்த ஆத்மாவை விடச் சிவ மில்லையோ? விலாங்கு சம்பந்தம் போல உண்டு. அஃதெப்படி (ஆமடி கெட்டேனே-பாம்படி-யல்லடி கெட்டேனே) என்பது போல, வெகு முகத்திற் சீவனையும், அகமுகத்திற் சிவனையுந் தோற்றும். இந்த வித்தை நா னெங்குங் கண்டதில்லை யென்னில், வேத வீதியிலே போனாற் காணலாம். ஆத்மா சுதந்தர போதனா அசுதந்தர போதனா வென்னில், ஆகமம் முத்தியில் சுதந்தர போத னென்று சொல்லும்; வேதம் பெத்தம் முத்தி யிரண்டிலுஞ் சுதந்தர போத னென்று சொல்லும். ஆனால் சுபாவ சித்தாந்தமே தென்னில், அநுபவத்திற் காண்க. ஆணவ மலத்துக்கு அநேக சத்தியும் சிவனுக்கு இரண்டு சத்தியுமாயின் ஆணவ முயர்ந்து சிவந்

தாழுமே யென்னில் சிவந் தானு யறிகின்ற சத்தி யொன்று, சருவாத்மாக்க ளுக்கும் அறிவிக்கின்ற குண சத்தி யொன்று. இந்த ஆணவமாதிய பஞ்ச பாசங்களும், நித்திய மென்று சிவாகமஞ் சொல்லு மெனில் கூடாது. எப்படி? ஒரு வேதம் பஞ்ச பாசங்களும் அநித்திய மென்று சொல்லிற்று. பின்னொரு வேதம் கானற் சலம் போலத் தோற்றரவு மாத்திரமே யென்று சொல்லிற்று. பின்னொரு வேதம், ககனாரவிந்தம் - வந்தியா புத்ரன் சச விஷாணம் போல அநுபவத்தில் பஞ்ச பாசம் இல்லை யென்று சொல்லிற்று. நாலாம் வேதம் மாயையே யில்லை; இருக்கின்ற தெல்லாம் பிரஹ்மமே யென்று சொல்லிற்று. அட்டாவக்கிரர் தன்றாய்வயிற்றிலிருந்து கொண்டு தகப்பனை நோக்கி எல்லாம் மாயை யென்கின்றவாய், எல்லாம் பிரஹ்ம மென்று சொல்லாதோ வென்று திருவுளம் பற்றினபடியாலும், பஞ்ச பாசங்களு மில்லை யென்பதே சித்தாந்தம். மலம் அறிவை மறைக்குமோ? மநத்தை மறைக்குமோ? மநதைத்தான் மறைக்கும் அறிவை மறைக்குமென்று வசநமிருப்பானேன். மநமும் அறிவின் சம்பந்தமானபடியினால் அங்ஙனஞ் சொல்வாரு முளர். கண் ஜடம், நான் சித்து, கண்ணைக் கொண்டறிகிறது மநம். மநதிற்குச் சாக்ஷி நான். கண்ணும், விடயமும், மநமும், மாயை; நான் அறிவு; என் பெயர் ஆத்மா. செவி ஜடம், நான் சித்து; செவியைக் கொண்டறிகின்றது மநம்; மநதுக்குச் சாக்ஷி நான்; செவியும் விடயமும் மநமும் தூலம்; நான் சூக்குமம்; என் பெயர் ஆத்மா. தொக்கு நானல்ல-ஜடம்; நான் சித்து; தொக்கால் பரிசத்தைத் யறிகின்றது மநம்; மநதுக்குச்சாக்ஷிநான்; இவை யெல்லா மிறந்தாலும் நானிறவாதபடியினாலே நான் சின்மாத்திரன். கிராணம் நானல்ல, ஜடம்; நான் சித்து; கிராணத்தைக் கொண்டு கந்தத்தை யறிகின்றது மநது, மநதுக்குச் சாக்ஷி நான், சிவம் வேறு நான் வேறல்ல. கிராணமும் கந்தமும் மநதும் அழிய நானழியாமல் பாசத்தைப் பின்னிட்டபடியால் நான் சிதாநந்த ரூபன். நாக்கு நானல்ல; நான் சித்து; நாக்கு ஜடம், நாக்கைக் கொண்டு ருசியை யறிகின்றது மநம்; மநதுக்குச் சாக்ஷி நான். ஜிஹ்வையும் ருசியும், மநமும் அழிய நான் அழியாதபடியால் நான் நித்தியாநந்தன். பிராணவாயுவும் நானல்ல; பிராணன் ஜடம்; நான் சித்து; பிராணனைக்கொண்டறிகின்றது ஆத்மா; அந்த ஆத்மாவே நான். ஆணவம் இருள், மாயை விளக்கு, கன்மம் கருக்கனோ வெள்ளியோ வென்னு மயக்க அறிவு, கண்-ஆத்மா, சூரியன் சிவம், பகல் சகலம், இரா கேவலம்; இப்படி அநாதி தொட்டு இன்றளவும் வரும். சற்குரு ஞானந் தீக்ஷையால் சகல கேவலம் அறும்; அறவே ஞான சூரியன் உதயமாம். ஆகவே ஆணவ விருள் - நாசத்தை யடையும்; அடையவே, மாயை விளக்கவியும்; அவியவே - ஐயந் திரிபு அறும்; அதனால் ஆத்மா சுவாநுபவத்தைப் பெறும். சிவத்தைவிட ஆத்மா வென்று நாமம் வருவானேன், சிருட்டியால். ஆனால் சிருட்டிக்கு முன் சீவ ராசி யில்லையோ? இல்லை யென்றே வேதஞ் சொல்லும். ஆகமம் உண்டென்று சொல்லுகின்றதே, அது பூருவ காண்டத்திற் சொல்லும்; உத்தர காண்டத்தில் வேதஞ் சொன்னபடியே சொல்லும். சீவ பேத மெல்லாஞ் சிவ மென்று திவ்வியாகமஞ் சொல்லும். அதற்கு முன்னே

வேதஞ் சொல்லும்; சந்திரனிடத்திலே யிருக்கின்ற களங்கத்தைமுய லென்றும் மா னென்றும் ஆல விருக்ஷ மென்றும் பூமிச் சாயை யென்றும் பல வாய்ச் சொல்லுவ தன்றிப் பிரத்தியக்ஷமே பிடிபடாமல் மயங்கு மென்னில் அநாதியிலே விளைந்த விருத்தாந்தம், நீ சிவமாய் நின்றுற் றெரியு மன்றிச் சீவனாய் நின்று பார்க்கு மளவுந் தோன்று தென்பதே சித்தாந்தம். ஒரு குளவியாற் கீடத்துக்குக் கீடத்துவம் போய்க் குளவி சிந்தனை முற்ற முற்றக் குளவியான தன்மையும், ஒரு பாடாணஞ் சிற்பனால் வேதாங்கப்படி செய்யத் தெய்வமான தன்மையும், ஒரு விழல் ஆறு அமாவாசி பறித்துப் பறித்து நட விலாமிச்சியான தன்மையும் போல சீவன் தீக்கையாலுஞ், சிவ ஞானத்தாலும் சிவ மாவன். சீவன் முத்தர்கள் உலகத்தோடு கூடியுங் கூடாமல் எப்படி யிருப்பார்? தாமரை யிலையுந் தண்ணீருஞ், சேறும் பிள்ளைப் பூச்சியும், புளியம் பழம் ஓடும் போலும் நிற்பர். சிவ ஞானியைப் பிராரத்தம் வாதிக்குமோ வாதி யாதோ? வெகு முகத்தில் வாதிக்கும்; அக முகத்தில் வாதியாது. அக முகமானால் வெகு முகம் வருமோ? அது தான் பிராரத்த வாசனை. இந்த வாசனை கிருஷ்ணர், சீராமர், சுகர், வாமதேவர், நந்தி, பிருங்கி, வதிட்டர், வாங்மீகி, இவர்க ளிடத்திலுங் காண்க

சிவ யோகிகள் சிவாலய தரிசநங், குரு தரிசநஞ், சங்கம தரிசநஞ் செய்வாரோ? ஜீவனே ஆலயமாகவும், சிவமே குருவாகவும், அறிவே சிஷ்யனாகவும் தரிசிப்பர்: தான் சிவாகாரமாவதே சங்கமமாகவுந் தரிசிப்பர்; சிவாலயமாகவுந் தரிசிப்பர். கடைசாரஞ் சீவாத்மாவே பரமாத்மா, பரமாத்மாவே சிவமானாற் சைவ சித்தாந்தம் ஒப்புக் கொள்ளுமோ? பூருவ காண்டத்திற்குத் தள்ளுபடி, உத்தர கண்டத்திற்குச் சம்மதம்.

## தச வழக்குச் சிந்தனை.

ஆனால் மித்தை யென்றால் ஆகம சித்தாந்தம் என்னமாய் முடியும்? மல சத்தி யிறந்தும், மலம் அப்பிரகாசமா யிருக்கு மென்றதுஞ் சரியோ? என் தகப்பன் செத்துத்தெய்வமா யிருக்கின்றானென்றும், வீம னெறிந்த யானை ஆகாயத்திலே தோற்றி ஒன்றொன்றாய் விழு மின்றைக்கு மென்றும், இந்த மரத்திலே பே யிருந்தது, இப்போது சிறிது காலமா யிறந்திருக்கின்றதென்றும், கலியுக அந்தத்திலே கற்கோழி கூவு மென்றும், பொய் வழக்குப் பல விதம்; இது போ லாமென் றறிவாய். இருள் போன பிறகு இருட் டுண்டென்னில் சொல்லள வன்றிப் பொரு ளில்லை. உண்டோ வென்னில் உனக்குண் டெனக் கில்லை என்பதே சித்தாந்தம். 'அறிந்த விடத்தில்லை யறியாமை தன்னைப், பிறிந்தபினும் பேசல் பிழை யன்றோ.' நா மார் என்னும் ஞானமே சமயாதீத ஞானம். இந்த ஞானத்தால் சுகர் வாமதேவர் வதிட்டாதி கபில ரீறாய விருடிகளும், சம்பந்தர் முதல் மாணிக்க வாசக ரீறாய மகத்துக்களும் முத்தி யடைந்தார்கள். தெய்வ மென்பது பொது. தெய்வத்தை யார் கண்டவர். கைலாயம் பொன்னனயில் வட்டஞ் ஸ்ரீரங்கம் திருப்பாற் கடல் செகந்நாதம் இவை ஒரு

காலந் தோன்று மொரு கால மழியும்; ஒரு தெய்வம் ஒரு தெய்வமாகியும்
போயும் வரும். ஆனாற் றெய்வ நிச்சய மில்லையோ வென்னில், தெய்வ நிச்
சயம் தெய்வம் அறியாதவனுக்கு. நாமே சித்து, சிதானந்தன், திவ்விய சொ
ரூப னென்று கண்டவன் எந்தத் தெய்வத்தை வணங்குவான்? எந்தத் தெய்
வத்தையும் வணங்கான்? ஆகையாற் சிறு பிள்ளைகள் தெய்வங்களைக் கொண்
டாடுதல் போல, அறி வில்லாப் பெரிய பிள்ளைகளுந் தெய்வத்தை யாரா
தனை பண்ணுவார்க ளென்ற றறி 'தானே சிவ மல்லாற் றனிச்சிவம் வே
றில்லை' யென்னுந் திரு வாக்கே எறு கடைசி ஆகம சித்தாந்தம்.

## குரு மரபு சிந்தனை.

அநாதியே ஆணவ சம்பந்தம், இயற்கைச் சம்பந்தம் அன்று; செயற்
கைச் சம்பந்தமே. சீவ னுண்டான போதே சீவத்வ முண்டாயிற்று. ஊரு
ண்டான போதே புலைச் சேரி யுண்டானாற் போலும். சமுத்திர முண்டான
போதே நீ ருண்டானாற் போலும். செம் புண்டான போதே களிம் புண்
டானாற் போலும். மேக முண்டான போதே மழை யுண்டானாற் போ
லும். இப்படி ஆயிர முவமை யுண்டு. சீவனுஞ் சிவனுவன் சாக்ஷி.
'திசையாருஞ் செம்பிரதக் குளிகையிற்பொன் னதுபோற் சீவனுமெய்ஞ்
ஞானத்தாற் சிவத்துவத்தைப் பெறுமே'. சீவனுக்கு மல மாயை கன்ம மூன்
றும் அநாதி யியற்கை யன்று, அநாதி செயற்கை யென்றே சித்தாந்தம்.
செம்புக்குக் காளிதமும். நெல்லுக் குமியும் அநாதி செயற்கை யெனக்
கொள்க. "திஷ்டே பூர்வ மாத்மா யேகமேவ" ஜீவன் முத்தன் புசித்த
தெல்லாஞ் சிவன் புசித்த தென்று வேதாகமங்கள் பிரத்தியக்ஷமாய்ச்
சொல்லுகின்றதே யென்னிற், பத்தி காண்டத்திற் சொல்லும்.

## அநுபவ சந்திரிகை.

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம் நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।
நிர்மோஹத்வே நிஶ்சலதத்வம் நிஶ்சலதத்வே ஜீவன்முக்தி: ॥

என்னு மொழுங்கு வந்த காலத்தில் கன்ம மொழியும். ஒழியவே,
மகா வாக்கியத்தில் விசுவாசம் வரும். சந்தானத்திலே விருப்ப மில்லாதவ
னுக்குத் தாரத்தின் மேலே விருப்ப மில்லாதது போலும், வேத விருப்பற்ற
வனுக்கு வேத வாக்கிய விருப் பெங்ஙனம் வரும்?

[illegible]
[illegible] ॥

மகா வாக்கிய மறிந்தவனே ஞானி, மற்றைய மந்திரங்க ளறிந்தவன் ஞானி
யன்றோ வென்னில், "சத்த கோடி மகா மந்திரஞ் சித்த விப்பிரம கார
ணம்" என்றமையால், அந்த ஞானி ஞானி யன் றென்பதே சித்தாந்தம். இஃ
தன்றிப் பஞ்சாக்ஷரம், பிரணவம் அசபை முத்தி நெறி யல்லவோ வென்
னில், முத்தி பலவும் பகர்ந்தோம் பக்குவத்துக் கீடாய். "ஒருவசன மாகவே

முடிந்தபொரு ளுரைத்தோ மொன்றாகக் காண்பதுவே காக்ஷி யின்னும் பலவாய்ப், பெருவசன மாகப் பலபடக்கேட் டாலும் பின்னுநாம் நிகழ்த்து வது மிந்தவுப தேசம், குருவசனஞ் சமுதாயம் பலபொருளும் விளக்கும் தடு மாறு தேகமாய்த் தானேதா னாகி, நிருவசன மாய்ஞான மோனமொன்று மின்றி யில்லாத நிலையன்றி நின்றநிலை நிலையே" மகா வாக்கியத்தில் அபிபதத்துக்காக வந்தது அத்வைதம். அத்வைதம் அவிதக் கலப் பென்பாரு முளர்.

## திருமுகப் பாசுரம்.

ஒன்றே பரமதுநீ யுற்றுணரி லென்று, நானேநீ நீநானே யென் றுனக்கு நாம விண்டோம், மறைப் பெல்லா நீங்கின விடமும் மறைப்பு நீங்க வே யீசுரன் வேறல்ல நாமே யீசுர னென்னும் பேரானந்தம் அபரிமித மாய்ப் பெருகும். நிர்ச்சஞ்சலமான வாத்மாவே சர்வ வுபாதி சூநியமான பராபரவத்து. 'நாற்றமிகும் பூமாலை நற்குரங்கின் கைகொடுத்தாற், போற்றி மணங் கொள்ளாவாம் புத்திதனக் கில்லாமை, வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைத், தேற்றமிலி கைக்கொடுத்தேன் றேறுவனோ தேறானே".

## மர பட்டவணை.

'அஞ்ஞானத்துக்குச் சாக்ஷிபூதம் நாமென் றறியின் அஞ்ஞானமு மில்லை, நல்வினை தீவினையாகிய விலங்கு மில்லை, அதற்கு முன்னே நாக சொர்க் கமு மில்லை'.

என்பன வாதிச் செய்யுட்களில் வேதத்தையும், வேதாந்தத்தினையும், வேதாந்தப் பெரியார்களையும், புகழ்ந்து கொண்டாடியும், வேதாந்த சாஸ் திர சித்தாந்தம் முத்தியில் ஒரு பொருளே யுண் டென்பதென்றும், அஃதே தமக்கு உடன்பா டென்றும், பாசம், மலம், ஆணவம், அஞ்ஞானம், பிரபஞ் சம் என்பன முத்தியில் அத்தியந்தாபாவ மடைகின்றன வென்றும், ஆகம சித்தாந்தமும் முத்தியில் ஒரு பொருளே யுள்ளது என்று கூறுகின்றதென் றும், அதற்கு முரண் கூறுவோரைப் பழித்தும், மும்மூர்த்திகளைச் சமப் படுத்தியும், ஜநக ராஜாவைப் பிரஹ்ம ஞாநி யென்றும், தென்மொழிச் சிவ ஞானபோதத்திற்கு விரோதமாய் ஆத்மாவே சிவம் என்றும் முத்தியிற் கலத் தல் கூடா தென்றும், பாச மிருக்கின்ற தென்பது முயற் கோடு போலச் சொல் லளவே யென்றும், அதிகாரி பேதத்தாற் பத்தி செய்யும் மந்தர்கட் குப் பாச முண் டென்று பத்திகாண்டம் சொல்லிற் றென்றும், சைவர்கள் நிந்திக்கும் விஷ்ணுவையும், விஷ்ணு பக்தர்களையும் புகழ்ந்தும், இன்னும் பலவாறு பற்பல விஷயங்களைக் கூறியிருப்பவும் அதனை யுணராது, 'சைவ சித்தாந்தமே யவர் கொள்கை' யெனத் தேற் றேகாரங் கொடுத்துக் கூறி னர். இதுகாறும் யாங் காட்டிய அவரது செய்யுட்களால், அவர் சாத்திய மாய அத்வைதக் கொள்கை யென்னும் வேதாந்தக் கொள்கையை யுடை யோ ரென்று நிலை நாட்டப்பட்டமையின், கேவல சைவ சித்தாந்தி யென்

று சிவ ஞான வள்ளலாரைக் கொள்ளா தொழிவாராக. சிவ ஞான போத பாஷ்யத்தில் முத்தித் தசையிலும், பெத்த தசையிலும் இருப் பொருள் நித்திய மென்று, யாங் காட்டிய வாக்கியங்கள் அறிவிக்கின்றமையின், "இவ்வாறே சிவ ஞான போத முதலிய சித்தாந்த சாஸ்திரங்கள் போதிக்கின்றன" வென்று, முத்தி தசையில் இரு பொருள் நித்தியங் கூறினமையின், 'அவ சித்தாந்தம்' என்னுந் தோல்வித் தானத்தை யடைந்தனர். முன்னர் பூர்வ பக்கத்தில் 'மல சத்திக்குக் கேடின்று, மல சத்தியின் கேட்டினால் மலத்தி னின்றும்' என் றுள்ள வாக்கியங்களால், சத்திக்குக் கேடே யன்றி மலத் திற்குக் கேடின் றென்றும், ஈண்டு 'முத்தியி லுயிருக்கண்டு மல மில்லை' யென்ற வாக்கியத்தால், மலத்திற்கு நாச முண் டென்றுங் கூறுகின்றமை யின், 'மாறு கொளக் கூறல்' என்னுங் குற்ற முடையவ ராயினர்.

10. 'இறப் பிலா இந்த மோகம், என்ற ஞான வாசிட்டச் செய்யுளுக்கு இவரும் இவர் சார்பினரும் என்ன பொருள் கொள்கின்றனர்" என்கின் றார்.

"நல்லது சிறுவர் புரியை நாணது, சொல்லுவன் கேட்டி தூயர்செய் மோகநீ, வெல்லலா மோகந்தான் சுகத்தின் வேறன்றி, மல்லல்வா னிறம் படைத் தென்ன வந்துறும்"

[illegible] ।
[illegible] ॥ 5

[illegible] ।

"இறப்பிலா விந்த மோக மிறையுமிங் கெண்ண லின்றி, மறப்பதே நல்ல தென்று மதித்துயர் மனத்தி னுக்குத், திறப்படக் காணப் பட்ட தில் லெனச்சித்தி னுலே, யுறப்பெறு மெய்ம்மை தம்மை துயர்பா சுகம தாமே".

[illegible] ॥ 6

[illegible] ।
[illegible] ॥ 7

என்னும் செய்யுளி லுள்ள, 'இறப்பிலா மோகம்' என்றதற்கு நித்திய மென்று பொருள் கொண்டு, வேதாந்திகள் 'மோகத்தை நித் திய மென்று கொள்ளுகின்றார்களா? இன்றே' என்று வினவுகின்றார். மாயை, அஞ்ஞானம் என்னுங் காரணத்தையே நித்திய மென்று கொள்ளாத வேதாந்திகள், அந்தக்காரணத்தின் காரியமான மோகத்தினை நித்திய மென் று கொள்வர்களா? "நல்லது" என்னுஞ் செய்யுளுக் குள்ள சுலோகத்தின் கண் 'சம்மோகம்' என்னும் பதத்தை, மொழி பெயர்ப் பாசிரியர் எது கைத் தொடை நோக்கி யறுவித்தனர். அல்லது, 'அமரணம்' என் னும் சொல்லுக்கு விசேடமாக 'இறப் பிலா மோகம்' என மொழி பெயர்த்

தனவொன் றுணர்க. 'நித்தியம் போலுங் காணப்படும் இந்தச் சகத்தை' என்பது அதன் பொருளாம். வடநூல் வியாக்கியாநத்தின் பொருள் 'நித்திய விஸ்மரணத்தை' யென்பதாம். இது போன்றே, படலக்காரரும் இந்நூலில் 'ஈனமில்சைவ வாகமர்க்கு' என்னுஞ் சொல்லை யெடுத்துக் கூறித், தமக்கு அநுகூலம் வேதாந்தத்தி லிருப்பதாகச் சாதிக்க நினைத்துப் பன் முறை யெழுதி, மூலத் தின்றென்று கண்டநமிறுக்கப் பெற்ற பின் பேசாது மௌந முற்றனர். இவரும் அவர் போன்றே தென் மொழி மாத்திரம் ஒரு சிறிது கற்றவ ராகலின், மொழி பெயர்ப்பாசிரியர் எதுகைத் தொடை மோனைத் தொடை நோக்கிக் கொடுத்த அடைப்பதங்க ளெல்லாவற்றையும், தமக்கு ஒப்புயர் வற்ற பெரியதோ ராதார மெனக் கருதி வரைகின்றனர். யாம் காட்டிய சுலோகங்களால் அது நிராதாரமானமை காண்க. முத்தியில் முத்தாத்மாக்கட்குப் பாச மில்லை யென்று கூறுமிவர், வேதாந்திகள் மோகமாய சகத்தை நித்திய மென்று, கூறுகின்றார்க ளென்று கூறுதற்கு, "இறப்பிலா இந்த மோகம்" என்னுஞ் செய்யுளை வரைந்தன்றோ? வேதாந்திக ளிவரினுங் கூரிய புத்தி யுடையவர்களாகலின், இறப்பிலா மோகமாய சகத்தையும், பதித்தன்மை பசுத்தன்மைகளையும் நித்திய மென்று கொள்ளாது, சேதநப் பொரு ளொன்றே நித்திய மெனக் கொள்ளுகின்றன ரென் றுணர்வாராக.

11 "எலாதாகவே யென்ற பின்னர் பொய்யே யென் றங்கீகரிக்க நேரும் என்றது எத்துணைப் பொருத்த முடைத்து?" என்றனர். 'நான் கருடன் என்னும் பொய்யாகிய பாவனையினால் பிறர்பாலுள்ள விட நீங்குத லெங்வா றேனும்? எலாதாகவே, கருட பாவனையின், பலன் பொய்யே யென் றங்கீகரிக்க நேரும். அங்ஙனம் பொய் யென்று நம் நண்பர் அங்கீகரிப்பரா? அங்கீகரியாராகவே, பொய்யாகிய கருட பாவனையினாலும், மெய்யாகிய விட நீக்கங் கூடு மென் றாயிற்று.' என்று குட்டுக் கோவை வெழுதியிருக்க, பிழை திருத்தத் துண்டுப் பத்திரத்தில் உள்ள 'பின்பலன்' என்றதைக் கூட்டிப்படிக்கு மறிவில்லாது 'எத்துணைப் பொருத்த முடைத், தென்று எழுதினார்? அஃதோ டமையாது, "சுவாமியார் தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர் போன்று தம்மைப் பல விடங்களிலும் வியந்து கொள்ளுகின்றனரே. இனி யேனுங் கவனித் தங்கீகரிப்பாரா?" என்று பிழை திருத்தத்தை யுணரும் உண ர்விலாத் தேவாரும் பிரியாராய இவர் எங்ஙனம் கவனித்து நடக்கும்படி யாஞ்ஞாபித்தனர். பிற ருணர்ந்த பிழை திருத்தத்தினையிவ ரறியாமையின் 'அஞ்ஞாநம்' என்னுந் தோல்வித் தானத்தை யடைந்தார்.

12 "இவருக்குத் தாயுமான சுவாமிகள் மீது இத்துணைக் கோபம் வந்தமைக்குக் காரணம் என்னையோ? தாயுமான சுவாமிகள் திரு மூல நாயனார் போலவே, வேதாந்தஞ் சித்தாந்தம் இரண்டனையுஞ் சமரசமாகக் கொண்டு சித்தாந்த நெறியே சென்றவர். 'சிவ ஞாநிக ளென்று சொல்லித் தம்பட்டமடிக்கு' மென்று எள்ளனஞ் செய்தது இவர் மதத்தைக் கண்டித் திருத்தல்

று சிவ ஞான வள்ளலாரைக் கொள்ளா தொழிவாராக. சிவ ஞான போத பாஷ்யத்தில் முத்தித் தசையிலும், பெத்த தசையிலும் முப் பொருள் நித்திய மென்று, யாங் காட்டிய வாக்கியங்கள் அறிவிக்கின்றமையின், "இவ்வாறே சிவ ஞான போத முதலிய சித்தாந்த சாஸ்திரங்கள் போதிக்கின்றன" வென்று, முத்தி தசையில் இரு பொருள் நித்தியங் கூறினமையின், 'அவ சித்தாந்தம்' என்னுந் தோல்வித் தானத்தை யடைந்தனர். முன்னர் 3-வது பக்கத்தில் 'மல சத்திக்குக் கே டுண்டு, மல சத்தியின் கேட்டினால் மலத்தி னின்றும்' என் றுள்ள வாக்கியங்களால், சத்திக்குக் கேடே யன்றி மலத் திற்குக் கே டின் றென்றும், ஈண்டு 'முத்தியி லுயி ருண்டு மல மில்லை' யென்ற வாக்கியத்தால், மலத்திற்கு நாச முண் டென்றும் கூறுகின்றமை யின், 'மாறு கோளக் கூறல்' என்னுங் குற்ற முடையவ ராயினர்.

**10.** 'இறப் பிலா இந்த மோகம், என்ற ஞான வாசிட்டச் செய்யுளுக்கு இவரும் இவர் சார்பினரும் என்ன பொருள் கொள்கின்றனர்" என்கின் றார்.

"நல்லது சிறுவநீ யுரியை நானது, சொல்லுவன் கேட்குதி துயர்செய் மோகநீ, வெல்லலா மோகந்தான் சகத்தின் வேறன்றி, மல்லல்வா னிறம் படைத் தென்ன வந்துறும்"

[illegible]
[illegible] 5
[illegible]

"இறப்பிலா விந்த மோக மிறையுமீட் டெண்ண மின்றி, மறப்பதே நல்ல தென் று மதித்துயர் மனத்தி னுக்குத், திறப்படக் காணப் பட்ட தில் லெனச் சித்தி னாலே, யுறப்பெறு மெப்போ தப்போ துயர்பா சுகம தாமே".

[illegible] 6
[illegible]
[illegible] 7

என்னும் செய்யுளி லுள்ள, 'இறப்பிலா மோகம்' என்றதற்கு நித்திய மென்று பொருள் கொண்டு, வேதாந்திகள் 'மோகத்தை நித் திய மென்று கொள்ளுகின்றார்களா? இன்றா? என்று வினவு கின்றார். மாயை, அஞ்ஞானம் என்னுங் காரணங்களையே நித்திய மென்று கொள்ளாத வேதாந்திகள், அந்தக்காரணத்தின் காரியமான மோகத்தினை நித்திய மென் று கொள்வார்களா ? "நல்லது" என்னுஞ் செய்யுளுக் குள்ள சுலோகத்தின் கண் 'சம்மோகம்' என்னும் பதத்தை, மொழி பெயர்ப் பாசிரியர் எது கைத் தொடை நோக்கி யநுவதித்தனர். அல்லது, 'அபுநஸ் மரணம்'என் னும் சொல்லுக்கு விசேடமாக 'இறப் பிலா மோகம்' என மொழி பெயர்த்

தனவொன் றுணர்க. 'நித்தியம் போலுங் காணப்படும் இந்தச் சகத்தை' என்பது அதன் பொருளாம். வடநூல் வியாக்கியாநத்தின் பொருள் 'நிருசிய விஸ்மாணத்தை' யென்பதாம். இது போன்றே, படலக்காரரும் இந்நூலில் 'ஈனமில்லை வாகமர்க்கு' என்னுஞ் சொல்லை யெடுத்துக் கூறித், தமக்கு அநுகூலம் வேதாந்தத்தி லிருப்பதாகச் சாதிக்க நினைத்துப் பன் முறை யெழுதி, மூலத் தின்றென்று கண்டந மிறுக்கப் பெற்ற பின் பேசாது மௌந முற்றனர். இவரும் அவர் போன்றே தென் மொழி மாத்திரம் ஒரு சிறிது கற்றவ ராகலின், மொழி பெயர்ப்பாசிரியர் எதுகைத் தொடை மோனைத் தொடை நோக்கிக் கொடுத்த அடைப்பதங்க ளெல்லாவற்றையும், தமக்கு ஒப்புயர் வற்ற பெரியதோ ராதார மெனக் கருதி வரைகின்றனர். யாம் காட்டிய சுலோகங்களால் அது நிராதார மானமை காண்க. முத்தியில் முத்தாத்மாக்கட்குப் பாச மில்லை யென்று கூறுமிவர், வேதாந்திகள் மோகமாய சகத்தை நித்திய மென்று, கூறுகின் ருர்க ளென்று கூறுதற்கு, "இறப்பிலா இந்த மோகம்" என்னுஞ் செய்யுளை வரைந்தன்ரோ? வேதாந்திக ளிவரினுங் கூரிய புத்தி யுடையவர்களாகலின், இறப்பிலா மோகமாய சகத்தையும், பதித்தன்மை பசுத்தன்மைகளையும் நித்திய மென்று கொள்ளாது, சேதநப் பொரு ளொன்றே நித்திய மெனக் கொள்ளுகின்றன ரென் றுணர்வாராக.

11 "எலாதாகவே யென்ற பின்னர் பொய்யே யென் றங்கீகரிக்க நேரும் என்றது எத்துணைப் பொருத்த முடைத்து?" என்றனர். 'நான் கருடன் என்னும் பொய்யாகிய பாவனையினுல் பிறர்பாலுள்ள விட நீக்குத லெவ்வா றேனும்? எலாதாகவே, கருட பாவனையின், பலன் பொய்யே யென் றங்கீகரிக்க நேரும். அங்ஙனம் பொய் யென்று நம் நண்பர் அங்கீகரிப்பரா? அங்கீகரியாராகவே, பொய்யாகிய கருட பாவனையினாலும், மெய்யாகிய விட நீக்கங் கூடு மென் ருயிற்று.' என்று சுட்டுக் கோளி யெழுதியிருக்க, பிழை திருத்தத் துண்டுப் பத்திரத்தில் உள்ள 'மின்பலன்' என்றதைக் கூட்டிப்படிக்கு மறிவில்லாது 'எத்துணைப் பொருத்த முடைத், தென்று எழுதினுர்? அஃதோ டமையாது, "சுவாமியார் தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர் போன்று தம்மைப் பல விடங்களிலும் வியந்து கொள்ளுகின்றனரே. இனி யேனுங் கவனித் தங்கீகரிப்பாரா?" என்று பிழை திருத்தத்தை யுணரும் உர னிலாத் தேவாரும் பிரியராய இவர் எங்ஙனம் கவனித்து நடக்கும்படி யாஞ்ஞாபித்தனர். பிற ருணர்ந்த பிழை திருத்தத்தினை யிவ ரறியாமையின் 'அஞ்ஞாநம்' என்னுந் தோல்வித் தாநத்தை யடைந்தார்.

12 "இவருக்குத் தாயுமான சுவாமிகள் மீது இத்துணைக் கோபம் வந்தமைக்குக் காரணம் என்னையோ? தாயுமான சுவாமிகள் திரு மூல நாயனுர் போலவே, வேதாந்தஞ் சித்தாந்தம் இரண்டனையுஞ் சமரசமாகக் கொண்டு சித்தாந்த நெறியே சென்றவர். 'சிவ ஞாநிக ளென்று சொல்லித் தம்பட்ட மடிக்கு' மென்று எளனஞ் செய்தது இவர் மதத்தைக் கண்டித் திருத்தல்

கொண்டு போலும். திரு மூல நாயனாரைப் பெரியா ரென்று கொண்டது ஜமீந்தாராகிய ஸ்ரீமாந் அள அரு. அருணாசலஞ் செட்டியா ரவர்கள், திரு மந்திரத்தைப் பரமப் பிரமாணமாகக் கொண் டொழுகுவது பற்றியா? அல்லது உண்மையா ?'' என்கின்றார்.

'நம் நண்பர் தம்பட்ட மடிக்கும் தாயுமான சுவாமிகள்' என்று சுட்டுக் கோல் சுடுகின்றமையின், தம்பட்ட மடித்தற்குக் கருத்தா, நண்ப ராவரே யன்றித் தாயுமான சுவாமிக ளன்றாம். ''ஈதும் பொய்யெனந் நம் பட்ட மடியே'' யென்று அவர் கூறியிருக்கின்றனர். நம்மவர்மீது கோபமே யன்றித் தாயுமான சுவாமிகள் மீது கோப மின்றாம். திரு மூல நாயனார், வீர சைவக் கொள்கை யுடையரராய் 'சிவாத்துவிதம் ஐக்கிய வாத சைவம்' என்னுஞ் சித்தாந்தத்தை யவலம்பித்தவ ரென்பது, சமஸ்கிருதத்தி லுள்ள மந்த்ர மாலிகா என்னும் நூலினாலும் அவரது சரித்திரப் புத்தகங் களினாலும், தென் மொழியி லுள்ள திரு மந்திரம், வீர சைவக் கிரந்த முதலிய வற்றானு முணரலாம்.

வேதாந்தம் சித்தாந்தம் இரண்டனையுஞ் சமரசமாகக் கொண்டு என்னுஞ் சொற் பொருளை யாராய்வாம். வேதாந்தத்தோடு சித்தாந் தத்தைச் சாரவைத்தலால், சமரசமா? வேதாந்தத்தைச் சித்தாந்தத் தோடு சார வைத்தலாற் சமரசமா? வேதாந்தஞ் சித்தாந்த மிரண்டையும் சகட சக்கரம் போல் கொள்ளுதலாற் சமரசமா? இரண்டாவது பொருந் தாது; மூலமாய வேதத்திற் கூறும் வேதாந்தத்தை, யுரையாய ஆகமத்திற் கூறுஞ் சித்தாந்தத்தோடு சார வைத்தல் பொருந்த முடைய தன்றாம். ஒன் றென்று வேதத்திற் கூறிய பொருட்கு முரணி மூன் றென்று பொருள் கொள்ளுதல் அறிஞர் கூற் றன்றாம், மூன்றாவது மன்று:—சகட சக்கரம் போலக் கொள்ளின் வேதாந்தத்துட் கூறிய பிரஹ்மப் பொருளோடு, சித் தாந்தத்திற் கூறிய பசுப் பொருளையு முடன் கூட்டிப் பொரு ளிரண்டாய், அவ்வாறே சித்தாந்தத்திற் கூறிய பாசப் பொருளை அபாவமாக்கி, பொரு ளிரண்டாய், வேதாந்தஞ் சித்தாந்த மென்னு மிரண்டற்கும் சமரசங் கூறல் வேண்டும். அஃது, சித்தாந்தத்திற்கும் வேதாந்தத்திற்குங் கருத் தன்றாம்; அவசித்தாந்தமுமாம். ஆதலால், முதலாவதே சால்புடைத்தாம். 'தந்தை யொடு மகன் வந்தான்' என்பது போன்று மூலமாய வேதத்திற் கூறும் வேதாந்தத்தோடு, உரையாய ஆகமத்திற் கூறும் சித்தாந்தத்தி லுள்ள பாசத் தை யபாவஞ் செய்து, அபாவஞ் செய்துழிப் பசுத்தன்மை பதித்தன்மை நீங்குதலின் சுத்த சேதந மொன்றே யெஞ்சும். அச் சுத்த சேதநத்திற்கு வேதாந்தத்திற் கூறும் பிரஹ்ம சேதநத்தோடு, சமமாந்தன்மை யிருத்தலின், முன் மொழியாய வேதாந்தத்தோடு, பின்மொழியாய சித்தாந்தத்திற்குச் சம மாந் தன்மை பொருந்தும். இவ்வாறே, வேதாந்த சித்தாந்த சமரசம் என்று எந்நூலில் வரினும் பொருள் கொள்க. இதனை யுணருந் தவ விசேட மின்றி, மேலெழுந்த வாரியாய், 'சித்தாந்த நெறியே சென்றவர்' என் றெழுதியது

நாமாபிமான மாத்திரமா யுள்ள சைவ சித்தாந்திகளை யேமாற்றும் பொருட்டா ?

## தாயுமான சுவாமிகள் பாடல்.

அத்துவித வத்துவைச் சொப்ரகா சத்தனியை அருமறைகண் முரசறையவே' 'விரிவாய பூதங்க ளொன்றொன்டொன் றாயழியும்' 'இந்திரசாலங்கனவு கானலினீ ரெனவுலகம்'. 'மைவிடா தெழுநீல கண்ட குருவேவிஷ்ணு வடிவான ஞானகுருவே' 'மலர்மேவி மறையோது நான்முகக் குருவே மதங்களொடு நின்ற குருவே' 'வேதமே வேதாந்தமே'. 'சொல்ல வேண்டும்வகை நல்ல காதிகதை, சொல்லு மாயையினு மில்லையென், 'தெரிவதற் கரிய பிரம மேயமல சிற்சு கோதய விலாசமே'. இது போன்றே இன்னும் பத்துப் பாட்டு உள்ளன. 'மனுவுண்ட வண்டெனவுஞ் சனகநாதி மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரொன்றும்' 'ஓதரிய சுகர்போல வேனெனென்ன வொருவரிலை யோவெனவு முரைப்பேன்றனே.' 'நான்முகத் தேவே நின்னுணட்டிய வகிலமாயை, கான்முயற் கொம்பே யென்கோ கானலம் புனலே யென்கோ, வான்முக பூளரி யென்கோ மற்றென்கோ விளம்பல் வேண்டும்' 'திடம் பெறவே நிற்கினெல் லாவுலக மும்வந் தேவல்செய்யு மிந்தநிலை நின்றோர் சனகன்முதன் முனிவர்.' 'பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்' 'சகம் பொயெனத் தம்பட்ட மடியே.' இரவுபக னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க ளிதயம்வே தச்சிரமென வாழ்,'அத்துவித வநுபவத்தை யநந்தமறை யின்னமின்ன மறியே மென்னு, நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னருளா னினைவுக் குள்ளே, வைத்து வைத்துப் பார்ப்பவரைத் தானாக வெந்நாளும் வளர்த்துக் காக்குஞ், சித்தினமா தூவெளியைத் தன்மயமா மாநந்தத் தெய்வந் தன்னே.' 'பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல, லாருந் துறக்கை யரிதரிது, 'அவனே பாரு மவனே குருவு, மவனே யகில மனைத்து-மவனேதா, மானவரே சொன்னு லவரே குருவெனக்கு, நானவனாய் நிற்பதெந்த நாள்' 'நேரே மநத்துறவு மப்படியே மானு விவற்றி, லுனக் கிசைந்த வாறென்றே யோர்.' 'மெய்யைப்பொய் யென்றிடவு மெய்யனையாப் பொய்நெஞ்சே, பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ - வையமறத், தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லாநந்த, மென்மயமு நின்மயமு மே.' 'மதுசூதநன் றங்கையே' 'தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை சகமனைத்து மௌனியரு டழைத்தபோதே, யிந்திரசா லங்கனவு கானனீரா யிருந்ததுவே யிவ்வியற்கை யென்னே யென்னே' வேதமே வேதமுடி வானமோன' 'நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறே நிலநீர்தீக் கால்வானு நீயலாத, குறியாது மில்லையென்றால் யாங்கள் வேறே கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய்' 'ஏகதேச சம்பூரணத்துக் குண்டோ தான்புகலல் வேண்டும்.' 'ஆரறிவா ரென்ன வநந்தமறை யோலமிடும், பேறறிவே யின்பப் பெருக்கே பராபரமே.' 'வாநந்த மண்ணினந்தம் வைத்து வைத்துப் பார்க்க வெனக், காநந்தந் தந்த வரசே பராபரமே.' 'வே

தூங்க வீட்டில் விளக்கே பராபரமே.' 'விளக்குந் தகளியையும் வேறென் றோர் நின்னைத், துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.' 'பாரறி யாப் பகர்ந்தா லகமெனவு, மாராயுஞ் சீவனுநீ யாங்காண் பராபரமே.' 'வரு வான்வந் தேனெனல்போன் மன்னியழி யுஞ்சகத்தைத், தெரிவாக வில்லை யென்ற றிராம் பராபரமே.'

'மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை, நீயேநா னென்று வந்து நிற்பேன் பராபரமே,' 'வானுநீ யெனவே வைத்தமறை யென்னையு நீ, தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே.' 'மாயைமு தலாம் வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந், தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே.' 'தன் னைத் தந்தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக், கென்னைக்கொண் டென் னபல னெந்தாய் பராபரமே.' 'என்று மிருந்தபடிக் கென்னையெனக் களித்துத், தொன்றும் போதாதோ வுரையாய் பராமே.' 'எண்டிசைகீழ் மேலான வெல் லாம் பெருவெளியாய்க், கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபர மே.' 'பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்பதலோ, சீலமிகு ஞானி யர்தஞ் செய்கை பராபரமே.' 'அப்பு மூப்பும் போன்ற வயிக்யபரா னந்தர் தமக், கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே,' 'சித்தந் தெளிந் து சிவமானோ ரெல்லார்க்குங் கொத்தடிமை யான குடிநான் பராபரமே' வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவ, னில்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே.' 'முக்குணத்தா லெல்லா மூளைக்கப் பிரகிருதிக் கிக் குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே.' 'பாசசா லங்களெல்லாம் பற்று விட ஞானவைவாள் வீசுநா ளெந்நாள் விளம்பாய் பராபரமே.' 'மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பியையோ, நின்னை மறக்கை நெறியோ பராபரமே.' 'நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற், கித்தனை தான் றுன்பமுண்டோ வெண்ணே பராபரமே.' 'ஞாலத்தை மெய்யெனவே நம்பி நம்பி நானுமென்றன், காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பரா பரமே.' 'அங்கமே நின்வடிவ மானசுகர் கட்டிடநீ, யெங்குமே னேனெ ன்ற தென்னே பராபரமே.' 'சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன, வற்புதமே யன்பே யறிவே பராபரமே.' 'அத்துவித மான வயிக்ய வநுபவ மே, சுத்தநிலை யங்கிலையார் சொல்வார் பராபரமே.' 'தானந்த மான சகச நிரு விகற்ப, வானந்த நிட்டையரு ளையா பராபரமே.' 'சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத், தந்தவனைக் கென்னையுநான் றந்தேன் பராபர மே' 'மண்ணனை மாயையெலா மாண்டுவெளி யாகவிரு, கண்ணூறா வுங்கனவு கண்டேன் பராபரமே.' 'நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத், தாயே யனைவரு டந்தாய் பராபரமே.' 'பூதமுத லானவை பொய்யென்ற மெய்ய ரல்லாய், காதலித்த வின்பக் கடலே பராபரமே' 'நீர்க்குமிழி பூணமைத்து நின்றூலு நில்லாமெய், பார்க்குமிடத் திதன்மேற் பற்றுவ தெந்நாளோ' 'காக்கைநரி செந்நாய் கழுகொருநாட் கூடியுண்டு, தேக்கிவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ.' 'வேலையிலா வேதன் விதித்தவிந்த்ர சாலவுடன், மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ.' 'வித்தியா தத்துவங்க ளேழும்

வெருண்டோடச், சுத்தபா போகத்தைத் துய்க்குநா ளெந்நாளோ' 'எல்லா மிறந்தவிடத் தெந்தை நிறைவாம் வடிவை' 'சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பான், மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ.' 'தற்பாத்தி னுன்னையுஞ் சாலோக மாதி யெனும்.' பொற்பறிந்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ.' 'கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்நீர, வான முத வாவி மருவுநா ளெந்நாளோ.' 'வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை, யாறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ.' 'எனக்குணீ யென்று மியற்கையாய்ப் பின்னு, முனக்குநா னென்ற வுறுதிகொள்வ தெந்நாளோ.' 'நாம்பிரம மென்று நடுவே யொன்றுண்டாமா, றேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ.' 'சித்தான நாமென் ஜடத்தைநா மென்னவென்றுஞ், சத்தான வுண்மைதனைச் சாரவா நல்லறிவே' 'இருக்காதி மறைமுடிவு மிதயத்துள்ளே, யொருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்கணுந்தா னொழியாத வின்பவெள்ள முலவா நிற்கும்.' 'பாராதி பூதநீ யல்லை உன்னிப்பா ரிந்திரியங் காணநீ யல்லை' 'யாரா யுணர்வுநீ யென்றான்,' 'அன்பருக் கன்பான மெய்யன், ஐயனாநந்த மோன னருட் குருநாதன், தன்பாதஞ் சென்னியில் வைத்தான் என்னைத்தா னறிந்தேன் மநந் நானிறந்தேனே' 'இறப்பும் பிறப்பும் பொருந்த, எனக் கெவ்வணம் வந்ததென் றெண்ணியான் பார்க்கின், மறப்பு நினைப்புமாய் நின்ற மாயா மலத்தால் வளர்ந்தது' 'என்னையுந் தன்னையும் வேறா உள்ளத் தெண்ணுத வண்ணம்' 'தத்த நிலையே முத்தி முடிவென வாத தர்க்கமும்' 'குறியுங் குணமு மன்றி நிறைவுங் குறைவு மன்றி மறையோன் றெனை விளம்ப' 'சகலா யகண்டத் தூவெளி யெல்லாந் திகழவே காட்டுஞ் சின்மய சாக்ஷி' 'அதுநா னெனவே யாற்றிடு மநுபவஞ் சதுர் வேதாந்தத் தன்மையென் றுரைத்தோன்'.

என்பனவாதி செய்யுட்களில் வேதாந்தத்தைப் புகழ்ந்து கொண்டாடி யிருக்கவும், 'இவர் மதத்தைத் தாயுமான சுவாமிகள் கண்டித் திருத்தல் கொண்டு போலு' மென் றெழுதியது அந் நூலைப் பார்த் தவ்வழி நில்லாக் குறையாலேயாம். ஒருவரை யுலகத்தி லுள்ள எம் மதத்தரும் பெரியா ரென்று கொள்ளல் தகாதாம், பிரமா, விஷ்ணு, ருத்திரன், சிவன், பிரஹ்மம், என்பவரையே, அவ்வம் மதத்தர் உயர்த்திக் கூறுவதனை, யேனையர் தாழ்த்திக் கூறுதலின், ஒருவர் பிற ரொருவரைப் பெரியா ரென்று கொள்வது, அவரிடத்துள்ள தமக்கு வேண்டிய நற்குணத் தளவே யன்றி வே றின்றாம். திரு மூல நாயனார் தமது நூலிற் சடங்குகளையுங் கூறுமிடத்து, முதலில் வேதாந்தத்தினைக் கூறி, அம் மதத்தின் முக்கிய சித்தாந்தமான "த்வந்தத்அஸி" (தத்துவ மஸி) என்னும் வாக்கியப் பொருளைப் பிறண்டு பல செய்யுட்களால் 'நீ அது ஆனாய்' 'நீ அவன்' 'நீ அவனா யிருக்கின்றாய்' என விளக்கி யிருத்தலின், அது கொண்டு அவரை, உண்மைக் கருத்தோடு, பெரியா ரென்று கொண்டோ மன்றிப் பிறர் கொண்டதற்காகத் தாக்ஷண்யம் பற்றிக் கொள்ள வில்லை. ஸ்ரீமாந. அழ. அரு. அருணாசலச் செட்

டியா ரவர்களும் இவ்வாறுய கருத்துப் பற்றியே, கைக் கொண்டார்க ளன்றி, அந் நூல்களையும், ஏனை வேதாந்த சாஸ்திரங்களாய, வேதாந்த சூடாமணி, கைவல்ய நவநீதம், ஞாந வாசிட்டம், விசாரசாகரம் முதலிய நூல்களையும் ஸ்ரீ செல்லப்ப சுவாமிக ளவர்களாய தமது ஞானாசாரிய ரிடத்து முறையாகப் பாடங் கேட்டும், உணர்ந்தவர்க ளாகலின், பிறர் தாக்ஷண்யத்திற்காகக் கொள்ள வில்லை. கடாவிய 'இவர், தாம் கொண்ட வேதாந்தத்தைக் கை விட்டு, திருஷ்டப் பிரயோஜநமாய வுபகாரங் கருதிச் சைவ சித்தாந்தத்தைக் கைக் கொண்டது போன்று வேதாந்திகளும், ஜமீந்தாரவர்களும் கைக் கொண்டார்க ளென்று கருதுகின்றனரோ? அவ்வா றின்றென்று தெள்ளிதி னுணர்வாராக.

13. "பெரிய புராணத்திலும், திரு முறை வகுப்பிலும், எழுத்து மூல மாகவும், சிவாலயங்களில் வழிபாடு மூல மாகவும், திரு மூல நாயனுரைச் சைவ சித்தாந்திகள் கொண்டாடுகின்றார்கள் என்பது சுவாமியாருக்குத் தெரியுமா? தெரியாதா? தெரியுமாயின் சொன் மாத்திரையானே கொண்டாடும் என்றது பொருந்துமா? தெரியா தாயின் வாதத்திற்கு வரும்போதாயினுந் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்கின்றார்.

'தமது குல குரு வென்று சொன் மாத்திரையானே கொண்டாடுந் திரு மூல நாயனார்'என்று சூட்டுக் கோவில் எழுதியதனைக் குறித்துக் கவல்கின்றார். இவர்க ளெழுத்து மூலமாகவும், வழிபாட்டு மூலமாகவும், திரு மூல நாயனுரைக் குரு வென்று கொள்வது, சொன் மாத்திரையே யன்றி யுண்மைக் கருத்தோ டன்றும். திரு மூல நாயனார் 28 தத்துவங் கொள்வோர் வேதாந்தி யென்றும், 25 தத்துவங் கொள்வோர் மாயா வாதி யென்றுங் கூறியிருக்க, அதனை யுணரும் ஆகூழ்வலி யின்றிப் போகூழ் வலியின் புணர்ப்பினுல், தென்னிந்தியாவில் பேத வாத சைவமாய, இவர் மதந் தோன்றி ஐந்நூறு வருஷ கால முதல், இவரு மிவர் மரபினரும், வேதாந்திகளை மாயா வாதிக ளென்று மருண்டு கூறி நிந்திக்கின்றமையின், சொன் மாத்திரையே குருவாகக் கொண்டவ ராவர். உண்மைக் குருவாகக் கொண்டிருப்பின், அவர் வாக்கியத்திற்கு மாருக, வேதாந்திகளை நிந்திப்பாரா? நீங்கள் தாம் மாயா வாதிக ளென்பரேல், 28 தத்துவங் கொள்ளும் யாங்கள் மாயா வாதியாகுங்கால், 36 தத்துவங் கொள்ளு மிவரும் இவர் மரபினரும் மாமாயா வாதியாவர் என்க.

திரு மந்திரம் - இரண்டாந் தந்திரம் - 2-வது. குரு நிந்தை - 531:— "ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய, சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர், ஊருடைச் சுணங்கனுய்ப் பிறந்தங் கோருகம், பாரிடைக் கிருமியாய்ப் படிகுவர் மண்ணிலே." 532, "மந்திர மோரெழுத் துரை செய்த மாதவர், சிந்தை நொந்திடத் தீமைகள் செய்தவர், நூந்திய சுணங்கனுய்ப் பிறந்து நூறுரு, வந்திடும் புலையராய் மாய்வர்கண் மண்ணிலே." 535. "சன்மார்க்கச் சற்குரு சன்னிதி பொய்வரின், நன்மார்க்க மூங்

குன்று ஞானமுந் தங்காது, தொன்மார்க்க மாய துறையு மறந்திட்டுப், பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே." என்பன வாதிச் செய்யுட்கட்கு இலக்கிய மாவர் இவரு மிவர் மாபினருமேயாம்; குரு வாக்கியத்திற்கு முரணுய்க் கூறினமையா னென்க. தெரிந்தே சொன் மாத்திரையாகக் குருவாகக் கொண்டாடுகின்றார்க ளென்று கூறினேம். கொண்டாடுபவர்க ளெல்லாரையும், இவர்க ளுண்மைக் கருத்தோடு கொள்ளுகின்றார்க ளென் பதற்கு இடமின்று; நீல கண்ட சிவாசாரியர் இவர் கோளுக்கு மாறாய் அபிந்ந நிமித்த வுபாதாந காரணங் கூறுகின்றார். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷித ரவர்கள் சுத்தாத்வைதத்திற்கு மாறாய் சிவாத்வைதங் கூறுகின்றார்கள். உமாபதி (சிவாசாரியர்) சுவாமிகள், இவர்கள் நிந்திக்கும் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளைப் புகழ்கின்றார்கள். ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகளும், ஸ்ரீ சம்பந்த மூர்த்தி சுவாமிகளும், இவர் நிந்திக்கும் வேத வேதாந்தங்களைப் பல விடத்தும் புகழ்ந்திருக்கின்றார்க ளாகலின் என்க. மற்றும், இயற்கையில் பிராமண வருணத்தைத் தூஷிக்கு மிவர்கட்கு, சுந்தரமூர்த்தி நாயனுர், திரு நாவுக் கரசு நாயனுர்களிடத்து மிருக்கும் குரு பாவனை போன்று, ஸ்ரீ ஞாந சம்பந்த சுவாமிகளிடத்தும், ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகளிடத்தும், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷித ரவர்க ளிடத்தும், ஸ்ரீ உமாபதி சுவாமிகளிடத்தும், குரு பாவனை யின் றென்பதனை யாவரு முணர்வர்.

வாதத்திற்கு வருங்கால் தென்மொழி வடமொழிகளிலுள்ள நூல்களை யுணர்ந்து, வாதத்திற்கு வா வழி யறியாது, பிறர்க் கிட்ட சூட்டுக் கோல் நுழைந்து, அச்சூட்டைத் தாமும் பெற்று, அதனுல் வினவல் முறை யறி யாது, வினவி யிடர்ப்படு மிவர், பிறரைத் "தெரிந்து கொள்ள வேண்டா மா?" என்று எழுதுதற் கெவ்வா றருக ராவர். தெரிந்தே வாதத்திற்கு வந் தோ மென் றுணர்வாராக.

14. "படிப்பின் கர்வம் பற்றியா? சித்தாந்த நூல்களைச் செவ்வனே தெரிந்து கொள்ளாக் குறை பற்றியா?" என்கிறார்.

படிப் பின்றியே, கர்வத்தா லொன்றை யொன்றாகக் கூறுங் கர்வ முடையோரும், நூல்களைச் செவ்வனே தெரிந்து கொள்ளாக் குறை யுடை யோரும், இதுகாறுங் கூறியவற்றாலும், இனிக் கூறுமாற்றாலும், இவரு மிவர் மரபினருமே யாவர். உண்மையை யுள்ளபடி யெழுதிறோ மன்றிக் கவர்த்தாலும் படிப்பின் குறையாலு மன்றாம்.

15. "சமஸ்கிருத ஞாந முடைய உமாபதி சிவாசாரிய சுவாமிகள், சமஸ்கிருதத்தி லொரு நூலேனுஞ் செய்யாது, தமிழிற் பல நூல்கள் செய்து வைத்தமைக்குக் காரண மென்னை?" என்கின்றார்.

சூட்டுக் கோலில், உமாபதி சிவாசாரியர் சமஸ்கிருதத்தில் பௌஷ்க ராகமத்திற்கு வியாக்கியாநஞ் செய்திருக்கின்றா ரென்றும், ஸ்ரீ சங்கரா சாரிய சுவாமிகளை யதிற் றுதித்திருக்கின்றா ரென்றும் அறைந்திருக்க, அதனை யறியு மறி வின்றி, சமஸ்கிருதத்தி லொரு நூலேனுஞ் செய்யா'

தென்றார். இது தென்மொழியுரை யேமாற்றற்கா? சூட்டுக் கோலைந் தக்காரிடத்துப் பாடங் கேட் டறியாக் குறையாலா? உரை, நூ லன்று என்பரேல், வேதவுரையாய ஆகமம் இவர்க்கு எங்ஙனம் முதனூலாம்? ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரவர்கள் இயற்றிய 104 கிரந்தங்களுள், சிவார்க்கமணி தீபிகை, யின்னோ ரன்ன பிறவுரைகளும், அடங்கியிருத்தலின், அவற்றிற்கு நூ லென்னும் தன்மை பொருந்தாதாம். "இதனை விரித்து, சிவாசித்த மணிதீபிகை, சிவ தத்துவ விவேகம், முதலிய நூலுடையார்" என்று சிவ ஞாந சுவாமி தமது பாஷ்யத்தி லெழுதி யிருத்தலின், இரண் டுரைகளையும் நூ லெனக் கொண்ட சிவ ஞாந சுவாமியும் புரட்ட ராவர். சிவ தத்துவ விவேகம் நூலே யன்றி யுரை யன்று என்பரேல், அஃதறிவிலி கூற்றாய் முடியும். நூ லுக்குச் சிகரணி மாலை யென்றும், உரைக்குச் சிவ தத்துவ விவேகம் என்றும் பெய ருண்மையின், மொழி பெயர்த்தாரும் அச்சிட்டாரும் தமோகுண வயத்தராய், "நூலாசிரியர் கருத்தினை நோக்கா, தொரு சூத்திரத்திற் றொவ்வொரா சிரிய, ரொவ்வொரு மதமா யுரையுரைக் குவரே, யவ்வுரை யதனு ளடுத்தவா சகங்கட், கவர்கருத் தறியா தவரவர் கருத்தினுட், கொண்ட பொருள்படப் பொருள்கூ றுவரே,........நூ லுரை போதகா சிரியர் மூவரு, முக்குண வசத்தான் முறைமறந் தறைவரே, யிம் முறை யெல்லா மெவர்க்குத் தறியினு, மவத்தை வசத்தா லலைகுவர் திடனே, யதிமதி நுட்பமோ டிகலை கற்பினும், விதியது வசத்தால் விதி விலக் கயர்ப்பார், ஆகையா லளவிட லரிதே........" என்று இலக்கணக் கொத் துரைத்தாங்கு, முறை பிறழ்ந் துரைத்தன வென்க. இதனால், சமஸ்கிருதத்தில் நூல் செய்திருக்க, 'ஒரு நூலேனுஞ் செய்யாது' என்று புரட்டினமையின் புரட்டரும், தம்மதத்தர் உரையை நூ லெனக் கொண்டாங்கு, கொள்ளாமையின் 'அவசித்தாந்தம்' என்னும் தோல்வித்தாந முடையோரும், சிவ ஞாந பாஷ்யத்தை யறியாமையின் 'அஞ்ஞாநம்' என்னுந் தோல்வித்தாநத்தை யுடையோரும், சிவஞாந பாஷ்யத்திற்கு மாறுபாடாகக் கூறினமையின், 'மாறு கோளக் கூறல்' என்னுங் குற்ற முடையோருமாயினர்.

"ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் முன்னர் பௌத்த மதத்தினை வெல்லுதற் பொருட்டு, ஏகாத்ம வாதஞ் சாதித்துப் பின்னர்த் தா முய்ய வேண்டிச் சைவ சித்தாந்த நெறியைத் தலைக்கூடி நின்று சைவ சித்தாந்த சம்பந்தமாகச் சில வியாக்கியாநங்களும், சிவ வழிபாடுகளும், செய்து வந்தமையால், ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள், பின் செய்த வியாக்கியாநத்தை யெடுத் தாண்டன ரென்று ஏன் கொள்ளக் கூடாது?" என்கின்றார்.

பிறரை வெல்லுதற்கு, வேதாந்த நூல் சாதகம் என்கின்றமையின், பகலை யிர வென்று கூறின், மறுமொழி கூறாது, அங்கீகரிக்கும் மாணக்கனுக்குக் கூறுவது சைவ நூ லென்றாகின்றது. அவ்வாறாயின், இவர் மாயினரும் எம்மவரிடத்துச் சரணாகதி யடைந்து, பிறரை வெல்லுதற்கு

வேதாந்த நூலைக் கேட்கலாமே? அவ்வாறு செய்யாமையின் இவர் கூறியது புரட்டாம். வேதாந்தத்திற்குப் பிறரை வெல்லுதற் பயனே யன்றி மோக்ஷ மின் றென்கின்றார். மூலமாய வேதத்திலுள்ள உபநிடதத்திற் கூறும் மார்க்கத்திற்கு, மோக்ஷ மின்றாயின், வேதத்தி னுரையாய ஆகமத்திற் கூறுஞ் சைவத்திற்கு மோக்ஷ மெங்ஙனமாம்? அங்ஙன மாமேல், திருவாசகம், தேவாரம், பெரிய புராணம், திரு விளையாடற் புராணம், திரு மந்திரம் முதலிய மூலத்திற்கு மோக்ஷ மின் றென்றும், அவற்றின் உரையைப் படித்தலாலே மோக்ஷ முண்டா மென்றுங் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் அறிஞர் அங்கீகரிப்பரா?

"பின், தா முய்ய வேண்டி சைவ சித்தாந்த நெறியைத் தலைக் கூடி நின்றார்கள்" என்று, குரு, தீக்ஷை, முதலியன வின்றி, வெற் றுரையாகச் 'சைவ நெறியைச் சார்ந்தார்க'ளென்று கூறிய தெற்றிற்கு? சாஸ்திரங்களிற் சைவ குருவும், தீக்ஷையுஞ் சாற்றப்படாமையாலா? குரு, தீக்ஷை, முதலியன வின்றிச் சைவ சாஸ்திரத்தான் மோக்ஷ மடையலா மென்னுங் கருத்தாலா? இவ்வாறு இவர் ஒப்பினும், இவர் மரபின ரொப்புவரா?

"சைவ சித்தாந்த சம்பந்தமாகச் சில வியாக்கியானங்களு" மென்றனரே; உம்மையால் வேதாந்தத்திற்குப், "பிரஹ்ம சூத்திர பாஷ்யம், ஈசாவாஸ்யோபநிஷத் பாஷ்யம், கேனோபநிஷத் பாஷ்யம், கடோபநிஷத் பாஷ்யம், பிரச்னோபநிஷத் பாஷ்யம், முண்டகோபநிஷத் பாஷ்யம், மாண்டூக்கியோபநிஷத் பாஷ்யம், ஐதரேயோபநிஷத் பாஷ்யம், தைத்ரீயோபநிஷத் பாஷ்யம், சாந்தோக்கியோபநிஷத் பாஷ்யம், பிருகதாரண்யகோபநிஷத் பாஷ்யம், நரசிம்ம பூர்வதாபநீயோபநிஷத் பாஷ்யம், பகவத்கீதா பாஷ்யம், விஷ்ணு சகஸ்திர நாம பாஷ்யம், சநத் சுஜாதீய பாஷ்யம், லலிதா திரிசதீ பாஷ்யம்" என்னும் பதினாறு பாஷ்யங்களைச் செய்திருக்கின்றார்களென்று விளங்குகின்றது. சைவ சித்தாந்தத்திற்குச் சார்பாக வியற்றிய சில வியாக்கியானங்களின் பெயரை யிவர் ஏன் எடுத்துக் காட்ட வில்லை? இருந்தா லன்றோ காட்டுவர். கமட ரோமம் போ லில்லாமையாற் காட்ட வில்லை போலும்!

"சிவ வழிபாடு செய்து வந்தமையால்" என்று கூறுகின்றமையின், சிவ வழிபாடு ஆகமத்திற்கே யுரிய தென்று கருதுகின்றனர் போலும்! வேதத்தின்கண் சிவ வழிபாடு முதலியவற்றை விரித்துக்கூறி யிருத்தலின், அதனை நோக்க ஆகமத்திற் கூறிய தொரு சிறிதே யாம். தாந்திரிக வழிபாட்டினும் வைதிக வழிபாடே யுயர் வுடைத்தாம். பிரமாணமாதற்கு நூல் காரணமே யன்றி, வழிபாடு முதலியன காரண மன்றாம். வழிபாடு முதலியனவே காரணமாமாயின், வழிபாடு முதலியன வுடையோர், வெள்ளறிவாற் கூறிய மூட னுரைகளும் பிரமாணமாதல் வேண்டும். சிவத்திற்கு மேலொரு சிவ மின்மையால், அச்சிவன் சிவ வழிபாடு செய்யாமையின், அவ ரறைந்த ஆகமம் பிரமாண மன்றாதல் வேண்டும். "ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பின் செய்த வியாக்கியானத்தை யெடுத் தாண்டன

ரென்று ஏன் கொள்ளக் கூடா" தென்று ஜோதிடக் கூறுகின்றார். இந்தச் சோதிடத்தாற் காரியம் பலிதமாமா? சைவ சித்தாந்த பரமாக, வியாக்கியான மியற்றி யிருந்தா லன்றோ, "ஏன் கொள்ளக் கூடாது" என்று கூறநருகும், பௌஷ்கராகமத்தின் வியாக்கியானத்தைச் சமஸ்கிருத வல்லார்வாய்ச் சாருகதி யடைந்து முறையாகக் கேட்டு, எவ் வுபநிஷத் பாஷ்யத்தின் அநுவாத மென்று வரைந்திருக்கின்ற தெனை வுணர்ந்தனரா? அப் புத்தகமே அச்சுவாகன மேறா திருக்க, எங்ஙனங் கேட்டே னுணருவர்? "தைத்திரீய வுபநிஷத்தின் அநுவாதத் தன்மையால் உபநிஷத்திற்கு வியாக்கியானஞ் செய்பவர்களாயும், மறையுமுள்ள, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால், வியாக்கியானஞ் செய்யப் பட் டிருக்கின்றதே யன்றி, சுபாலோபநிஷத் தநுவாதத் தன்மையால் வியாக்கியானஞ் செய்யப் படாமையின்" என்று உமாபதி சிவாசாரியர் எழுதியுள்ள வாக்கியங்களை யுணர்ந்தனரா? தைத்திரீய உபநிஷத்துக்கு அவைதிக தாந்திரிக சைவ சித்தாந்த பதி பசு பாச நித்திய துவைத பரமாக ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் பாஷ்ய மெழுதி யிருக்கின்றார்களா? இல்லா திருக்க "பின் செய்த வியாக்கியானத்தை யெடுத் தாண்டனரென்று ஏன் கொள்ளக் கூடாது" என்று சிறிதேநற்கு மியையார்பாற் றங் குறி வழக்க மிகவெடுத்து நாட்டும் தன்மையாய் வரைந்தது அறிவுக் குறைவினுலாம். படலக் காரர் வாங்கிய சூடு, தமக்கும் வந்து பொருந்தியதாகத் துள்ளி யெழுந்து துடி துடித்துத் தன் னனைத் துணுக்கெனப் பலிவர்த் தன் போன்று மதர்ப்பால் முன் பின் யோசனை யின்றித் தூல வறிவால் மே லெழுந்த வாரியாய் இருபது கடாக்களை யேவினவையா னன்றோ இக் கட்டாரியால் இத்தனை யிட ரிழைத்தனர். சமஸ்கிருத ஞான மின்றிய தாம், சமஸ்கிருத நூல் விஷயமாகத் தலை யிட்டுக் கொள்ளலாமா? என்னுஞ் சத்துவ குண மின்றித் தமோ குண மிகுதிப் பாட்டால், தம்மவர் சென்ற வழியிலுஞ் செல்லாது, புதிய புரட்டு வழி யொன்றைக் கற்பித்து, "பின் துவைத சைவ சித்தாந்த பரமாகச் செய்த வியாக்கியானத்தைப் பிரமாணித்தன ரென ஏன் கொள்ளக் கூடா தென்று, குருட்டுத் தனமாகக் கூறி, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை அவைதிக தாந்திரிக துவைத சைவ சித்தாந்தியாக்கக் கருதுகின்றனர். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரவர்கள் சிவார்க்க மணி தீபிகை முகப்பில் "பிராமணர்களாய ஆசாரிய ரத்தினங்களான ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகட்கு, அத்வைதமே (வேதாந்தமே) உடன்பாடாம்" என்று கூறி யிருத்தலையு முணர்வாராக. சிவ ஞான சுவாமி ஸ்ரீ வியாச பகவானையும், ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளையும், வேதாந்திக ளென்று கருதி வேறு படுத்தி யிருக்கவும், குரவரினுங் கூரிய புத்தி யுடையவ ராகலின், 'சைவ சித்தாந்தி' யென்று சாற்றினர் போலும். இவ் விஷயத்தைப் புரட்ட நினைத்த இவர், ஏனைச் சாதாரண விஷயங்களை யென் புரட்டுப் புரட்டுவர்? இவரை அண்டப் புரட்ட ரொருவராக்குதலே சாலும். இனி, வரைவாராயின், அவ்வந் நூல்களைப் படித்து, அவற்றிலுள்ள வாக்

கியங்களை யெடுத்துக் காட்டி வரைவாராக. அவ்வா றின்றி யிவ்வாறே வெற் றுரையாக வரையின் ஏனைய ரோனைஞ் செய்வ தொன் றுணர்க.

16. "சிவ ஞாந சுவாமிகள் சிவனுக் குரிய எண் குணங்களும், மோக்ஷ காலத்திற் சீவனுக்கு வந்து பொருந்தாது என்று எவ்விடத் தெழுதி யுள்ளார்கள்" என்கின்றார்.

சிவ ஞாந பாஷ்யத்தில் ஆறாஞ் சூத்திரத்தில் "ஆன்மா பசுத்துவ நீங்கிய முத்தி காலத்தில் சிவனைப் போல முற்று முணர்தல் முதலிய வெண் குணங்களு முடைய னென் றாகமங்களிற் கூறுதலின், ஆண் டாங்மாவி னறிவு சிவ ஞாநத்தோ டொத்த ஞாநமே யன்றிப் பசு ஞாநமன்மையா னவ் வறிவா னறியப்படுங் கோசரப் பொரு ளென்றலே பொருத்த முடையதெனச் சிவ சமவாதி மதம் பற்றி யாசங்கை நிகழ்ந்த வழி யதனை மறுத்து" என்றும் "அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட வான்மாவும் முதல்வனோ டொன்றாய்ப் போதலே யன்றித் தா னென வேறு நிற்குமா றின்மையிற் றன்னருளா லான்மா வுணரு மென வேறு படுத்துக் கூறுதல் பொருந்தா தெனச் சிவாத்துவித சைவர் மதம் பற்றி யாசங்கை நிகழ வதனை மறுத்து" என்றும், "பசுத்துவ நீங்கியவழி யான்மாவின் ஞாநத்திற் கோசரமா மென்னுஞ் சமவாத சைவரையும், முத்தியிற் சிவமே யன்றி யான்மா வென வே றின்மையின் ஆன்மாவுக்குக் கோசரமாமா றியாண்டைய தென்னுஞ் சிவாத்துவித சைவரையு மறுத்து" என்றும், "சிவாகமங்களில் ஓரோ ரோரிடத்தி லான்மாப் பெத்தத்திற் பாதந்திரன் முத்தியிற் சுதந்திரன் எனவும், பாதந்திரனாதல் பற்றி மல வுண்மை துணியப்படு மெனவுங் கூறுவன வெல்லாம் பொது வியல்பு பற்றிப் பதி யென நின்ற முதல்வன் செய்யு மைந்தொழிலின்கட் பட்டு நிற்றலு மவற்றி னகப்படாது நிற்றலும் பற்றியே பிறி தில்லை யாகலின் அது பற்றித் தன்னியல்பி னின்ற முதல்வனை நோக்கியுஞ் சுதந்திர னவன் போலு மென மலையற்க" என்றும், "இன்னோ ரன்னவை யெல்லா முபசாரம் பற்றி" என்றும், "ஆன்மாவுக்கு விசேட குண மில்லையாயிற் குண குணிகட்கு வேற்றுமை யில்லை யென்பது மேற்காட்டுதலிற் குணமில் வழிக் குணியு மில்லை யெனப் பட்டுச் சிவாத்துவித மதமாய் முடியு மாகலி னது பொருந்தாது" என்றும், "தனித்து நின் றறிவதாகிய சிவமுந் தானுந் தம்முள் ஒத்தல் சாலாமை யான் என்பது" என்றும், "நீரொடு நீரும் பாலொடு பாலுஞ் சேர்ந்தாற் போ லென ஐக்க வாதங் கூறுவார் மதமும், குட முடைந்த வழிக் குடாகாய மகாகாயத்தோடு கூடி யொன்றா மாறும், சிறை முறிந்த வழி யாற்று நீர் கட லீரோடு கூடி யொன்றாமாறும் போ லெனச் சிவாத்துவிதங் கூறுவார் மதமு மறுக்கப்பட்டன. ஆகமங்களி னவ்வா றவற்றை யெடுத்துக் காட்டிய தொற்றுமைப்படச் சேர்தன் மாத்திரைக் கொருபுடை யொப்புமை யாதல் பற்றியே பிறி தில்லை யென்க." என்றும், "தற் றரும தருமி யென் றோதியதனை மீளவும் அதனை விரித் துணர்த்துவான் புகுந்து முற் றுணர்தன் முதலியனவாக வெண் வகைப்படுத் தோதி, யவற்று ளாதி

போத மென் றொரு குணமும் முற் றுணர்வு முதலியவற்றின் வேறு வைத்
தெண்ணப்பட்டது ; படவே அஃதநாதி முத்தத்தன்மை யென்னும் குணத்
திற்குப் பரியாயப் பெயரா னநாதியே ஞானம் விளங்குத லெனப் பொருடரு
வதே யாமாகலி னக்குண மநாதி முத்தனாகிய சிவனுக் கன்றி யிடையே
முத்தி பெற்ற வான்மாவுக் கில்லை யென்ப தனக்கு மொத்தலா னநாதி
போத னல்லாத வான்மாவுக்கு அநாதி போதத்தன்மை கூறியது, மாணிக்க
வொளி முழுவதுந் தன்னைச் சார்ந்த படிகத்தின் விளங்கினாற் போலச் சிவ
னுக் குரிய தருமந் தன்னைச் சார்ந்த வான்மாவின்மாட்டு விளங்குதன் மாத்
திரையே பற்றி யாகலின் [illegible] வனைக் குணங்களான்மாவிற் கோதிய தூஉ
மவ்வாறேயா மென்பது தெளியக்கிடந்த வா றறிக." என்றும், "பவுட்கா
மதங்க முதலிய சிவாகமங்களிற் சிவனுக் குரிய வெண் குணங்களே யன்றி
யவற்றோ டொப்ப வேறு யான்மாவுக் கெண் குணங்க ளுள வென யாண்
டானு மோதாமை யானும்" என்றும், "அற்றாகலி னன்றே மல சத்திகள்
பலவாயின—சிவமும் ஆன்மாவும் இலக்கணத்தா லொன்றாய வழிப் பதி
பசு வென வேறு வைத் தெண்ணுதல் பொருந்தா மையானும்" என்றும்,
"சிவனு மான்மாவு மிலக்கணத்தா லொன்றாய வழிச் சிவனை மறைக்க
மாட்டாத வாணவ மலம் ஆன்மாவுக் காவரக மாதல் சொல்லாமையானும்"
என்றும், "என் குணங்களி னநாதி போத மென முற்றுணர்வின் வேறு
வைத் தெண்ணியது அநாதி முத்தத் தன்மைக்குப் பரியாயப் பெயரோ
யாகலி னதுவு மதனோடு டெண்ணிய வேனைக் குணங்களு மநாதி
முத்தனாகிய சிவனுக்கே யுரிய குணங்க ளென்பது முணராது, அக் குணங்
கள் முழுவதும் படிகம் போலப் பற்றியதன் வண்ணமாய் நிற்கு மியல்
புடைய வான்மாவின்மாட்டு விளங்கிய வுபசாரத்தால் என்பது முண
ராது," என்றும், "ஒன்றாய வழி அது வதுவாய் நின் றறிதலாகிய வான்
மாவி னிலக்கணம் முத்திக் காலத் தில்லை யெனப் பட்டு வழுவா மாகலி
னது பொருந்தாமையானும்" என்றும், ஏழாஞ் சூத்திரத்தில் "அவையே
சிவகரணங்களாய்ச் சிவத்தை யறியு மென்பதனை மறுத்து" என்றும், முதற்
சூத்திரத்தில் "அது கொண்டு தானே நிருபாதி வைக்கியங் கூறுதல்
சாலா தென்பது" என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

இவ் வாக்கியங்கள் சீவனுக் குரிய குணங்கள் நாசமாவ தில்லை, சீவனுக்
குரிய ஆணவ, கார்மிக, மாயேய மலமும், மூல மலமும் நாசமாவ தில்லை.
சத்தி மாத்திரம் அடங்குவதாம். சிவன் குணங்கள் சீவனிடத்து தோற்றன்
மாத்திர மன்றி உண்மையில் இல்லை யென்று படிக திருஷ்டாந்தத்தாற்
கூறி, ஆகமங்களில் சிவ குணங்கள் ஜீவனுக்கு வந்து பொருந்துவதாக உப
சாரமாகக் கூறப்பட்டிருக்கின்றன வென்றும் கூறுகின்றன.

வேதாந்த ஆசாரியராய ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதாவர்களும் சித்தாந்த லேச
சங்கிரகத்தின் நான்காவது பரிச்சேதத்தில் "பிரதிபிம்பம் ஜீவன் பிம்ப
ஸ்தானீயன் ஈஸ்வரன். ஈரிடத்தும் அநுஸ்யூதமா யிருக்கின்றது சுத்த சைதந்
யம் என்னும் பக்ஷத்திலோ முக்தனுக்குச் சர்வ முக்தி வரும் வரைச் சர்வஜ்ஞ

ஞத்வ, சர்வ கருத்திருத்வ, சர்வேஸ்வரத்வ, சத்திய காமத்வாதி குண பரமேஸ்வர பாவ அடைவி னங்கீகாரமாம். எங்ஙனம் அநேகந் தருப்பண ங்களில் ஒரு முகத்திற்குப் பிரதிபிம்ப முற்றவழி ஒரு தருப்பண மொழிக் கின் அந்தப் பிரதிபிம்பம் பிம்ப பாவமாக நிலை பெறும்; முக மாத்திர ரூப மாக வன்றும். அஞ்ஞான்றும் வேறு தருப்பண சந்நிதாநத்தா லாக்கப்பட்ட பிம்பத் தன்மை வதநத்தில் அகலாமையின். அங்ஙனம், ஒரே பிரஹ்ம சைத ந்யத்திற்கு அநேக உபாதிகளில் பிரதிபிம்ப அடைவுறவே ஒரு பிரதிபிம் பத்தில் வித்தையின் உதயமாக, அதனுன் அதன் உபாதி அகலவே அந்தப் பிரதிபிம்பத்திற்குப் பிம்ப பாவமாக நிலை பெறுத லின்றியமையாததாய் முடியும். முக்தனுக் கவித்தை யிலாமையின் சத்திய காமத்வாதி குண விசிஷ்ட சர்வேசுவரத் தன்மையி னடைவு கூடாதா மென்னற்க; அவன தவித்தை யின்றேனும் அக்கால் வேறு பத்தர தவித்தை யிருத்தலின், ஈசு வரரது ஈசுவரத் தன்மையும், சத்திய காமாதி குண வைசிஷ்ட்யத் தன்மை யும், தம தவித்தையினு லாக்கப் பெற்ற தன் றன்றே; அவர்க்கு நிரஞ் சநத்தன்மை யுண்மையின்; மற்றே, பத்தரது அவித்தையா லாக்கப் பெற்றதேயாகு மவையாவு மென அங்கீகரிக்கத் தக்கதாம். "எத்தகைக்குண முடை யீசத்தி யாநவான், இத்தரை யிடையே யிசைகு வானே, அத்தகை யீசனை யாகம்வீழ்ந் தடைவன்", "எவ்வெக் குணத்தொடு மீசனை யேத்து துவர், அவ்வக் குணமுடை யவரையே யடைவர்" என்பன வாதி சுருதிக ளில் சகுண உபாசகர்கட்கும் ஈசுர சாயுச்சியங் கேட்கப்படுதலின் முக்திக் குச் சகுண வித்தையின் பலச் சம அடைவாம் என்னற்க; சகுண உபாச கர்கட்கு அகண்ட சாக்ஷாத்கார மின்மையின் அவித்தையின் நீக்கமு மின் றும்; அவரது மூல அகங்கார நீக்கமு மின்றும். ஆவரண நீங்காமையின் அகண்டாநந்த விளக்க மின்றும். "உலக வியாபார மொழியும் பிரகரணத் தான் முன்னிலை யின்மையினுனும்", "யோக மாத்திரம் ஒப்புமைக் குறி யானும்" என்பன வாதி சூத்திரத்திற் கூறிய நியாயத்தானே அவர்கட்குப் பரமேஸ்வரரோடு போக சமாநத் தன்மை யிருந்த போதினும், சங்கற்ப மாத்திரையானே தமது போகத்திற்குப் பொருத்தமான திவ்ய தேகேந் திரிய வநிதை முதலியவற்றைச் சிருஷ்டிக்கும் ஆற்ற லிருந்த போதினும், சகல ஜகத் சிருஷ்டி சங்காராதி சுவாதந்திரிய இலக்கணம் வாய்ந்த நிரதி சய ஐஸ்வரிய மின்றும். முக்தர்களோ, எல்லா வடிவானுமே ஈசுவர பாவத் தை யடைந்து அவை யாவற்றையுமே யடைவர் என்பதாகப் பெருஞ் சிறப்புளதாம்."

"பரமேசுரருக்கு இரகுநாதாதி அவதாரத்தில் அறியாமையோ டுற்றமை துன்ப அடைவு முதலியன கேட்கப்படுதலின், முக்தர்கட்கு ஈசுர பாவ முறவே மீண்டும் பந்த அடைவாம் என்னற்க; அவர்க்கு விப்பிர சாப அமோகத் தன்மை முதலிய தாமியற்றிய மரியாதையைக் காக்கும்பொருட் டுத் தம்மிச்சையினுனே பிருகு சாபாதிகள் சத்தியத் தன்மையை யடைவுறு மாறு நடணுகுப்ப ஈசுவரருக்கு அதன் அபிநய மாத்திர பரத்தன்மை யுண்மை

யின்; அன்றுயின், அவர்க்கு நித்திய முக்தத் தன்மையையும் தடை யற்ற சுவாதந்திரிய ஒப்புயர்வு இல்லாமை முதலியவற்றையுங் கூறும் மறை முரணன்றோவாம். ஆகலின், சர்வ முக்தி வரை பரமேஸ்வர பாவம் முக்தனுக்கா மெனப் பிம்ப ஈஸ்வர பாவத்தில் ஒரு கோது மின்றும். இப் பக்ஷமே சுருதி சூத்திர பாஷ்யாதி யநுகுணமானதாம்."

"சூத்திரக் காரர் நான்காவது பரியாயத்திற் பிரதிபாதிக்கப்பட்ட முக்தனுக்கு ஈஸ்வர பாவ அடைவை வெளிப்படையாய் விளம்புகின்றுர். அஃதின்றேல், முக்தனிடத்தும் சத்திய சங்கற்பத் தன்மை முதலியன கூடாமையின் உபக்கிரமத்திற் கேட்கப்பட்ட குணாஷ்டகத்திற்கு ஈஸ்வரரினும் வேற்றிடத் திருப்பாதலின் செய்த சங்கா பரிகார இலாப மின்மையினுனு மென் றுணர்க."

"ஸ்ரீமத் பாஷ்யக் காரரும் மிகவெளிப்படையாய் முக்தனுக்குச் சகுண ஈசுவர பாவத்தினைக் கூறி யுள்ளார்".

"முத்தர்கட்கு ஈசுவர பாவம் இன்றியமையா தங்கீகரிக்க வேண்டலின்".

"நித்திய சித்தமாகிய பாவ மற்ற தன்மையோ எப்போதும் பாவ மற்ற தன்மையாம். உண்மையாக எப்போதும் பாவ மற்றதில் பாவ சம்பந்தமேனும், பாவ சம்பந்த மூல கருத்திருத்வ, போக்திருத்வ, சம்பந்தமேனும் பாரமார்த்திகமாகச் சம்பவியாதாம். இவ்வாருகவே, ஜீவனுக்கு ஈஸ்வரா பேதமும் நீக்க முடியாதாம். சுருதியினுற் போதிக்கப்பட்ட அதனை தபேத விரோதி பந்தத்திற்குச் சத்தியத்தன்மை யின்மையின் என்க."

"சூத்திர அநுசாரிகளானே முக்த ஜீவர்கட்குச் சர்வ முக்தி வரை உண்மையாகச் சைதந்ய மாத்திரத்வ அவிரோதியாய பத்த புருட ரவித்தையாலாக்கப்பட்ட தடை யற்ற ஐஸ்வரிய அத னநுகுண கலாப விசிஷ்ட நிரதிசய ஆநந்த விளக்க சம்பத்தாகிய சர்வான்மகமரகப் பரமேஸ்வர பாவம் ஆதரிக்கத் தக்கதா மெனத் துணியப் பெறும்" என்று. ஜீவனுக்கு ஈஸ்வரத் தன்மையினைக் கூறிப் பந்தம் மித்தை யென்றும், பந்த காலத்தில் தன் குணங்கள் அவித்தையினுல் மறைப் புண் டிருக்கின்ற தென்றும், முத்தி காலத்தில் இயற்கைக் குணம் வெளிப்படுகின்ற தென்றும் கூறியிருக்கின்றுர்கள்.

இவற்றை விரித்துச் சைவ மத சகஸ்ர நூஷிணி யென்னும் நூலுள் வரைவாம். ஆவா வுடையோர் புத்தி கௌசல்யத்தினை ஆண்டுக் காண்க.

"இவரும் இவர் சார்பினரும் பொய் பொய் யென்று, பொய்யினையே சிந்தனை செய்பவராகலின் இப் பொய்க் கதை கூறினாா? இவரும் இவர் சார்பினரும் ஒரு வார்த்தையாவது, குற்ற மறச் சொல்ல விரும்பாது, வெற் றுரையாகப் பலவாய வார்த்தைகளைச் சொல்ல விரும்பி, ஒரு நூலையாவது கசடறக் கல்லாது, பல நூல் வல்லா ரென்று, அறியாதார் புகழ, மே லெழுந்த வாரியாய், பல நூல் படித்தவராதலின், அது பற்றி யிப் புரட்

டுக்கதை கூறினாரா? ஒரு நூலைப்பற்றியாவது ஒருவருரையைப் பற்றியாவது எழுதுவதாயின் அந் நூலையும், அவ் வுரையினையும் முறையாய்ப் பாடங் கேட்டுப் பொருளை நன் குணர்ந் தெழுதல் வேண்டும். அவ்வா றின்றித் தன் மனம் போனவா றெழுதல் முறையாகுமா?—இனியேனும் படித்துச் சிவ ஞான சுவாமியைப் பற்றிக் கூறிய குறைக்கு மன்னிப்புக்கேட் டுய்வாரா?" என்று வசை மொழி புகன்றார்.

மேலே காட்டியவாற்றால் சிவ ஞான சுவாமி கருத்து வெள்ளிடை விலங்கலாய் விளங்குகின்றமையின், இவரும் இவர் மதத்தினருமே பொய்க்கதை கூறுபவரும், குற்ற மற்ற வார்த்தைகளைக் கூறாதவரும், பல வெற் றுரை கூறுபவரும், நூலைக் கசடறக் கல்லாதவரும், சில நூலிடையும் வன்மையின் றென்று அறிஞரொருவருக்கும்படி நூல்படிப்பவரும் ஆகின்றனர். இவர் பௌஷ்கராகம விருத்தியை முறையாய்ப் பாடங் கேட்டு, அல்லது, அதிகாரமின்றாயின் பிறரை மொழி பெயர்த்துத் தரும்படி யிரந்து, பின் மொழி பெயர்ப்பை நன் குணர்ந்து, எழுதாது தம் மனம் போனவாறு ஸ்ரீ சங்காராசாரிய சுவாமிகளைத் தூஷித்து எழுதியது துவைத மலத் தடிப்புப் பற்றியா? அறியாமை பற்றியா? பரம்பரைக் குணம் பற்றியா? இனியேனும் ஸ்ரீ சங்காராசாரிய சுவாமிகளைத் தூஷித்த பாவம் நீங்குதற்கு, எம்மவரிடத்து மன்னிப்புக் கேட்டு உய்தற்கு யாங்கள் கூறுமாறு நடப்பாரா? வேதாந்த சாஸ்திரங்களைக் கற் றறியாக் குறையால் வேதாந்திகளை நிந்திக்கின்றாரென்பதை மறுக்க முடியுமா?

"ஸ்ரீ சிவஞான சுவாமிகள் உரையைப் பற்றிய இந்த வொரு விஷயத்தையாவது, வாத சபையில் சாதிக்கச் சித்தமா யிருக்கின்றனரா? இருப்பின் சபைத் தலைமை வகிப்பதற்கு ஸ்ரீமாந் ஜமீந்தார் - அருணாசலச் செட்டியா ரவர்களையே நான் சம்மதிக்கின்றேன்" என்று பிள்ளைகடா கூறுகின்றது.

"இந்த வொரு விஷயத்தை யாவது," என்றமையின், தாம் கடாவிய ஏனைப் பத் தொன்பது விஷயத்தையும், நிலை நாட்டுவதற்கு ஆற்ற லிலரென்று கூறினா ரென்பது எதிர் மறை முகத்தால் விளங்குகின்றது. இதுகாறும், கூறியவாற்றால் பத் தொன்பது கடாக்களும், நமது கட்டாரியாற் குத்துண்டு போயினமையின், அவ்வாறே யிதுவும் குத்துண்ட தென் றுணர்வாராக. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பதே போன்று, பத் தொன்பது கடாக்களுங் குத்துண்டு பட்டபின், இக்கடா எங்ஙனமெஞ்சி நிற்ற றரும்? வாதத்திற்கு வருவதாக இவ் வாறே எமக் கொரு கடித மிறுத்தனர். அவ்வாறே வருமாறு மறு மொழியாய குறுமொழி விடுத்தேம். அது கண்டு ஒரு மொழியு மெதிர் பேசாம லொடுங்கியே நின்றனர். வாதத்திற்கு வர ஆற்ற லுடையவராயின், அக்கால் வந்திருக்கலா மன்றோ? யாங்கள் சைவ சித்தாந்திகள் யாவரோடும் வாதஞ் செய்யச் சித்தமா யிருக்கிறோ மென்று 'அத்வைதி' என்பார் வெளியிட்ட

"அசுத்த சைவ சித்தாந்திக் கோர் வரை வரையறை" என்னும் பத்திரிகை கண்டடங்கினர் போலும்.

17. "அவ்வாறே தாட்டாந்தத்தில் புகுத்தினால், நான் பிரமம் என்னும் ஞானம் ஏளனத்துக் கிடமாகு மென் றஞ்சி மறைத்துக் கொண்டது முறையாகுமா? அன்றியும், அக் கதையின்படி மூக்கரையன் தானத்தில் ஆண்டா னடிமை ஞானமும், சுவாமியார் கருதாமலே அமைந்தன என்பதை அறிந்தாவது திரு வருட் சம்மதம் எது என்பதை யுணர்வாரா?" என்றனர்.

அத் திருட்டாந்தம், தமக்குக் கருத் தின்றிய கைலாயந் தோற்றுகின்ற தென்ற அவ்வளவில் உபயோகமே யன்றி, யேனையவற்றிற்கு உபயோகமன்றாம். முழுத் திருட்டாந்தமு முபயோகப்படுத்துவா ராயின், ஈஸ்வர சங்கற்பத்தாற் கர்மாதீனமாக மூக் கின்றியவனாகப் பிறப்பது போன்று, பிறப்பிலேயே வேதாந்தியாகப் பிறத்தல் வேண்டும். அவ்வாறு ஒருவரும் பிறக்கக் கண்டிலேம். பிறந்தபின் நிஷ்காம கருமம் பக்தி முதலியன செய்து, திருவை யடைந்து பிரஹ்மஞானியாகின்றனரே யன்றிச், சாம்சித்தர் போன்று, இயற்கையிலேயே ஞானியாகப் பிறத்த லிலராதாம். அவ்வாறே பிறர் பழித்தல் போல், அவைதிக சைவசித்தாந்திகட்கு அந்நியமாக வேதாந்தத்தைப் பழிப்பா ரொருவர் வேண்டும். அப்பழிப்பை நிவர்த்தித் தற்குத் தனக்கு உடன்பா டல்லாத "ஆண்டா னடிமைத் திறம்" என்றமையான், 'திரு வருட் சம்மதம் எது என்பதை யுணர்வாரா?' என்றெழுதுதல் விவேகிகள் கூற்றா? ஆண்டா னடிமைத் திறம் கருத் தில்லாது போக, அதனை நிவிர்த்தித்தலே திரு வருட் சம்மதமாம். ஏளனத்துக் குரிய மதம், வேதத்திற்குப் புறம்பாகலின் இவர் மதமே யன்றி வேதத்திற் கூறிய எம்மவர் மத மன்றாம். 'முறை யாகுமா?' என்று, முறையாற் சூட்டுக் கோலைப் பெறாத இவர், முறை பிறழக் கூறு முறை முறையாகுமா?

"இவர் மதத்திற்கு முதலாய ஆசிரியராய் விளங்கிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், தா முய்தற் பொருட்டு ஆண்டானடிமைத் திறம் பேணி, பௌத்த மதத்தை வெல்லுதற் பொருட்டு ஏகாத்ம வாதஞ் சாதித்திருக்கவும் அவ்வுண்மை யறியாது, அவருக்குப் பின் வந்த இடையாய ஆசிரியருங், கடையாய ஆசிரியரும், ஏகான்ம வாதமே ஆதி சங்கராசாரிய சுவாமிகள் கொள்கை யென்று தம்பட்ட மடித்துத் திரிவது நுணுகி யாராயு மறிவின்மை யென்பதை மறுக்க முடியுமா?" என்கின்றார்.

உய்தற்குக் கொள்ளுஞ் சைவ சித்தாந்தத்தில் பிறரை வெல்லுதற் காற்ற லின் றென்றும், பிறரை வெல்லும் ஆற்றலுடைய வேதாந்தத்தில் மோக்ஷ மில்லை யென்றுங் கூறுகின்றார். அவ்வாறாயின் சிவ ஞான சுவாமி தம் பாஷ்யத்தில், ஏனை மதங்களைத் தம் மனம் போன வாறு கோபாந முறையா லெழுதியது பெரும் புரட் டென்று கொள்ளல் வேண்டும். பிறரைக் கண்டித்தற் கெழுதிய தெனின், கண்டித்தற் காற்றலுடைய சைவத்

தில் மோக்ஷ மின்றும். இன்றாகவே, சைவ மதம் பிறரை யேமாற்றிப் பொருள் கவரும் மதமாம். இவர் கூறியவாறே வேதாந்தத்திற் பிறரை வெல்லுதற்கு மாற்ற லுடைமையா னன்றோ, வேதாந்திகளைக் கண்டு, சைவ சித்தாந்திகள் யாவரும் அஞ்சியோடும் சீர்மைய ராயினர். ஸ்ரீ சங்கரா சாரிய சுவாமிகள், தங்கருத்துஆண்டா னடிமைத் திறம் பேணும் அவைதிக மே யென்று, இதுகாறும் வெளி வந்திருக்கும் 115 கிரந்தங்களுள் யாண் டாயினு மெழுதி யிருக்கின்றார்களா ? பிரமாணமாக வொன்றையும் வரை யாது, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், ‘ அவைதிகமாய எமது சைவர் ’ என வெற் றுரையாக, வீதிகள் சந்துகள் பொந்துக டோறும், இவரும் இவர் மரபினரும் தம்பட்ட மடித்தல் தகுதியாமா? அவர்க ளியற்றிய 115 கிரந்தங் களின் வாயிலாக, அவர் கருத்து அத்வைதமே யென்று கொண்டிருக்கும், அவர் மாணுக்கராய எம்மவர் யாவரையும், “ நுணுகி யாராயும் அறிவின் மை என்பதை மறுக்க முடியுமா” என்று எழுதியது, எந்த எரிவாய் நாகிற் புகுதற்கோ ? கும்பி பாகம் என்னும் நாகத்தினையே யடைவர். அவர்க ளியற்றிய நூலைப் பரிசித்தற்கும் அதிகார மற்ற இவரும் இவர் மதத்தின ரும். அவர்கள் நூலை யெங்ஙனம் நுணுகி யாராய்ந்தனர்? அவர் மாணுக்க ராய எம்மவருக்கு விளங்காது, சுவாமிகளைத் தூஷிக்கு மிவர்கட்கு விளங் கியது எப் பாவ விசேடத்தாலோ? நுணுகி யாராய்தற்குத் தர்க்கம் வியா காணம் சாங்கியம் யோகம் பூர்வ மீமாஞ்சை முதலிய நூல்களைக் கற்றிருக் கின்றனரா ? அவ்வா றின்றி, அபூர்வ நுண்ணிய ஆராய்ச்சி யுடையவரா யெங்ஙன மாயினர் ? உமாபதி சிவாசாரிய சுவாமிகளும், அப்பய்ய தீக்ஷித ரவர்களும் புகழ்ந்து கொண்டாடிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை நிந்திக்கு மிவர், தமது மதாசாரியர் எனக் கொண்டாடும் உமாபதி சிவாசாரியர், சிவ ஞாந சுவாமி, திரு மூல நாயனர், சிவ ஞாந வள்ளலார், கண்ணுடைய வள்ளலார், தாயுமான சுவாமிகள், சுந்தா மூர்த்தி முதலியோர்களை நிந்தித் தற்கு அஞ்சா ரஞ்சார். இனி யெழுதும் புஸ்தகத்தில் அவர்களை நிந்தித் தெழுதப் புகினும் புகுவர். இக் கருத்தா னன்றோ வேதாந்திகளுஞ், சைவ சித்தாந்திகளும் தம்மொடு சேர்க்கா திவரை விலக்கினர். அதனு லிவரும் தனித் தொரு மத முடையரா யிருக்கின்றனர். சங்கா திக் விஜயம் 16-வது சருக்கத்தில், கோகாணத்தி விருந்த நீல கண்ட சிவாசாரியர் ஸ்ரீ சங் காாசாரிய சுவாமிகட்குத் தோல்வி யுற்று மாணுக்க ராயின ரென்றும், இன்னும் பல மதத்தினரும் தோல்வியுற்று மாணுக்கராயினரென்றும் கூறி யிருக்க, அதனை யுணாாது பௌத்த மதத்தை மாத்திரம் ஸ்ரீ சங்கரா சாரிய சுவாமிகள் வென்றதாக மையலுற்றுக் கையாடினமையின், அஞ்ஞா நம் என்னும் தோல்வித் தாந அறை யுண்டனர். ஊரேறு அன்னவும் ஆமா வன்னவும் மதாப் புற்றுத் திரியு மெல்லா மத வாதிகளையும், அடக்குதற்குப் பரப் பிரஹ்மப் பொருளாய பாசிவனே ஸ்ரீ சங்காாசாரிய சுவாமிகள் என் னும் பெயருடன் அவதரித்தன ரென்றுணர்க. ஐந்நூறு வருடத்திற்கு முன் தென்னிந்தியாவில் தென் மொழியில் தோன்றிய சைவ மதத்தினராய இவ ரும் இவர் மாபினரும் மூவாயிர வருடத்திற்கு முன் னவதரித்த, வேதத்

தின் பொருளை யாவருக்கும் விளங்கும்படி விளக்கி, வேதாந்த நூல் பல செய்த ஸ்ரீமந் மஹாதேவ மாநுஷ அநுக்கிரக லீலா விக்கிரகமாகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளைப் பற்றிப் பேசுதற் கெவ்வா றருக ராவர்? அருக ராகாமையின் ஒன்றும் பேசா தொழிவாராக.

"ஆண்டா னடிமைத் திறத்தி னுண்மைப் பொரு ளிவருக்காவது, இவர் மாபினருக்காவது தெரியுமாயி னதனை யேளனஞ் செய்ய மாட்டார்" என்றார்.

ஆண்டா னடிமைத் திறத்தி னுண்மைப் பொருளை யாமும் எம்மவரு முணர்ந்தே யேளனஞ் செய்கின்றோ மென் றுணர்வாராக.

"இரு பொருள்களு முருவுடைப் பொருளாய், ஓரிடத்திற் குந்திக் கொண்டிருப்பதே யாண்டா னடிமைத் திற மென்று, இவரும் இவர் சார்பி னரும் வீஞ்சச்சிரமங் கொள்ளுகின்றனர்" என்றார்.

'இரு பொருள்களு முருவுடைப் பொருளாய்' என்றதன் பொரு ளென்னை? உருவம் என்பது குணமா? சொருபமா? குணமா யின், உற்பூத குணமா? அநுற்பூத குணமா? அல்லது 'உருவம்' என்பதற்குக் குணமுஞ் சொருபமும் என்பது பொருளா? உற்பூத குணம் உடைய பொரு ளென்று கூறுதல் பொருந்தாது; புறவிந்திரியக் காட்சி யன்மையி னென்க. அநுற்பூத குணம் என்றல் பொருந்தும். இரு பொருளுக்கும் அறிவு இச்சை செயல்க ளென்னும் மூக் குணங்களு முண்மையின். அங்ஙன மாயினும் கேவலம் குணப் பொருள்க ளெனக் கூறல் பொருந்தாது. குணியாய சொரூப மின்றி, அறி விச்சை செயல்க ளாய குணங்கள் தனித் தியங்கா வாதலின் பொருந்தாதாம். சொரூபம் என்றல் பொருந்தும். சிலர் சேதநமே, பதிக்கும் பசுவுக்கும் சொரூப மென்றும், சிலர் சார்ந்த வண்ணஞ் சார்தல் சொரூப மென்றும் கூறுகின்ற மையான். அங்ஙனமாயினும், அறிவாய சொரூப மாத்திரத்தால் ஈரிடத் தும் பேதந் தோற்றாமையின், ஆண்டா னடிமைப் பேதந் தோற்றுதற்கு, அறிவு இச்சை செயல்கள் தனித் தியங்கல், தனித் தியங்க லின்மை, முத லிய குணங்கள் வேண்டப் பெறுதலின் பொருந்தாதாம். குணமுஞ் சொ ரூபமும் உடைய பொரு ளென்றலே பொருத்த முடைத்தாம். அறிவு, இச்சை, செயல், தனித் தியங்க லின்மைக் குணங்களையும், அறிவாகிய சொரூபத்தையும், உடைய பசுப் பொருளும், அறி விச்சை செயல் தனித் தியங்கற் குணங்களையும் உடைய பதிப் பொருளும், ஓரிடமாய மகா கைலா யத்தில் பசுவின் மீது, பதி தமது திருவடியை வைத்துக் குந்திக் கொண் டிருப்பதே, ஆண்டா னடிமைத் திறத்தின் பொருளா மென்று யாமும் எம் மவரு முணர்ந்திருக்கின்றோம். ஏனையோர்க்கு மிதுவே பொருளாம். விரிப்பின் ஆயுள் போதா தாகலினாலும், புத்தகம் விரியு மென்னுங் கருத்தி னாலும், நண்பர்கள் சுருக்க வேண்டு மென்று விரும்பியதனாலும், சுருக்கினே

மென் றுணர்வாராக. இதனுற்முன் ஆண்டா னடிமைத் திறம் சுருதி விரோத மெனக் கொண்டு எளனஞ் செய்கின்ரும்.

"பெத்த முத்தி யிரண் டிடத்தும், இறைவனை யின்றி உயிர் தனித்து நில்லாமையானும், தனித்து ஒன்றை யறியாமையானும், தனித் தொன் றைச் செய்யாமையானும், தனித் தொன்றை யிச்சிக்காமையானும், எவ் விடத்து மிறைவன் ஆண்டானும், உயிர் அடிமையும் என்று சைவ சித் தாந்திகள் கூறுகின்ருர்க ளென்பதை யினியேனு மறிந்து கொள்ளுவா ரா?" என்கின்ருர்.

'பெத்த முத்தி யிரண் டிடத்தும், எவ் விடத்தும் இறைவன் ஆண்டா னும், உயிர் அடிமையும்' என்று சைவ சித்தாந்திகள் கூறுவார்களாயின், பெத்த தசையினும் முத்தி தசைக்கு விசேடம் யாது? பெத்த தசையினும், பதியும் பசுவும் ஆண்டான் அடிமையாயும், உயிர்க்குத் தனித்து நிற்றல், அறிதல், செய்தல், இச்சித்தல் ஏலாமையானும், முத்தி தசையினும், பதி யும், பசுவும் ஆண்டா னடிமையாயும், உயிர்க்குத் தனித்து நிற்றல், அறிதல், செய்தல், இச்சித்தல் ஏலாமையானும், இரு தசையும் ஒன்றேயாம். குருவை யடைந்து அநந்த சிரம முற்று, ஞாந மடைந்ததற்கு யாது பய னுளது? பெத்த தசையினும் முத்தி தசையில் அதிக விசேட முள தெனக் கருதி யன்றே ஜீவன் பிரவிர்த்திக்கின்ருன். விசேட பலனைக் கருதாது ஒரு மந் தனும் பிரவிர்த்தியான், என்பதை யுணர்ந்து இனியேனு மடங்குவாராக,

18. "வேதாந்திக ளென்று சொல்லித் திரிகின்ற அனைவரும் வேதாந்த சாஸ்திரம் படித்திருக் கின்ருர்களா?" என்கின்ருர். வேதாந்திக ளெனக் கருதுவோர் யாவரும் சீவ காருண்யம், ஈஸ்வர பக்தி, பாச வைராக்கியம், பிரஹ்ம ஞாநம் நான்கும் ஓர் வடிவா யெழுந்தருளியிருக்கும் ஞாநாசாரியரை யடைந்து, தம் மதத்திற் குரிய நூற்களுள் தம் கருத்தளவில் பாடங் கேட்டு, அவ்வாறே யொழுகுகின்ருர்கள். சைவ சித்தாந்திகளோ பெயர் மாத்திரம் சைவ சித்தாந்தி யென விட்டுக் கொண்டு, தம் மதத்திற் குரிய நூல் இன்ன தென்றும், தம் மத சித்தாந்த மின்ன தென்றும் உணரும் உணர்விலியாய், பிறர் கேட்கின் தம் மத சித்தாந்தத்தை, தம் மத நூலிற் கூறி யாங்கு கூருது மூா ஹுறக் கூறியும், பொருள் கவர்ந்து திரிவார் அநேகரை யித்தே சத்து மெத் தேசத்துங் காண்கின்றே மாகலின், கல்வி யில்லாது நாமாபி மாந மாத்திரமாயும், பல சைவ சித்தாந்திக ளீண் டிருக்கின்றன ரென் றுணர்க.

19. "பதி பசு பாசம் மூன்றும் அநித்தியமாயின், இம் மூன்றின் வேருன நித்தப் பொருள் எது? இவர் தம் மதத்தைத் தம் மட்டில் வைத் துக் கொள்ளாது, பெரியார் கருத் திதுவே யென் றவர்கள்மீதும், தமது மதத்தை யேற்றுகின்ருர். அந்தோ! இத் தீச் செயலுக் கென்ன பய னடைவரோ? இவரா லெடுத்துக் காட்டப்பட்டிருக்குஞ் செய்யுட்களில்,

பதி, பசு, பாசம், மூன்றும் அநித்தியமாகக் கூறி யிருப்பதாகக் காட்டக் கூடுமா?'' என்கின்றார்.

பதியும் பசுவும் பாசமும் அநித்தியமேயாம். பசுத் தன்மை, பதித் தன்மைகள் நீங்குழி, யெஞ்சிய சேதநங்கட்குப் பேத மின்மையின் அபேத மாய்ப் பிரஹ்மம் என்னும் பெயர் பெற்று, ஒரு பொருளே நித்தியமா யிருக்கு மென் றுணர்க. சூட்டுக் கோல், 55-வது பக்க முதல் 83-வது பக்கம் வரை யெண் ணிறந்த செய்யுட்களை யறிவித்து, இதுவே அப் பெரி யார் கருத் தென, அறிவித்திருக்க, அதனை யுணராது, எம் கருத்தை அப் பெரியார்மீது ஏற்றுவதாகக் கூறினார். "பொய் யுலகம் பொய்யாகக் காட்டி யும். பொய் தோன்றின் மெய் தோன்று. கடைப்படும் உலகப் பொய்யினை மெய்யாகக் கருதினேன். எங்கும் என் சொரூபம் சச்சிதாநந்த இல கொளியா யிருந்திடும். வஞ்சகச் சகப் பொய் யனைத்தையும் மறந்து. சுருதி யின் றுணிவால் நினைவுகொண் டுலகம் துச்சமென் றுணர்தல் நிச்சயமாம். பொய்ச் சகத் துறினுங் கலங்குறார். ஈசன் உயிர்கள் தாம் மாயா சங்கிதங் கள். உமைபாகத் தண்ண லிறந்தும், என்னை யறியப் பொய்யாகி யி ரு ந் தது. மருடக்கொம்பாகு மன்ன மாயைதனை யகற்றாய். திகழும் நீ பிரம மென்றருளும். துன்பத் துவிதந் தொலைந்த எல்லா வுலகு மிறந்தும், அத்தி பாதிப் பிரிய ஆதி வெளியா யிருந்தால் சுத்தமிலாச் சிவ பரத் துவைத மெங்கே? அநாதி பவ பந்த மெலாம் துப்பறவே நன்றாகத் துடைத்து. ஆன்மாவே பரம சிவம். ஆன்மாவே விசிட்ட காரணீத, வாக்கு மனாதீத சர்வஞ்ஞன பூரணனும். ஆன்மாவே பரமசிவ சொரூபம். சககாரண னும் புருடனே. பரப் பிரமம் நானே. பரசிவனும் நானே. சிவ பர வைக்கியத்தை யடைந்து. ஆன்ம வுபாசனை பண்ணக் கடவன்." என்பன வாதி வாக்கியங்களால், பதி பசு பாசம் அநித்தியம் என்று கூறப்பட் டிருப்பன அப் பெரியார் கருத்தா? எமது கருத்தா? பெரியார் கருத்தை யே அப் பரம்பரையி லுள்ள யாமும், எம்மவரும் கைக் கொண்டு கூறியிரு க்க, அதனை யறியாது, எமது கருத் தென்று பொய் புகலுகின்றார். இப் பொய்க் கூற்று ளவாம் பாவத்திற்கு, எக் குருவைக் கொண்டு பிராயசித் தம் செய்து கொள்ளக் கருதியிருக்கின்றனர்? இவை யாவும், பொ ய் யென்று கூறிய இவர்க்கு, அவ் வாக்கியங்களை யுணரும் அறிவின்றாயினும் ஏனை யறிஞர் குழாங்கள் உண்மை யறிவார்களாக. தாம் இச் செயலைச் செய்து விட்டு, 'அந்தோ! இத் தீச் செயலுக் கென்ன பய னடைவீரா?' என்று கூறியது அறியாமை பற்றியா? கர்வம் பற்றியா? இழி குணம் பற்றியா? பரம்பரைக் குணம் பாழாகா திருக்க வேண்டு மென்னும் கருத் துப் பற்றியா? இவ்வா றெழுதின் தம்மைச் சார்ந்த அறிவிலிகள் வியப்ப ரென்னுங் கருத்துப் பற்றியா? இக் கருத்துள் எக் கருத்துப் பற்றி யெழுதி னும் அடா தடாது. சூட்டுக்கோலிற் காட்டிய செய்யுட்களில் பதி பசு பாசம் அநித்திய மென் றுள்ள வாக்கியங்களை யீண் டெடுத்துக் காட்டினமையின், அது கொண்டடங்கி வாழ்வாராக.

20. "முக வுரை யெழுதிய யாரோ வொருவர் தம் முடைய படிப்பின் றிறத்தைப் பிறர் அளந்து கொள்ளுமாறு ஏதேதோ கூறுகின்றார். அவர் தங் கூற்றோ டமையாது தொல்லாசிரியர் திரு வாக்குக்களையும் தம் மனம் போனவாறு திரித்து, அவ்வாசிரியர் கூற்றாகக் கூறுகின்றார்." என்கின் றார்.

முக வுரை யெழுதுவோரும், நூ லெழுதுவோரும், தம் படிப்பின் றிறத்தைப் பிற ரறிந்து கொள்ளுவதற்கே யெழுதுவ தன்றித் தாம் கற்ற தொன்றும், மூன்பின் மூரா ணுற எழுவ தொன்றுமாய்ப் பிறர் செவ்வனே யுணராதிருக்கு மாறு, எழுதுவது கற்றார் திற னன்றாம்.தாம் கற்ற வளவில் முகவுரை யெழுதியவரை யேளனஞ் செய்கின்றமையின், இவர் எழுதிய கடா, இவர் கற்ற கல்வியிற் குறைந்தும், அல்லது பிறர்பால் விஷயங்களை யாசித்தும், எழுதியிருக்கலா மென்று விளங்குகின்றது. இதனால், கற்ற வற்றை யுண்மையாக எழுதுந்திற னின்றிப் பொய் பொதிந்த புரட்டுக் குழூஉக்களை யெழுதி வெளியிடுபவ ரென்று வெள்ளிடை விலங்கலாய் விளங்கலாயிற்று. 'ஏதேதோ' என்றதை விரியாது விடுத்ததன் காரண மென்னை? விரிக்கின் படலக்காரர் ஒழுக்கம் வெளியா மெனக் கருதியா? படலக்காரரிடத்துள்ள நசையாலா? பிறர் பழிப்ப ரெனக் கருதியா? முக வுரையிற் கூறியயாவும் படலக்காரரிடத் துண்மையாயினமையின், மீண்டுங் கூறப்புகின் வழுவா மெனக் கருதியா? விரியாது விடுத்த கருத்தை விளக் குவாராக. 'தொல்லாசிரியர் திரு வாக்குகளையும்' எனப் பன்மைச் சொற் புகன்று, ஒரு குறளையே திரித்ததாக அறிவித்தனர். 'வாக்குகள்' என் பது குறட்பாவை யுணர்த்துவதா? சொல்லை யுணர்த்துவதா? வாயை யுணர்த்துவதா? வாயையுஞ் சொல்லையும் அன்று; கருவியாகுபெயராய்ப் பாவை யுணர்த்திற் றென்பரேல், ஒருமையைப் பன்மையாக மயங்கினது, நன்னூல் தொல்காப்பிய மதங்கள் பற்றியா? தம் மதம் பற்றியா? தம் மதம் பற்றி யெனின், அம் மதம் ஈண் டெவர்க்குஞ் சம்மத மன்றாகலின் செம் மதமே சம்மதமாம் என்க. 'புலவனார் வந்தார்' என்பது போன்று, ஒன் றனையே பன்மையாக வுயர்த்திக் கூறினே மென்பரேல், கடா "2-ம் பக் கம், திரு மந்திரச் செய்யுளாலும், 8-வது பக்கம்-திரு மந்திரத் திரு வாக்கி னாலும், என்ற திரு வாக்கினானும், -வது பக்கம்—என்னுந் திரு வாக்கால், 12-வது பக்கம் - ஞான வாசிட்டச் செய்யுளுக்கு, 13-வது பக்கம், என்றற் றொடக்கத்துச் செய்யுளால், 14-வது என்னுந் திருக் குறளுக்கு," என்ற இடங்களில், திருக் குறட்கும், மற்றைச் செயயுட்கட்கும் உயர்வு பற்றிப் பன்மைச் சொற் புணர்த்திக் கூறாத தேனோ? ஓரே நூலிலுள்ள குறளை யோரிடத் தொருமைச் சொல்லாலும், ஓரிடத்துப்பன்மைச் சொல்லாலும், சகசாணவ வயப்பட்டு மயங்கிக் கூறிய இவர் தாமா முகவுரை யெழுதிய வரைப் புன் மொழி புகல்பவர்?

'தம் மனம் போனவாறு திரித்துக் கூறினு' ரென்றார். பாடபேத முள்ளவற்றைக் கூறுபவர், திரித்துக் கூறுபவராயின், பாடதே மென்

னுஞ் சொல் உலகில் வழங்கக் காரண மின்றே. அவ்வாறாயின், சிவ ஞான பாஷ்யத்திற் பாட பேத முள்ளனவாகக் காட்டப்பட்ட யாவுந் திரித்த தென் றாகிச் சிவ ஞான சுவாமி புரட்ட ரென் றங்கீகரிக்க நேரும். ஆகலின் பாட பேதங் கூறுவோர் திரித்தவ ராகார்; ஆகார். திருக் குறளில் பாட பேதம் பல வுள்ளன வாக, சென்னை, கோ – வடிவேலு செட்டியார், சோழ வந்தான்—அரசஞ் சண்முகனார், தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளை யென்பாரும், இன்னும் பலரும் அறிவித்திருக்கின்றனர். அவ்வாறே சில பாட பேதங்க ளுள்ள பிரதி முகவுரை யெழுதியவ ரிடத்து மிருக்கின்ற தென் றுணர்வாராக.

“காலத்தி னாற் செய்த நன்றி யொருவற்கு, ஞாலத்தின் மா ணப் பெரிது.” என்று சூட்டுக் கோன் முக வுரையி லச்சிட் டிருக்க, அதனைப் புரட்டிக் கடாவின் 18-வது பக்கத்து, ‘ஒருவர்க்கு’ என்று சூட்டுக் கோலி ருப்பதாக அச்சிட்டனர். இவ்வாறு இதனைப் புரட்டிய விவர் புரட்டை யெப் புரட்டிற் சேர்ப்பது? எழுத்துப் புரட்டிலா? சொற் புரட்டிலா? வாக்கியப் புரட்டிலா? செய்யுட் புரட்டிலா? நூற் புரட்டிலா? சமயப் புரட்டிலா? மதப் புரட்டிலா? புவனப் புரட்டிலா? அண்டப் புரட்டிலா? ஜகப் புரட்டிலா? ஜீவப் புரட்டிலா? சிவப் புரட்டிலா? இத் துவாதசப் புரட்டுள் ஒரு புரட்டுச் சேர்த்துக் கொள்ளுமாறு இனி யெழுந்துங்கா லெழுதுவாராயின், அந்தப் புரட்டுடையோ ரென் றிவருக்குப் பட்டங் கொடுக்கலாம். அப் பட்டத்தைப் பெற்றுச் சைவப் பிரசாரகர் என்னும் பட்டத்துக்கு முன், புரட்டு என்னும் பட்டத்தையுங் கூட்டிப் ‘புரட்டுச் சைவப் பிரசாரகர்’ என்னும் பெயரோடு விளங்குவாராக.

“காலத்தி னாற்செய்த நன்றி யொருவற்கு (சிறி தெனினும்), ஞாலத் தின் மாணப் பெரிது”, ‘ஒருவனுக்கு இறுதி வந்த வெல்லைக்கண் ஒருவன் செய்த வுபகாரம், தன்னை நோக்கச் சிறிதா யிருந்ததாயினும், அக் காலத்தை நோக்க நிலவுலகத்தினும் மிகப் பெரிது.’ என்பது பரிமேலழகர் உரையாம். இதன் கண் ‘ஒருவற்கு’ என்னும் பதமும், ‘சிறிதெனினும்’ என்னும் பதமு மின்றி இவ் வுரை முடிவு பெறாதாம். ஒருவர் ‘சிறி தெனினும்’ என்னும் பாடத்தைக் கொண்டு, ‘ஒருவனுக்கு’ என்ற சொல்லை அத்தியாகாரஞ் செய் தனர். ஒருவர் ‘மாணப் பெரிது’ என்றதனானே ‘சிறி தெனினும்’ என்றது தானே பொருந்துதலின் ‘ஒருவற்கு’ என்னும் பாடத்தைக் கொண்டு ‘சிறி தெனினும்’ என்றதை அத்தியாகாரஞ் செய்தனர். ஆகலின், இருமையுஞ் சால்புடைத்தேயாம். இதனை யுணரா வா னின்றி, முகவுரை யெழுதியார் மீது புரை யுரை கூறிப் புல் லொழுக் குடையோ ராயினர். முகவுரை யெழுதியவரைப் பற்றி விரித்திருப்பாராயின், அவர் தங் கல்வித் திறத்தை யிவ ரளந்து கொள்ளுமாறு கண்டன மெழுதி யிறுத்திருப்பர். இக் கருத்துப் பற்றியோ விரிக்காது விடுத்தனர்?

“இப் புரட்டு முகவுரையை வாங்கிச் சேர்த்து வெளியிட்ட சுவாமியா ருக்குத், திருக் குற ளாராய்ச்சியுண் டென்று ஒப்புதல் கூடுமா? தாம் பயின்

றறியாத திருக் குறள், திரு மந்திரம், தேவாரம், திரு வாசகம் முதலிய நூற்களிற் றலையிட்டு, தாங் கற்ற நூல்களிலும், தமக்கு நுணுகிய ஆராய்ச்சியுண்டோ? இல்லையோ என் றையுறச் செய்வதைவிடத் தம் மளவிற் றாம் அடங்குதல் முறைமை யென்பதை யினியேனு மறிந் தடங்குவாரா?" என்கின்றார்.

திருக் குறட் செய்யுள், சூட்டுக் கோலி லச்சிட்டிருப்பதனை, அறியும் தன்மை யில்லா இவர்க்கு, திருக் குற ளாராய்ச்சியேனும், சூட்டுக் கோலாராய்ச்சியேனு முண் டென் றொப்புதல் தகுமா? சூட்டுக் கோலைப் படித்தற்கு பாவ விசேடத்தாற் கண் ணின்றாயினும், பிறர்வாயிலாகக் காதாற் கேட் டவ்வாறாயினு மெழுதலாம். அதற்கும் பாவ விசேடத்தாற் செவி மந்தமாயின், கண் ணில்லாக் குருடரும், காதில்லாச் செவிடருமாய் வாதத்திற்கு வந்திடுறல் என்ன அறியாமை சொல்லோ? திருக் குறண் முதலிய நூல்களில் நுணுகிய ஆராய்ச்சியின் றின்மைய மிருந்தமையா னன்றோ, சைவர்கட்குப் பாதகமான அவற்றின் செய்யுட்களை யெல்லா மறிவித்து வாதிட்டுக் கண்டித்தேம். இவர்க்குத் திருக் குறள் திரு மந்திரம் தேவாரம் திரு வாசகம் முதலிய நூல்களிலும், சிவ ஞாந பாஷ்யத்திலும், சிவ ஞாந வள்ளலார் சாஸ்திரம், தாயுமான சுவாமிகள் பாடல் முதலியவற்றிலும், ஞாந வாசிட்டம் முதலிய வேதாந்த சாஸ்திரங்களிலும், 'ஐயம்போ லரந்தையுண்டோ' என்றுஞ் சைய முளதாமாயின், அதனை நிவிர்த்திப்பான், பெரியாரைச் சரணாகதியாக அடைந்து, கேட்குமாற்றாற் கேட்டு, அவர் விளக்கு மாற்றால் விளக்கப் பெற்று, அவ்வழி ஒழுகி யடங்காது, ஐயத்தோடு வெளி வந்து ஊரே றன்ன மதர்ப்புற் றுவாரித்த லெற்றிற்கு? இனியேனும் இக் கட்டாரி பெற்று அடங்குவாராக.

"சணப்பன் வீட்டுக்கோழி தானே விலங்கில் மாட்டிக் கொள்வது போன்று, யோசனை யின்றித் தாமே மாட்டிக் கொண்டார்." என்கின்றார்.

பிறர்க்குப் போட்ட சூட்டுக் கோலின் மத்தியில் நுழைந்து மாட்டிக் கொண்டு, தாமுஞ் சூடுண்டு, துள்ளித் துடித் தெழுந்து, கடாவிடுத்துக் கட்டாரியால் ஈரிருபத் திடத்துக் குத்துண்டு விழிப்பவர் இவரா? யாமா? தாம் சூட்டுக் கோலின் மாட்டிக்கொண்டதனை யுணராது, சூட்டுக் கோலான் மாட்டிக் கொண்டா ரென்று, கூறுதல் அறிஞர் கூற்றா? அறிவிலி கூற்றா?

"அவற்றுட் சிலவற்றை யீண் டெடுத்துக் காட்டினும்" என்றார். முழுமையு மெடுத்துக் காட்டி யிருப்பாராயின், தமது கடா முழு வதுங் கட்டாரியாற் குத்தப்பட்டு அங்கத் தன்மை பெற்றிருப்பர். இக் கருத்தே பற்றி முழுமையுங் காட்டவில்லை போலும்!

"எமது கேள்விக்கு எழுத்து மூலமாக விடை தரினுந் தருக" என்று கூறினமையின் இவர் கடாவை யடக்கற் கேற்ற கட்டாரி விடப்பட்டிருக்கின்ற தென் றுணர்வாராக.

"வாத சபை கூட்டி விடைதர எண்ணினும் நாம் சித்தமா யிருக்கின்றேம்." என்று கூறிக் கடாவை முடித்தார்.

இவ ரன்ன பல்லோரது தொல்லையும் ஒருங்கே யொழிப்பான் கருதியே 'அந்வைதி' என்பார், "அத்வைதிகளை வாதத்திற்கு வா வழைத்த அசுத்த சைவ சித்தாந்திக் கோர் வாத வரை யறை" என்ற பெய ருள்ள பத்திரிகையைப் பல்லோரு மறியப் பகிரங்கப்படுத்தினர். அது கண்டு சைவ சித்தாந்திகள் வாதத்திற்கு வரும் வழி கூறாது, பல வெற் றுரை கூறிக் காலங் கழிக்கின்றனர். அச் சைவ சித்தாந்திக ளேற்படுத்துஞ் சபைக்கு, 'அந்வைதி' என்பார் கூறிய வாத வரை யறையின் பிரகாரமே, வேதாந்திகளை வாதத்திற் கழைப்பார்களாயின் அக்கா லச்சபைக் கிவர் வரின், இன்னே ரன்ன பிற நிகழ்த்தினுங் கண்டநஞ் செய்யச் சித்தமா யிருக்கின்றே மென் றுணர்வாராக.

இவர் பிறர்க்கிட்ட சூட்டுக் கோலைப் பெற்று, அதனைச் செவ்வனே யுணராது, முன் பின் முரா ணுற வுணர்ந்து, இருபது கடாக் கடாவினர். அதனல், "சூட்டுக் கோலாற் சூடுண்டு, துள்ளி யெழுந்த தூத்துக்குடி முத்தைய பிள்ளை கடா" என இவரைக் கடாவாகக் கொண்டு, அதனை யடக்கற் கேற்ற கட்டாரியாக, இப்புத்தக ரூபமான கட்டாரி விடப்பட்டமையின் இந்நூற்குச், "சூட்டுக் கோலாற் சூடுண்டு, துள்ளி யெழுந்த தூத்துக் குடி முத்தைய பிள்ளை கடாவை யடக்குங் கட்டாரி" எனப் பெய ரீந்தா மென்க.

இனியேனும், பெரியார் நிந்தை, வேதாந்த சாஸ்திர நிந்தை, ஸ்ரீ சங்காசாரிய சுவாமிகள் நிந்தை, குறட் புரட்டு, வியாக்கியானப் புரட்டு, பௌஷ்கராகம வுரைப் புரட்டு முதலியவற்றைச் செய்யாது, பெரியாரைச் சரணகதியாக அடைந்து வேதாந்த சாஸ்திரங்களை முறையாகக் கேட்டு அவ்வழி யொழுகித் தோல்வியுற்றதற்கும், நிந்தித்ததற்கும் எம்மவரிடத்து மன்னிப்புக் கேட் டுய்வாராக.

இவர் போன்றே, ஆரியம் அற்பங் கற்ற அந்நிய தேயத்துறந்தார், வே றொருவரது பெயரைப் போர்த்துக் கொண்டு, கற்றூர் கண்டு கழித்தொதுக்கு மாறு இருபத் தைந்து விடயங்க ளெழுதிச் "சைவ சித்தாந்த வைபவம்" என்னும் முக்கியப் பெயரையும், "நியாய கட்கம்" என்னுங் கௌணப் பெயரையும் இட்டு எழுதிய ஆபாசப் புத்தகம் ஒன்று மறைவாய்ச் சிற்சில விடங்களிலு நிலவுதல் கண்டநம். அவ் வுலவலை யொழிக்கக் "கட் கம்கொண்ட காளியைச் சேயிக்கும் காமாரி" என்ற பெயருடன் கண்டநம் வெளியிடுகின்றேம். அதனையும், இவரும் அவருங் கண் டடங்கி யிடர்ப்படா தின்புறுவாராக.

> உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
> யிடைக்கண் முரிந்தார் பலர்.

*அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை*
*வியந்தான் விரைந்து கெடும்.* 474

*வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை*
*யுடையம்யா மென்னுஞ் செருக்கு.* 844

*இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை*
*தவலுங் கெடலு நணித்து.* 856

*கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்*
*காற்றா தாரின்னா செயல்.* 894

*எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்*
*பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.* 896

*வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்*
*தகைமாண்ட தக்கார் செறின்.* 897

சூட்டுக் கோலாற் சூடுண்டு
துள்ளி யெழுந்த தூத்துக்குடி முத்தைய பிள்ளை
கடாவை யடக்குங் கட்டாரி
முற்றுப் பெற்றது.

---

*காள யுத்திஷு ஐப்பசிமீ*



உ

கணபதி துணை.

சற்குருப்யோ நம:

# குரு ஸ்தோத்திரம்.



காருருவக் கமலமலர்க் கண்ணணிவர் வாகனமாங் கருடப் புள்ளின்
சீருருவைத் தியானிப்போர் திகழுமரா விடநீக்குஞ் சேர்ந்தாங் கென்னெனன்
வாருருவக் கலைகடந்த காசிகா நந்தனெனும் வள்ளல் நாமந்
தோருருவைத் திநஞ்செபிப்போர் மடமையரா விடநீங்கி யுய்வா ரன்றே.

சீராருந் தென்மொழியும் வடமொழியும் பயின்றலகற் றாட் சிறப்புற் றோங்கு
மோராரு மிலக்கியமு மிலக்கணமுந் தருக்கமுமுற் றெளிதி னோர்ந்தே
பாராரும் வேதாந்தக் கேசரியாய்ப் பரசமயப் பகட்டை மாய்க்குங்
காராருந் தெருள்வள்ளல் காசிகா நந்தனடி கருதி வாழ்வாம்.

ஸ்வாமிநாத பிள்ளை.



[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

வி. ஆர். வேலப்ப பிள்ளை.



உ சிவமயம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 1 | 14 | சிவாதார | சிவாவதார |
| 4 | 10 | இன்றது | இன்றன |
| 5 | 8 | ஷடாந்த | ஷடந்த |
| ,, | 37 | அள தென் | அள வென் |
| 16 | 38 | பிரத்தொம்கா | பிரத்தொம்சா |
| 20 | 20 | சாத்தியாசாமாநாதி | சாத்தியசாமாநாதி |
| 24 | 16 | பரிசிந்நைக | பரிச்சிந்நைக |
| 26 | 6 | செய்திருப்பரேல் | செய்யாதிருப்பரேன் |
| 34 | 37 | தோடமிலி யோகஞகி | தோடமிலி யேகஞகி |
| 38 | 36 | மேன்ன | மென்னை |
| 52 | 30 | ஹ்ர | ஹ்மா |
| ,, | ,, | ஷ்ணு | விஷ்ணு |
| 59 | 39 | ஸ்ரீமாந | ஸ்ரீமாந் |
| 75 | 33 | செயயுட் | செய்யுட் |
| 76 | 18 | யெழுந்துங்கா | யெழுதுங்கா |
| ,, | 39 | ளாராய்சிச் | ளாராய்ச்சி |
| 77 | 22 | ரூவாரித்த | ரூரவாரித்த |
| ,, | 32 | வுஜடங் | வுடஜங் |

# ஸ்ரீ காசிகாநந்த சுவாமிக ளவர்கள் இயற்றிய புத்தகங்கள்.

1. விஜய சக்தி (வெற்றி வேல்) — செந்திநாதையர் மஹா வக்ர வீரபத்திராஸ்திரத்திற்குக் கண்டநம்.
2. ஆட்டின் கோல் முதற் பாகம்.
3. ௸ இரண்டாம் பாகம். சொக்க லிங்கச் செட்டியார் தூர்வை பாசகப் படல மறுப்பு.
4. கடாவை படக்குங் கட்டாரி. தூத்துக்குடி முத்தையா பிள்ளை கடாவிற்கு மறுப்பு.
5. கட்கங் கொண்ட காளியைச் செயிக்குங் காமாரி. சாமி ஐயப்பா தேசிகர் சைவ சித்தாந்த வைபவ மறுப்பு.
6. சிவ சங்கராவதாரம். சொக்க லிங்கச் செட்டியார் சோம சுந்தர மாலை மறுப்பு.
7 சந்நியாச விதி.
8. சமாதி விதி.
9. சந்நியாசப் பத்ததி மொழி பெயர்ப்பு.
10. பிரஹ்ம கீதை வசநம் மொழி பெயர்ப்பு. ரூ. 0—12—0
11. சாஸ்திர சித்தாந்த லேச தாத்பரிய சங்கிரகம். ஸ்ரீ வாசுதேவப் பிரஹ்மேந்திர சரஸ்வதி ஸ்வாமிக ளவர்களியற்றியதன் மொழி பெயர்ப்பு. 0—8—0
12. பிரஹ்ம சூத்திரமும் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமும். 3—0—0
13. பிரஹ்ம சூத்திரம். ஸ்ரீகண்டாசார்ய பாஷ்யம் 3—0—0
14. வேதாந்தப் பரிச்சேதம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—4—0
15. சசி வன்ன போத உரை. 0—8—0
16. கீதாசார வுரை 0—6—0

---

கைவல்லிய நவநீத மூலமும், துறவு சுவாமிக ளென்னும் ஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிக ளவர்க ளியற்றிய பத சாரம் என்னும் உரையும். 1—0—0

☞ "லோகோபகாரி" ஆபீசு,
கோமளீசுவரன் பேட்டை,
சென்னை.

சற்குருப்யோ நம:





வேத பாஹ்ய அவைதிக பாசு பத தாந்திரிக

துவைத சைவ துர்வாதியாகிய

காரைக்குடி அறுபத்து மூவர் மடச்

சொக்கலிங்கச் செட்டியாருக்குச்

# சூட்டுக் கோற் புச்சம்.



(இதில் பல வேதாந்திகள் எழுதிய 21 நோட்டீஸ்கள் அடங்கி யிருக்கின்றன.)

சென்னை, சோமனேசுவரன் பேட்டை,

சச்சிதாநந்தம்பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1919.

உ

சிவமயம்.

# காரைக்குடி அறுபத்து மூவர் மடச் சொக்க லிங்கச் செட்டியாரும், விஷ்ணு நிந்தை பெரியார் நிந்தையும்.



இவர் விநாயகர் புராணத்துத் தூர்வை யாசகப் படலமென்று பெயரிட்டு அச்சிட்டு வெளியிட்ட புஸ்தகத்தில், கோவிலூர் ஆண்டவரென்னும் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைப் பலவாறு தூஷணமாக எழுதி யிருத்தலின், காரைக்குடி மூ. கு. சித. குடும்பத்தாரையும் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தாரையும் நிந்தித்தவ ராகின்றார்.

துறவு ஸ்வாமிக ளென்னும் ஸ்ரீ அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிகளையும், கருணாநிதியென்னும் ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளையும் தூஷித்திருத்தலின், தேவி கோட்டை பிச. அரு. அரு. குடும்பத்தாரையும், வி. சித. குடும்பத்தாரையும், இலுப்பைக் குடிக் கோவில் நகரத்தாரையும் நிந்தித்தவ ராகின்றார்.

ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிக ளென்னும் லோக குரு ஸ்வாமிகளைப் பலவாறு தூஷித் திருக்கின்றமையின், பிராமணர்க ளெல்லோரையும் நிந்தித்தவ ராகின்றார்.

பெரியோர்களைப் பரிபூரண மடைந்தவுடன் சமாதி வைக்காது காலிற் புரி கட்டி யிழுத்து முச் சந்தியிற் போடவேண்டுமென்று நிந்திக்கின்றார்.

ஸ்ரீ விஷ்ணு பகவான் நிந்தை மிகுதியாகச் செய்திருத்தலின், காரைக்குடியில் வேங்கடாசல பதியைக் குல தெய்வமாகக் கொண்ட நகரத்தாரையும், அரியக்குடி நகரத்தாரையும், நிந்தித்தவ ராகின்றார்.

வேத நிந்தை, பிராமண நிந்தை, வேதாந்த நிந்தை முதலியன பலவுள்ளன.

இவை யாவும் நியாயந்தானோ வென்று இதைக் கண்ணுறும் நகரத்தார்களனைவரும் உணர்ந்து அவரது யோக்கியதையைத் தெளிவாக அறிவார்களாக!

25—11—17. ☞ சச்சிதாநந்தம்.



உ

கணபதி துணை.

சற்குருப்யோ நம:

# காரைக்குடியி லிருந்து வெளிவரும் 'மனோரஞ்சனி'

என்னும் பத்திரிகையில்

## 'கோவிலூர் உபந்நியாசப் பத்திரிகையின் மேல் கேள்வி'

என்று தலை முடி சூடிக்கொண்டு
காரைத் திராவிடன் என்னு மறு பேரைத் திரமாக
இட்டுக் கொண்டு வெளிவர வறியாது ஒட்டிக் கொண்டு வெளிவந்த
காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரது

# புரட்டுக் கடாவை விரட்டும் விடை.

---

ஓ காரைத் திராவிடரே! நீர் என் பேரைப் புரட்டத் தலைப்பட்டீர்? உம்மால் ஒட்டப்பட்ட கடிதம் பசையின்மையால் சற்றே பறந்து வொழிய உமது உள்ள பெயரை உலகத்தாருக்கு அது வெளியாக்கி விட்டதே. ஒட்டுப் பெயர் உமக்கு ஒட்டாப் பெய ராயிற்றே. ஒரு சிறு கடிதப் பற்றை நம்பி யிவ்வித காலாகோலத்துக்கு நீர் ஆளாகலாமா? பரிதாபம்! உம்மால் வினவப்பட்ட வினா வடங்கிய வியாசம் இராக்ஷஸஸ்ஹு ஐப்பசிமீ 14உயில் நாகபட்டணம் செந்தமிழ்ச் செல்வி யென்னும் பத்திரிகையிலே ஓர் உலக உபகாரி என்பவரால், முன்னொரு முறை பிரசுரிக்கப்பட் டிருக்கிறதே! நீர் ஏன் அவ் வுலக உபகாரி வியாஸத்தைத் திருடத் தலைப்பட்டீர். இதனால் உம்மிடத்துப் புரட்டுத் தொழிலோடு திருட்டுத் தொழிலும் புகுத லாயிற்றே! நீரே அவ் வுலக உபகாரி யென்பீரேல், ஒரே விஷயத்தைப் பல பத்திரிகையில் வெளியிட நேரின், ஒரே பெயரை யன்றோ கீழே கைச் சாத்தாக இடுதல் மரபு. அவ்வாறின்றி 'செந்தமிழ்ச் செல்வி' பத்திரிகை யில் உலக உபகாரி யென்றும், காரைக்குடியிலிருந்து வெளிவரும் பிங்கள ஹு மார்கழிமீ மனோரஞ்சனிப் பத்திரிகையில் காரைத் திராவிடன் என்றும் மாறுகொள வரையலாமா? இதனால் மாறுகொளக் கூற லென்னுங் குற்றம் நுமது தலையிற் றங்கலாயிற்றே! இந்தத் திருட்டுக்கும் புரட்டுக்கும் இடையில் வேதாகம புராணேதி காசாதி சகல சாஸ்திரப் பண்டித னென்றும், சுத்தாத்வைத சைவ சித்தாந்த சிகாமணி யென்றும், உண்மை யுரைப் போனென்றும், நல்லொழுக்க நயந்தோனென்றும், ஸ்ரீ வன்றொண்ட ரவர்கள் மாணாக்கர் என்றும், பலவித பெயர்களை யிரவல் வாங்கத் தலைப்பட்

டீர். இஃதென்ன விபரீதம் ! அத்தகைய பெறுதற்கரிய பெரிய பெயர்களை நீர் வகிக்க அநேக அரிய தவஞ் செய்தாலும் அவை யுமக்கு அடுக்குமா ? ஒருவாற்றானும் அடாது ! ஒரு போதும் அடாது !

" இல்லை ! இல்லை ! நான் பெயரை யிரவல் பெறவில்லை. அவர் தான் நான் நான் தான் உலக உபகாரி, நான் தான் ராம. செ. சொக்கலிங்கச் செட்டியார். வயோதிகப் பருவ வலியால் இவ்விதப் புரட்டுத் தொழிலுக் கும் திருட்டுத் தொழிலுக்கும் என் மனம் புகுத லாயிற்று. பெயரைப் பற் றியேன் இவ்வளவு விவகாரம் " என்பீரேல், நமது பெயரை யொரு நெறிப்பட எழுத அறியாத நீவி ரன்றோ? பிறர்பா லிலக்கணக் குற்றங் கற் பிக்க எழுபவர் ? இவ்விதப் புரட்டுத் தொழிலுக்கு விதி யெந்த இலக்கண நூலில் வரையப்பட்டிருக்கிறது. நூற்புரட்டு, சரித்திரப் புரட்டு, மதப் புரட்டு, மதாசாரியர் புரட்டு, முதலிய பல புரட்டும் செய்துழல்வது போதா மல், இப்போது பெயரைப் புரட்டற்கும், நீவிர் ஆளானீர். நமது புன் செய்கை நன்று ! நன்று !! இதனால் உமது புரட்டுத் தொழில் வெளியான தாலே இனி உம்மைக் காணும் பள்ளிச் சிறுரும் " ஓ ! பேரைப் புரட் டும் காரைத் திராவிடரே !' என்று எள்ளி நகைப்பா ரன்றோ ? இன்னும் அரசாங்கத்தாரால் விதிக்கப்பட்ட பெயர் மாருட்டம் என்னும் குற்றமும் உமது தலையில் வந்து விடியுமன்றோ ? " கோவிலூர் உபந்நியாசப் பத் திரிகையின் மேல் கேள்வி " என்ற அளவிலே, உமது கேள்வி, பத்திரி கையின் மேற் சென்றதே யொழிய, கோவிலூர் உபந்நியாசத்தின் மேற் செல்லவில்லையே ! உபந்நியாசத்தின்மேற் செல்லின் உபந்நியாசகர்க ளெல்லாம் பிரபல பண்டித சிகாமணிகளாகிய சாஸ்திரியார்களும் சாதுக்களும் ஆவார்களே ! அவர்கள் நமது புரட்டுக் கடாவைச் சும்மாவா விடுவார்கள்? அப்பெரியோர்கள் பிரபல சுருதிப் பிரமாணங்களாகியகுட்டுக் கோலாற் குடிட்டுத்,தருக்க யுக்திகளாகிய தாற்றுக்கோலாற் தாறிட்டு,அநு பவமாகிய சாட்டை வாரால் புரட்டிப் புரட்டி ஓங்கி யோங்கி யடிக்கு மடி யில் உமது புரட்டுக் கடா விரட்டப்பட்டு, புண் பட்டுக், குத்துப் பட்டுப் பொறி கலங்கி,நெறி மயங்கிப் புகுமிட மறியாது புலம்பித் தவிக்கத் தக்கவ ராவீர். அந்தோ ! பரிதாபம். இத்தகைய புரட்டுக் கடாவால் நமக்குப் பொருந்தும் பயன் யாது ? உபந்நியாசப் பத்திரிகை யிப்போதுதான் கிடை த்த தென்றீரே! நீரே உண்மை யுரைப்போர்! இதே விஷயத்தைச் சென்ற ஈராண்டுக்கு முன் செந்தமிழ்ச் செல்வி யென்னும் பத்திரிகையில் வெளி யிட்டபோது, " இப்போது தான் ஷை பத்திரிகையைப் பார்க்க நேர்ந்தது என்றீர்" இவ்வருடம் "மனோ ரஞ்சனி" என்னும் பத்திரிகையில் வெளி யிட்ட காலையில் " இப்போது தான் ஷை பத்திரிகை கிடைத்தது என்றீர். சென்ற காலத்தையும் இப்போது என்றீர். நிகழ் காலத்தையும் இப்போ தென்றீர். நீர் பத்திரிகையை வாசித்தது இராக்ஷஸ வருடத்தில் ஆனல் அது உமக்குக் கிடைத்தது இந்த வருடத்தில் ! இந்தக் கால வேற்றுமை யும்மை யடைந்ததற்கு எந்த இலக்கண நூலில் விதி கூறுகின்றது. உமது

கால பலன் சரியா யில்லை ! அமைக. இவ் வருடம் உமக்குக் கிடைத்த பத்திரிகையில் நீர் கூறிய இலக்கண வழுப் பிரயோக முள்ள வாக்கியமே காணப்பட வில்லையே. உமக்கு மதவாதஞ் சேட்டித்து, சமய பித்தந் தலைக் கேறி சாத்திர வையம் மேலிட்டதால் உமது பெயரை யெழுதவும், விஷயத்தை வெளியிடவும், வகை யறியாது, தட்டுக் கெட்டுத் தலைதடுமாறுகிறீர். கூடிய சீக்கிரத்தில் அம்முழுத்தோடங்கள்நீங்கத் தக்க கண்டன வௌஷதிகளைப் பண்டித சிகாமணிகள் கொடுக்கப் பெற்றுய்வீர். அவ்வௌஷதம் பெறுஞ் சுப திநத்தைப் பிரார்த்தித் தமைக !

நீர் உபந்நியாசப் பத்திரிகையி லுள்ள விஷயத்திற் சென்று ஆராய்ந்து, "தாங்கள் உபந்நியசிப்பிக்கும் உபந்நியாசமானது பலன் பெறுவா ரில்லாத கோலாகலமே யன்றி வேறு யாது ? அதில் யாருக்கு என்ன பலன் ? இதற்கு விடை தந்தருளத் தங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று முடிவுரை கூறி யிறைஞ்சினீர். நீர் வயோதிகரா யிருப்பதாலும், மிகவும் மன்றாடிக் கேட்பதாலும், உமக்கு விடை தந்தருள வேண்டுவது அவஸியமே யாம். கோவிலூர் ஸ்ரீதிருநெல்லை நாயகியார் ஆடிப்பூர மகோற்சவங் கொண்டாடக் காத்தில் கங்கணம் பூணுஞ் சுபதிநத்தன்றே, அவ்வம்மையாரின் திருவருட் செல்வராகிய ஸ்ரீ ஆண்டவரது வேதாந்த மடாலயக் கட்டடத்தின் சந்நிதாநத்திலே, நிறுவப் பெற்றுள்ள "பிரமவித்தியாப் பிரசாரணி" என்னும் பெயரினையுடைய சபாநாயகியாரும், உபந்நியாச மகோற்சவங் கொண்டாடத் தமது திருக்காத்திலே, கங்கணங் கட்டிக்கொண்டு, பனிரண்டு திநம் வரையில் ஆங்குக் குழுமிய பக்த கோடிகள் கேட் டானந்திக்கும் வண்ணம், பிரம வித்தியா சம்பந்தமான பற்பல பிரசங்கக் காட்சிகளைத் தந்தருளி வருகிறார் என்பது உலகப் பிரசித்தமே யாம்.

நீரோ, தூரத்தி லிருப்பவர் போலும், ஒன்று மறியாதவர் போலும், 'உமது பிரசங்கத்தைக் கேட்பவர் யார் ? அவர் சொரூபத்தைச் சொல்லும்' என்றீர். "உன்னை நீ யறிவா யாகி லுனக்கொரு கேடுமில்லை" என்று பெரியோர் பணித்தவாறு, உமது சொரூபத்தை யுள்ளவா றுணர்ந்திருப்பீராயின், கேட்பவர் சொரூபத்தை யாம் சொன்ன லுமக்கு அது பஞ்சுத் துய்யில் நெருப்பு பற்றியதுபோ லுடனே பற்றும். உமது சொரூப நிச்சயந்தான் உமக்குச் சூநியமாயிற்றே ! அப்படி யிருக்க; உமக்குச் சொல்லின் அது விழலுக்கிறைத்த நீர் போல் வீணாகுமன்றோ? என்றாலும் ஒருவாறு சொல்லக் கேளும். இவ்வருடம் மகோற்சவ காலத்திலே தேவிகோட்டை ஜமீன்தார் ஸ்ரீமான் அள. அரு. அருணாசலம் செட்டியாரவர்களும், மேற்படி யூர் டிப்டி கலெக்டர் ராய்பகதூர் ஸ்ரீமான் T. N. சிவஞாநம் பிள்ளை யவர்களும், இன்னும் பற்பல பிரபல வித்தியா விநோதர்களும் விஜயஞ் செய்திருந்த காலையில், எங்கள் பரம்பரை, வேதாந்த பாஸ்காரும், நியாயச்சந்திரரும் ஆகிய ஸ்ரீ வீர. கட்டையசுவாமி யவர்கள் ஈஸ்வர பக்தி யென்னும் விஷயத்தைப் பற்றி, மிக அழகாகவும் இனி

மையாகவும், விரிவாகவும், சுருதி யுக்தி யநுபவ சம்மதமாகவும், பண்டிதர் பாமரர் முதலிய பலரும் கேட்டுச், சிரக் கம்பமும், கரகோஷமுஞ் செய்து ஆநந்தங் கொள்ளும்படியாகவும், ஓர் அற்புத உபந்நியாசம் புரிந்தார்கள் என்பது யாவரும் உணர்வர். அப்போது கண்ணியமும் புண்ணியமும் நிறைந்த அவ்வதிகார புருஷர்கள், "ஓ சுவாமிகளே! நீங்கள் தாம், ஈஸ்வரனில்லை, சகத்தில்லை, சீவனில்லை" என்று சொல்லுபவர்களாயிற்றே! அவ்வாறிருக்க, ஈஸ்வர பக்தியைப் பற்றி நீங்களுபந்நியசிப்பது எவ்வாறு பொருந்தும்?" என்று அந்தச் சுவாமிகளை ஏன் கேட்கக் கூடாது? நும்போன்ற நுண்ணுணர்வு அவர்களுக் கில்லைபோலும். அவர்களவ்வாறு வினாவி யிருப்பின், அதற்சேற்ற விடையை அச்சமயம் அந்தச் சுவாமிகள், அவர்கள் மனத்திற்குப் பொருந்தும் வண்ணங் கூறி யிருப்பார்கள். நீர் பெற்ற செல்வமும், கல்வியும், அதிகாரமும் அவர்கள் பெறவில்லைபோலும். உம்மைப்போல், பொய்யும், புரட்டும், புனைசுருட்டும் பொருந்திய வுலுத்த குணமுள்ளவர்களா அப் புண்ணிய சிலர்கள்? அவர்கள் கல்வியை நல்லாசிரியர்பால் வரன் முறையாகக் கற்று வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களின் தாரதன்மியத்தையும், அந்தரங்கத்தையும், கசடறத் தெளிந்து, வித்யா பூஷணம் பூண்டு, விளங்கும் உத்தமப் பிரபு சிகாமணிகளெனப் பல்லோராலுங் கொண்டாடப் பெறும், பாக்கியமுற்ற பெருந்தகையாளர்களன்றோ? இவ்வாறு ஜமீன்தார்களும், கலெக்டர் முதலிய அதிகார புருஷோத்தமர்களும், மற்றும் எவ்வளவோ சாஸ்திரிகளும், நகரத்தார்களும், சாதுக்களும், பிறரும், ஒவ்வொரு வருடமும் எமது சபைக்கு விஜயஞ்செய்து, ஆங்கு நடைபெறும் உபந்நியாசங்களைக் கேட்டுப் பலவித ஆசிமொழிகூறி யானந்த பரவச மடைந்து வருகிறார்களென்பது அவ்வவ்வருடத்தில் வெளியிடப்பெறும் எமது சபையின் அறிக்கைப் பத்திரத்தால் நன்கு விளங்கும். அவ்வாறிருக்க, உபந்நியாசம் நடைபெறு மிடமாகிய இக் கோயிலூருக்கு ஒரு மைல் தூரத்திலே நீவிர் குடியிருந்தும், எமது உபந்நியாசங்களைக் கேட்டுப் பயன்பெறத் தக்க ஆகூழ் வலியின்றிப் போகூழ் வலியின் புணர்ப்பினாலே இவ்விடம் வருவதற்குக் காலில்லாத முடவரும், மகோற்சவக் காட்சிகளைக் கண்டு களிக்கக் கண்ணில்லாத குருடரும், உபந்யாச மொழிகளைக் கேட்கத் தக்க செவியில்லாத செவிடரும், உபந்நியாசங் கேட்ட பாவாணர்கள் பல்லோரும் பற்பல பாடல்களால் பலவாறு புகழ்ந்து கொண்டாடுவதைப் போல் புகழ்ந்துகூறத் தக்க வாயில்லாத ஊமையும், நீவிரானீரே என்பதைக் குறித்து மிகவும் விசனிக்கின்றோம். பற்பல நகரத்தார்களும் நீண்ட தூரத்தி லிருந்தும் வந்து கேட் டானந்திக்கிறார்கள். நீரோ ஒரு மைல் தூரத்திலிருந்தும், வந்து கேட்டற்கு உமக் கிடங்கொடாத உம்முடைய ஊழ், போகூழ் என்பதற்கு வேறு பிரமாணம் வேண்டுமோ? இதுவே போதிய சான்றாம். 'தண்டா மரையி னுடன் பிறந்தே தண்டே னுகரா மண்டூகம்' என்ற பெரியார் வாக்கிற்கு நீரே சரியானீர். அந்தோ! நுமது போகூழ்வலி போனவா றென்னே!

வேத வேதாந்தங்களி னுண்மையை யுணர்ந்து, அவ்வழியி லுறைந்து நின்று ஆனந்த மயமாகிய மோக்ஷத்தை அனைவரும் அடையும் வண்ணம், எம்முடைய குலமணியா யவதரித்து, இளமையிலேயே சற்குருவை யடைந்து, அவருக் கிடையறுத் தொண்டு பூண்டு, வித்தையை விதிப்படி பயின்று, அது கூறிய அடக்கம், அன்பு, அருள், வாய்மை, வயிராக்கியம் முதலிய உத்தம குணங்களை யுற்று, சாதந சதுஷ்டயங் கைவரப்பெற்று, தேக சுதந்தரம், போக சுதந்தரம், ஜீவ சுதந்தரம் முதலிய யாவற்றையுஞ் சர்வ சுதந்தரமாகத் தன்னை யாட்கொண்ட குருபரனுக்குத் தத்தஞ் செய்து விட்டு, துறவொழுக்கம் பூண்டு, ஒப்புயர்வற்ற ஆனந்த பூரணராய் சுவாநுபூதி மகானுபாவராய் விளங்கும், பரம கருணாநிதியாகிய ஓர் ஞானாசிரியர் உமது அருகே ஒரு மைல் தூரத்தி லெழுந்தருளி யிருந்து தம்மை யடைந்த பக்குவர்களுக்கு ஞானாநுக்கிரகம் செய்து கொண்டிருக்க, அப்புண்ணியசீலரை வழிபட்டு நும தையத்தைப் போக்கிக் கொள்ளக் கருதாது தான்தோன்றித் தம்பிரானாய் தமிழிலுள்ள சிற்சில இலக்கண இலக்கியங்களைக் கற்ற மாத்திரத்திலே யிறுமாப்புற்று, பிரமம், கூடஸ்தன், ஈசுவரன், ஜீவன், செகத்து, என்பனவற்றின் பொருள்களைக் கண்டவர்போல், பலவாறு பிதற்றலானீர். நீர் இவ்வாறு கண்ட கண்ட விடங்களிலெல்லாம் பிதற்றிக்கொண்டு திரிதலை யுணர்ந்தே, ஒவ்வொரு வருடத்தும் இவ்வூர் உற்சவப் பத்திரிகையிலும், உபந்நியாசப் பத்திரிகையிலும், "ஐயமிருப்பவர்கள் வந்து கேட்கும் சாஸ்திர விஷயமான கேள்விகளுக்குந் தக்க உத்தரங் கூறப்படும்" என்றும் வெளியிட்டிருக்கின்றோம். இஃதிங்ஙனமாக, பத்திரிகை வாயிலாக ஆத்ம ஞானத்தை யடையப் பார்க்கிறீர் நீர். பன்னிரண்டு வருடம் ஞானாசாரியர் பாதத்தைக் காத்தவருக்கும் விளங்குதற்கரிய பிரம ஞானம், உமக்குப் பத்திரிகை வாயிலாகவா விளங்கும்?

"சூரியனே பொந்துக்குள் நுழைந்து விட்டான். வெளியில் வர வழி தேரிய வில்லையென்று ஓங்கி, அதற்காக வெளிச்சங் காட்டுகிறவர்கள், சாஸ்திரிகளும், சாதுக்களுமாகக் காட்டுவிக்கிறவர்கள் தாங்களுமா யல்லவோ முடிந்தீர்கள்" என்று பிதற்றுகிறீர். உம்மைப்போல், "பெயர் வெளிப்பட்டால் பெருமோசமாகும்" என்று பயந்து பத்திரிகையில்கூட நேராய் எதிர்த்துநின்று வாதம் புரிய முன்வர ஆற்றாது, ஒட்டுப்பெயரை யொட்டிக் கொண்டு, வெளிவருபவர் யாங்களல்லர் என்பது உலகத்தார் அறிந்த விஷயமேயாம். ஆயிரக் கணக்கான பொருளைச் செலவிட்டு, பல தூரத்திலிருந்து பற்பல பண்டித சிகாமணிகளை வரவழைத்து, பல்லாயிரஞ் சனங்கள் மத்தியில், ஒவ்வொரு வருடமும் பன்னிரண்டு தினம் வரையில், எமது மத சித்தாந்தத்தை வெளியிட்டு வருகிறோமென்பது நகரத்தார்களும் பிறரும் அறிந்ததேயாம். இஃதிவ்வாறு பிரசித்தமா யிருக்க, யாங்கள் பொந்துக்குள் ளிருந்து கைகாட்டுகிறோமா? நீர் கடிதத்தைத்மேலே யொட்டிக்கொண்டு ஒளிந்து சந்துக்குள் ளிருந்து கைகாட்டுகிறீரா? இதனை நீரே யுற்றுநோக்கி யொரு நெறி யடைவீராக! வேத சம்பந்தமான அத்து

வித மதத்தின் கோட்பாடுகளை யுள்ளவா றுணர்ந்துரை யாடாது, திரிபுணர்ச்சிகொண்டு, வேதாந்திகள் ' சுப்பிரமணியில்லை, செகத்தில்லை, சீவனில்லை, பாவ புண்யமில்லை, சுவர்க்க நரகமில்லை, பந்த மோக்ஷமில்லை என்று சொல்லுகிறார்கள் என்று ' பற்பல புரட்டுப் பத்திரிகைகளையும், பொய்ச் சரித்திரங்க ளடங்கிய, பகட்டுப் புத்தகங்களையும் நீர் வெளியாக்கிவிட்டால், ' உலகப் பிரசித்தியுற்ற கோவிலூர் மடாலய சாதுக்களிடத்திலும், வேதாந்திக ளிடத்திலும், நகரத்தார்களும் பிறரும் விருப்பங் குறைவார்கள் ' என்று நீர் எண்ணிய அவல எண்ணம், ஆயிரங்கோடி சென்மமெடுத்து, அக்கினி மத்தியிலே, ஊசி முனையிலே, ஒருவிர லூன்றி நின்று அருந்தவம் புரிந்தாலும், நிறைவேறத் தக்கதன்று என்பது அறிஞர்கள் அறிந்ததேயாம். " மேலே உமது கால பலன் சரியாயில்லை என்று " சுட்டப்பட்டிருக்கிறதன்றோ ? அதனால், நீர் அவலமதி கொண்டெழுதிய " விநாயக புராணத்துள்ள தூர்வை யாசகப் படலம் " என்ற நூலில் உம்மால் புனையப்பட்டுள்ள புரட்டுகள் பலவும் கூடிய சீக்கிரத்தில் புத்தக ரூபமாக வெளிப்படுத்தப்படும். அதனையுங் கண்டு உம தவல மதிக் கிரங்கி மன மழுங்குவீ ராக !

இதனைக் கண்ணுறும் நகரத்தார் முதலிய யாவரும், அப்புத்தகத்தையும் இனமாகப் பெற்று வாசித்து, இவரது திருட்டுத் தொழிலையும், புரட்டுத் தொழிலையும் தெளிவாகக் கண்டு இவருக்கு இடித்திடித்துப் புத்தி புகட்டுவார்களென, எமது ஆண்டவ னென்னும் ஸ்ரீ முத்து ராமலிங்க ஞாந தேசிக சுவாமிகளின் திருவடிக் கமலங்களைச் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேம்.

பிங்களஞு
பங்குனிமீ 14உ

இங்ஙனம்,
காரியதரிசி,
பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபை,
கோவிலூர்.



காரைக்குடி

ஸ்ரீமத் ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்கள்

செய்துள்ள

# பலபுரட்டுப் பிரபல புரட்டு.

கோத்தமங்கலம்

## (தநவைசியனது தப்பபிப்பிராயத்தைத் தண்டித்தல்.)

அறிவிற் சிறந்த அன்பர்காள் ! நகர வைசிய நண்பர்காள் !!

காரைக்குடி, ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார் என்பார், பற்பல சற்குணங்களும் நிறைந்த மகா வுத்தம ரென்றும், அற்பமுங் குற்றமற்ற அவரிடத்து இல்லாத புரட்டுத் திருட்டு முதலிய சில ஈன குணங்களைக் கற்பித்து, யாம் புரட்டுப் பத்திரிகை வெளியிட்டிருக்கின்றோமென்றும்' கொத்த மங்கலம்—தந வைசியன் என்னும் பெயர் பூண்ட ஓர் நண்பர் "சைவ பாம்பரைத் தந வைசிய நகரத்தார்களுக்கு விஞ்ஞாபனம்" என்ற பெயரை யுடைய பத்திரிகை யொன்று வெளியிட் டிருப்பதாகக் காணப்படுகிறது.

இவர் மேற்படி செட்டியா ரிடத்துத் தனக்குள்ள அபிமானத்தா லவரைப் புகழ முன் வந்து, "கணைகொடி தியாழ்கோடு செவ்விதாங் கன்ன, வினைபடு பாலாற் கொளல்." என்ற தேவர் திருவாக்கை யறியு மியல்பிலராய், எம்மிடத்தில்லாத பல வீன குணங்களையுங் கற்பித்து, உண்மை யறியாத அறிவிலி யெனத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். "பானை சோற்றுக்குப் பதம் ஒன்று" என்னும் பழமொழிக் கிணங்க, இந் நண்பருக்கு, அச் செட்டியார் செய் துள்ள புரட்டுகள் பலவற்றுள், உலக மறிந்த ஒன்றை உள்ளவாறு இதனடியி லெடுத்துக் காட்டி, உண்மை யுணர்த்தி அறி வுறுத்தி இவர் கொண்ட தப் பபிப்பிராயத்தைத் தகர்த் தொழிப்பாம்.

ஓ தந வைசியரே ! நன்றாய்க் கவனியும். நீவிர் கசடறக் கற்றவராயிற்றே. உல கெங்கும் புகழும் எமது பரம ஞானசாரியாராகிய, கோவிலூர் ஆண்டவர் என வழங்கும் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகளின் "சுவாநுபவத் திரு வாக்கு" என்னும் நூலில்,

"வானாடர் மணம்பொருந்தும் வாழ்வு நினையாதே மண்ணுடர் பதியடையும் வாழ்க்கை நினையாதே, நானுனென் றில்வாழ்வில் நண்ணியுழலாதே நாலிரண்டு சமயநெறி நாடியலை யாதே, ஆனாலும் அத்துவித நிலை

ஷ்யமற வாதே அகம்புறமும் ஒருருவை யன்றியுண ராதே, தேனுடுங் காவின்மலர்த் தேனூறு பாயுந் தென்கழனித் திருநெல்லை யின்பாத நாடே" என்ற திரு நெல்லை யம்மை ஸ்தோத்திர ரூபமாகிய இத் திரு விருத்தமும், ஒன்று.

"ஒளியப் போய்த் தலையாரி வீட்டில் ஒளிந்தான்" என்னும் முது மொழிக் கிணங்க, நீர் புகழத் தலைப்பட்ட மகா வுத்தம குண சிகாமணியா கிய செட்டியார் தாம் வெளியிட்டுள்ள 'வேதாந்தம்' என்னும் ஓர் சிறு ஆபாசச் சுவடி யீற்றிற் பதினேழாம் பக்கத்திலே, வேதாந்த நெறி யொழு குங் கோவிலூர் மடாலய சாதுக்களை மாயா வாதியரென்று கூறி, அவர் கள் கொள்கையைக் கண்டிக்கத் தலையிட்டு அதற்கு மேற்கோள் தடவிப் பார்த்துப் பரமாத்வைத சித்தாந்தம் நிலைநிறுத்தப் பெற்ற இத் திருப் பாட லிலே, "நானுனென் றில்வாழ்வில் நண்ணியுழ லாதே" என்ற பாகத்தை "நாம் பிரமம் என்று சொல்லி நண்ணியுழ லாதே" என்று அவல மதி கொண்டு புரட்டி யச்சிட்டு வெளியிட் டிருக்கிறார். இவர் இவ்வாறு செய் தது, உண்மை யுணராது அவசரப் புத்தி கொண்டு நடுநிலை தவறி வெளிக் கிளம்பிய நும்போன்றவரை யேமாற்றவா? அல்லது வேதாந்திகளை யேமாற்றவா? அவ்விரு நூற்களையும் ஒப்பிட்டுப் பார்த்து, உண்மை யுணர் ந்து, உமது செட்டியாரின் வஞ்சச்செயலை நெஞ்சாரக் கண்டு, அவரது புரட் டேத்தை நாறும் பெருவாயை யடக்கி யொழுகுவீராக!

நீர் எம்பால் வீணே சுட்டிய பல புரட்டில், ஸ்ரீ ஆண்டவரது அநுப வாமிர்த அருள்வாக்கையே புரட்டி யச்சிட வெளிவந்த மகா பாவியினும் பாவியாகிய நுமது சற்குணச் செட்டியார் செய்துள்ள இந்த அண்டப் புர ட்டை யெந்தப் புரட்டி லிணைக்கக் கருதுகிறீர்? எழுத்துப் புரட்டிலா? சொற் புரட்டிலா? வாக்கியப் புரட்டிலா? சாஸ்திரப் புரட்டிலா? நீர் காட் டிய எல்லாப் புரட்டும், இந்த ஒரு புரட்டிலேயே யடங்கத் தக்கதாய், நும் மையும் நீர் புகழத் தலையிட்ட செட்டியார் தம்மையும், இம்மையினும் மறு மையினுந் துன்பப் படுகுழியில் வீழ்த்தத் தக்க பெரும் புரட்டாமே யிது. 'புலந்தரு நூலி னில்லாப் பொருளினைக் கூறுவானும்' அவனைப் பெரிதும் புகழ்ந்து கொண்டாடுவானும், மிக்க இழிந்த குலத்தவ ராவா ரென்று முன் னோர் நூல் பல முறையிடுகின்றன. இது பற்றியே 'நலத்தின்கண் ணாரி ன்மை தோன்றினவனைக், குலத்தின்க ணையப் படும்' என்ற பொய்யா மொழியு மெழுந்தது. நீரோ தந வைசிய ரெனப் பெயர்கட்டிக்கொண்டு வெளிவந்திருக்கிறீர். 'அரச மரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் பிடித்தது' என்னும் பழ மொழிக்கு உமது தலைவிதி யிலக்கானதைக் குறி த்து விசனிக்கின்றேம். புரட்டுந் திருட்டும் யாரிடத்துள்ளன என இதனை லேனுந் தெரிந்துகொண்டீரா? இவ்வாறே உமது செட்டியாரது புரட்டுக் களை யெல்லாந் திரட்டி எழுதப்புகின் அது பெரும் புராணமாக விரியுமே.

நூர்வை யாசகப் படல மென்ற நூலில் உமது சற்குண சிகாமணி யாகிய செட்டியார் செய் துள்ள புரட்டுகள் பலவற்றையும் 'நூர்வை யா சகப் படல ஆராய்ச்சி' என்று எம்மால் வெளிப் படுத்தப் பட்டிருக்கும் நூலினைப் பெற்று, நடுநிலையின் ஞராய்ந் தறிந்து, 'இவ்வாறு புரட்டு நூற் களை வெளியிட்டு நமது மதத்தை வளர்த்தல் ஒரு பிழைப்பாமா?' என்று நீர் புகழத் தலையிட்ட செட்டியாருக் கிடித் துரைத்து, இனியேனும் பெரி யாரை யிகழத் தலை நீட்டாது பெட்டிப்பாம் பென அடங்கி யொழுகுவீ ராக!

ஓ! கசடறக் கற்றவரே! பெயர் எழுதத் தெரியா தென்ற எமக்கு, அத னைக் கசடற வெழுதுவ திவ்வாறென் றுயினும் விளக்கினீரா? 'விரட்டு' என்ற சொல், நமது நகரங்களில், 'மஞ்சு விரட்டு' என்று சிறுவர்களும் வழங்கக் காணும்படி யிருக்க, அஃதொரு தமிழ்ச் சொல் லன்று என்று புரட்டுகிறீரே! அதனால் நீர் சொற்புரட்டர் என்னும் பட்டஞ் சூடப் பார்க் கிறீர். இதனைப் பற்றி விரிக்க இப்பத்திரிகை யிடந்தரா தாதலின் பின் னொருமுறை விவகரிப்பாம். எமது கல்வி யறிவையும், நுமது செட்டி யார் கல்வி யறிவையும் பற்றி, உம்மூர்க் கும்பாபிஷேகப் பத்திரிகை வரலாற்றை மகா-ள-ள-ஸ்ரீ உமது நகரவைசிய பிரபுக்கள் கூறக் கேட்டு நன்கு தெளிவீராக? உண்மை யுணராது பக்க வாதங் கொண்டு நீர் சிற்றறிவின் மேலீட்டால் எம்மைத் தூற்றிய பல வசைமொழித் திமிரம் இவ் வுண்மை விளக்கத்தாற் றிசைகெட் டோடு மெனத் தெரிந் தடங்குவீராக!

நகர வைசிய பிரபுக்களே! நம்மவர்கள் இன்றும் நியமமாகப் பாராயண ஞ் செய்து வரும், நமது ஆண்டவர் சுவாநுபவந் திரு வாக்கையே இவ் வாறு புரட்டி யெழுதி யச்சிட்டு வெளியிடத் துணிந்த இந்தச் சொக்க லிங் கச் செட்டியாரது வஞ்ச நெஞ்சங் கொஞ்சமும் அஞ்சுமா, பன்னெடுங் காலத்துக்கு முன் னிருந்த சநக மகா ராஜா முதலிய பெரியோர் கொள்கை யைப் புரட்டிக் கூறுவதற்கு? இதனை நீங்களே உற்று நோக்கி இவர்களுக் குச் சற்புத்திகூறுவீர்க ளெனக் கருதுகிறோம்.

இங்ஙனம்,
காரியதரிசி,
☞ பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபை,
கோவிலூர்.

காளயுக்திஸு
வைகாசிமீ 1உ



உ

சிவ மயம்.

ஒரு சற் காரிய தரிசியின்

## மதவாத வலிப்பின்

# திமிர்ப்பை யடக்குந் தண்டம்.

---

*அறிவிற் சிறந்த பெரியோர்களே !*

நமது நாட்டிலுள்ள கோவிலூர் மடாலயமானது பிரம ஞானப் பெரு வள்ளலாகிய ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிக ளவர்களால் சென்ற நூற்றாண்டில் ஸ்தாபிக்கப் பெற்று, அத் திரு வருளாளர் கட்டளை யின் வண்ணமே இந் நாள் வரை அவரது அடியார்களாற் செவ்வனே பரி பாலிக்கப் பெற்றுச் செழித் தோங்கி விளங்குகின்ற தென்பது உலக மறி ந்த விஷயமே யாம். தற்காலம் அம் மடாலயக் கருத்தராய் விளங்கும் ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள் வித்தியாபிவிருத்தி செய் யின் பலவித நன்மை பயப்பதாகும் எனத் திருவுளங் கொண்டு,ஜீவ கருணை மேலீட்டால் சென்ற பிரமாதீச ௵ ஸ்ரீ ஆண்டவர் குருபூஜா சுப தினத் தன்று 'பிரம வித்தியாப் பிரசாரண சபை' என்னும் பெயருடன் ஒரு சபை யை ஸ்தாபித்து, பல வூரி லிருந்தும் பல பண்டிதர்களை வர வழைத்து, அநேக அரிய பெரிய வித்தியா விஷயங்களை யுபந்யசிக்கச் செய்து, அவர் களை யாதரித்து வருகின்றார்க ளென்பதும் யாவரும் உணர்ந்த விஷயமாம்.

இஃதிவ் வண்ணம் பிரஸித்தமா யிருக்க, காரைக்குடி ராம. சொ. சொக்க லிங்கச் செட்டியா ரென்பவர், கோவிலூரையும், அதில் நடை பெறுஞ் சபையையும், அச்சபை சம்பந்தமான பிறவற்றையும் அறியாதவர் போல், "கோவிலூர் உபந்யாசப் பத்திரிகையின் மேற் கேள்வி" என்று ஒரு வியாச மெழுதி, பலவித மாறுபட்ட கையெழுத்துடன் பத்திரிகையில் வெளியிட்டார். அப்புரட் டுரையைக் கண்ட ஷை சபைக் காரிய தரிசியார், "புரட்டுக் கடாவை விரட்டும் விடை" என்ற பெயரை யுடைய ஒரு தனிப் பத்திரிகையை வெளியிட்டார். அந்த அதி கம்பீர விடையா லறை யப்பட்டுப் பல விடத்துங் குத்துண்டு, பல்லோராலும் மொத்துண்டு, மந மழுங்கி யயர்ந்து, இருக்கு மிடந் தெரியாது பதுங்கிக் கிடந்த அப் புரட் டுக் கடா, தற் சூழ்ந்த வருக்கும் தனது புரட்டுத் தொழிலைக் கற்பிக்குங் கருத்தை யுட்கொண்டு, "சற் காரிய தரிசி" என்றவோர் சாமானியனை வெளிக் கிழுத்து விட்டது. இது விந்தையினும் விந்தையே யாம். அச் செட்டியாருக்குப் பிடித்திருந்த மத வாத வலிப்பு, இச் சற் காரிய தரிசிக் கும் ஒட்டிக்கொண்டமையால், அத் துர்நோய்களைத் தவிடு பொடியாக்கும் பரம ஔஷத மெனப் பெரியோர்க ளநுபவித்துக் கைகண்ட இந்தத் தண்

